உ

சாந்தலிங்கர் தாண்மலர் வாழ்க

துறையூர் வீரசைவ ஆதீன நிறுவனர்

அருள்மிகு சிவப்பிரகாசர்

அருளிய

# அத்துவித வெண்பா

உரை விளக்கம்

டாக்டர் ர. வையாபுரி

தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார்
அருளாட்சி வெள்ளி விழா வெளியீடு

தவத்திரு சாந்தலிங்கர் திருமடம்
திருப்பேரூர் கோவை-641010

1992

உ

சாந்தலிங்கர் தாண்மலர் வாழ்க




துறையூர் வீரசைவ ஆதீன நிறுவனர்

அருள்மிகு சிவப்பிரகாசர்

அருளிய

# அத்துவித வெண்பா

உரை விளக்கம்

**டாக்டர் ர. வையாபுரி**

தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார்
அருளாட்சி வெள்ளி விழா வெளியீடு

தவத்திரு சாந்தலிங்கர் திருமடம்
திருப்பேரூர் கோவை-641010

1992



பேரூராதீனம் கயிலை மாமுனிவர்

**தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார்**

**அத்துவித வெண்பா**

*முதல் பதிப்பு செப்டம்பர் 1992*

**விலை ரூ. 25-00**

**வெளியீடு**

*தவத்திரு சாந்தலிங்கர் திருமடம்*
*பேரூர்*
*கோவை 641 010*

*கதிரவன் அச்சகம்,*
*14, டாக்டர் முத்துலட்சுமி சாலை*
*சென்னை 600 041*

*தொ.பே.: 419801*



இளைய பட்டம்

தவத்திரு மருதாசல சுவாமிகள்

துறையூர்

வீரசைவ ஆதீன நிறுவனர்

அருள்மிகு சிவப்பிரகாசர்

அருளிய

# அத்துவித வெண்பா

**அன்பளிப்பு :**

உ
குரு துணை
**தஞ்சாவூர்**
**நடராஜபிள்ளை உலகநாதன் M.A.B.T.**

**பேரூர் ஆதீனம் கயிலைப் புனிதர்**

# தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளாரின்

## அருளாசி

சீர் வளர் சீர் சாந்தலிங்க சுவாமிகள் நம் திருமடத்தின் ஆதிகுரு முதல்வர். கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் வீரசைவத் தலைமாமணியாய் விளங்கி அரியபல தத்துவ உண்மைகளை வாழ்வியலிற் கடைப்பிடித்து ஒழுகியும், மக்களையெல்லாம் நன்னெறியிற் பயிற்றுவித்தும் இவ்வாறு சமயத் தொண்டையும் சமுதாயத் தொண்டையும் இணைத்துச் செய்து, வரலாற்றுக் குருமகானாக விளங்கிவந்த நம் சுவாமிகள் உலக மக்கள் முன்னேற்றத்துக்காகவும், பல்வேறு மாறுபட்ட தத்துவக் கொள்கைகளின் மருவி உயர்ந்த சமரசமாகவும் மறுத்துக் கடந்த சுத்தமாகவும் வழங்கி யருளிய கொள்கையே **அவிரோதம்** என்பது.

உலகத் தத்துவ விற்பன்னர்களும் வியக்கும் அவிரோதக் கொள்கையை உலகுக்கு வழங்கிய நம் சுவாமிகள் அக்கொள்கையை விளக்கும் வகையில் நான்கு அரிய நூல்களை அருளியுள்ளார்கள். அவை முறையே **கொலை மறுத்தல், வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோத உந்தியார்** என்பன.

உலகமே வியந்து பாராட்டவும் உண்மைத் தத்துவம் என ஏற்கவும் ஆம் வியத்தகு — செயல் வடிவ விளக்க மாகும் அவிரோதத்தை உலகுக்கு வழங்கிய நம் ஆதீனக்குரு

முதல்வரின் குருவாக விளங்கிய துறையூர்ச் சிவப்பிரகாச சுவாமிகள் அருளிய நூலே **அத்துவித வெண்பா** எனும் இந்நூல்.

பொது, உண்மை என இரு பிரிவுகளாக, 411 வெண்பாக்களைக் கொண்டு விளங்கும் இந்நூல் சிவ சம்பந்தமே சைவம் என்றும் அதனை அகத்தும் புறத்தும் உறுதல் வேண்டும் என்றும் தொடங்கி, வீரசைவத் தத்துவ உண்மைகளை அழகுற எடுத்துத் தெரிவிக்கும் நூலாக அமைந்துள்ளது.

பல கொள்கைகளின் இணைப்புப் பாலமாக விளங்கிய துறையூர்ச் சிவப்பிரகாச சுவாமிகள் பல தத்துவக் கொள் கைகளின் அடிப்படைக் கருவூலச் சொல்லாக விளங்கும் 'அத்துவிதம்' என்ற சொல்லாராய்ச்சியின் அடிப்படை யிலேயே இந்நூலை வகுத்திருப்பது பெரிதும் உளங்கொளற் குரியது.

அத்துவித உண்மைப் பொருளும் அவிரோதக் கொள்கையும் இணைந்து சிந்திக்கப் பெறவேண்டும் என்ற அடிப்படையிலும், அத்தகைய இணைப்புச் சிந்தனையானது வேறுபாடற்ற சமய, சமுதாய மலர்ச்சியாக அமைய வேண்டும் என்ற கொள்கை விளக்கத்திலும் அமைய வேண்டும் என்ற வகையில் நம் ஆதீன வெளியீடாக இந்நூல் வெளிவருவது பொருத்தமும் செயல் விளக்கமும் உடையது என நாம் கருதுகின்றோம்.

இந்நூலுக்கு அனைவரும் எளிதில் படித்துப் பொரு ளுணர்ந்துகொள்ளும் வகையில் நம் திருமடத்து அன்பரும், சைவசித்தாந்தப் பெரும்புலவரும் ஆகிய முனைவர் சைவத்திரு ர. வையாபுரியார் அவர்கள் உரையொன்று எழுதியுள்ளார்கள். அவர்க்கு எம் அருளாசிகள்.

இந்நூலைப் படித்து நம் திருமடத்துத் தலைமைக் கொள்கையாக அவிரோதமும் அத்துவிதமும் எவ்வாறு இணைந்து மக்களுக்குச் செயல்முறைப் பயன் அமையும் என்ற வகையில் சிந்தித்துச் செயலாற்றித் திருவருட் பெரும் பயன் எய்தவேண்டும் என்பது நம் அவா.

நாம் அருளாட்சிப் பொறுப்பேற்ற வெள்ளிவிழா நினைவு நாளில் இந்நூல் வெளிவருவதற்குத் திருவருளும் குருவருளும் துணை நின்றுள்ளன.

இந்நூலை அச்சிட்டுதவிய அச்சகத்தார்க்கும் இந்நூல் வெளிவருதற்குத் துணை நின்ற அனைவர்க்கும் நம் ஆதீனத்து முதற்குரவர் முனிபுங்கவர் குருமகா சந்நிதானம் சீர்வளர்சீர் சாந்தலிங்கப் பெருமான் திருவருள் நின்று சிறந்து வாழ்விப்பதாகுக.

# முன்னுரை

துறையூர்ச் சிவப்பிரகாச சுவாமிகள் அருளிய அத்துவித வெண்பா என்னும் இந்நூல் பொது, உண்மை என இரு பகுதியாக அமைந்து வீர சைவத்தின் சிறப்பு, பெயர்க் காரணம், தீட்சை முறை, தத்துவம் ஆகியவற்றைத் தெளிவாக விளக்குவதாக உள்ளது

பொது 189 வெண்பா, உண்மை 222 வெண்பா ஆக 411 வெண்பாக்களைக் கொண்டு விளங்குகிறது இந்நூல், இவையன்றிப் பாயிரமாகப் பிள்ளையார் வணக்கம் கூறும் வெண்பா 1, நூலாசிரியர் பெருமை கூறும் அறுசீர் விருத்தம் 2-ஆக மூன்று பாடல்களும் உள்ளன.

பொது என்னும் பகுதியில் சிவசம்பந்தம் சைவம், அச்சம்பந்தம், அகத்தும், புறத்தும் உறுதல் வேண்டும்; அதுவே அத்துவிதம்; அதுவே சத்காரியம்; அச்சம்பந்தம் சிவலிங்க தாரணத்தினால் மட்டுமே உண்டாகும். அதற்கு வீரசைவ நெறிப்படி தீட்சை பெறுதல் வேண்டும் என்னும் செய்திகள் விளக்கப்படுகின்றன.

உண்மை என்னும் பகுதியில் முப்பொருள் உண்மை, தத்துவங்களின் தோற்றம், சடுத்தல விளக்கம் ஆகியன கூறப்படுகின்றன.

இந்நூலுக்குத் திருவண்ணாமலை, திருத்துறையூர் வீரசைவ ஆதீனத்து ஆறாவது பட்டத்தில் எழுந்தருளியிருந்த நன்னூல் சிவப்பிரகாச சுவாமிகள் மிக விரிவாக உரை எழுதியுள்ளார். சிவஞான சித்தியார், தேவாரம், திருவாசகம். வாதுளாகமம் ஆகிய

வற்றிலிருந்து மிக அதிகமான எடுத்துக்காட்டுக்களும் தந்துள்ளார்.

இவ்வுரை இக்காலத்தவர்க்குப் படிப்பதற்கு அரிதாக இருப்பதனால் மிக எளிமையாகப் பொழிப்புரையாகவும் இன்றி—கருத்துரையாகவும் இன்றி—வெண்பா என்ன சொல்கிறது என்பதை மட்டும் விளக்கிக் கொள்ளும் வகையில் ஓர் உரையினை எழுதினேன். எனினும் என்னு டைய உரை அச் சுவாமிகள் எழுதிய உரையைப் பின் பற்றியே செல்கிறது.

திருப்பேரூர் ஆதீனத்தை நிறுவிய அருள்மிகு சாந்த லிங்கப் பெருமான் இச் சிவப்பிரகாச சுவாமிகளின் மாணாக்கர். இத்திருப்பேரூர் ஆதீனத்தில் இப்பொழுது அருளாட்சி செய்துவரும் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் அவர்கள் சாந்தலிங்கர் நூல்களை அவ்வப் பொழுது வெளியிட்டுவருவதுடன் சாந்தலிங்கருடைய குரு அருளிய நூல்களையும் மாணாக்கர்கள் அருளிய நூல் களையும் வெளியிடத் திருவுளம் கொண்டனர். அவ் வகையில் தவத்திரு அடிகளார் அவர்கள் அருளாட்சி ஏற்ற வெள்ளிவிழா ஆண்டின் சிறப்பு வெளியீடாகச் சென்ற புரட்டாசி மகத்தில் (அக்டோபர் 1991) குமரர தேவர் அருளிய அகவல்களும் ஞான அம்மானையும் வெளியிடப் பட்டன. மாசி மகத்தில் சிவஞான போதம் - திருநெறி யுரை - என்னும் நூல் வெளியிடப்பட்டது. இந்தப் புரட்டாசி மகத்தில் இந்நூல் வெளியிடப்படுகிறது.

இந்நூலில் உள்ள வெண்பாக்களைப் பதப்பிரிவு செய்ய முனைந்ததனால் வெண்பா யாப்பு அடையாளம் காண முடியவில்லையே என்ற குறை பலருக்கு ஏற்படும். பொருள் அறிய முயல்வோர் பலர். யாப்பை அனுபவிப்பவர் சிலர். பலரின் தேவையை ஒட்டியே பதப் பிரிவு செய்யப்பட்டது. யாப்பு விரும்புவோர் நிறைந்த நூற்பயிற்சியுடையவரா

யிருப்பர். ஆதலின் அவர்கள் யாப்பினை வெளியே இயைத்து உணர்ந்துகொள்வர் என்னும் நம்பிக்கை யுடையேன்.

பதப் பிரிவிலும், உரையிலும் என் அறிவுக் குறையால் பிழைகள் பல நேர்ந்திருக்கும். அன்பர்கள் திருத்திப் படித்துக் கொள்வதுடன் எனக்கும் அவற்றைத் தெரிவித்து உதவுவார்கள் என்று நம்புகின்றேன்.

என் ஆய்வியல் ஆசிரியர் சைவத்திரு டாக்டர் வை. இரத்தின சபாபதியவர்கள் இப்பதிப்பினைக் கண்ணுறும் வாய்ப்பு எதிர்பாராதவிதமாக இந்நூலுக்கு ஏற்பட்டது திருவருட் செயலே எனக் கருதுகிறேன். இதனால் பெரும் பிழைகள் தவிர்க்கப்பட்டன. அவர் களுக்கு என் நன்றி என்றும் உரியது.

இப்பதிப்புக்கு உடனிருந்து உதவிய அன்பர் டாக்டர் இ. சுந்தரமூர்த்தி அவர்களுக்கு என் நன்றி உரியது.

என்னை இப்பணியில் ஈடுபடுத்திய அருள்மிகு சாந்தலிங்கப் பெருமான் திருவடிகளுக்கும் அருளாட்சி இருபத்தைந்தாம் ஆண்டின் நிறைவு விழா ஏற்கும் தவத்திரு சாந்தலிங்க இராமசாமி அடிகளார் அவர்களின் திருவடி களுக்கும் என் வணக்கம்.

ச. வையாபுரி

# நூலாசிரியர் வரலாற்றுக் குறிப்பு

அத்துவித வெண்பா என்னும் இந்நூலை அருளியவர் திருவண்ணாமலை, திருத்துறையூர் வீரசைவ ஆதீன நிறுவனர் அருள்மிகு பிரகாச சுவாமிகள்.

## இளமை

இவர் கும்பகோணத்தில் வேளாண் செட்டி மரபில் தோன்றியவர். இளமையில் கல்வி கேள்விகளிற் சிறந்து சிவவழிபாடு, சிவத்தலப் பயணம் முதலியவற்றில் ஆர்வ முடையவராக இருந்தார். அத்தகைய பயணத்தில் ஒரு முறை திருவாவடுதுறை என்னும் தலத்துக்குச் சென்றார்,

## சைவ ஆதீனத்தலைமை ;

அத்தலத்தில் மெய்கண்ட சந்தானத்து உமாபதி சிவத்தின் மாணாக்கர் பரம்பரையில் நமசிவாய மூர்த்திகள் சைவஆதீனம் ஒன்றை நிறுவிச் சித்தாந்த சைவ நெறியினை மக்களிடம் பரப்பி வந்தார். சிவப்பிரகாசரின் பக்குவ நிலையைக் கண்ட நமசிவாய மூர்த்திகள் இவருக்குத்தீட்சை செய்து சைவ ஆதீன பரிபாலனத்தையும் இவரிடம் ஒப்படைத்துத் தாம் நிட்டையில் இருந்து வரலாயினர். இவ்வகையில் இச் சிவப்பிரகாசர் தொடக்கத்தில் சைவ ஆதீன மரபைப் பின்பற்றினார்.

## தில்லை நிகழ்ச்சி :

தில்லை நடுநாட்டுப் பகுதியை (இன்றைய தென்னார்க் காடு சேர்ந்தது. இப்பகுதியை ஆண்ட குறுநிலத் தலைவர் வைணவச் சார்புடையவர். அதனால் தில்லை அம்பல வாணர் கோயிலின் சிறப்புகளை முறையாக நடைபெறாத படி தடை பல செய்தார். தில்லைவாழ் அந்தணர்களும் மக்களும் திருவாவடுதுறை ஆதீனத்தில் வந்து முறை யிட்டனர். ஆதீன பரிபாலனத்திலிருந்த இச்சிவப்பிரகாச சுவாமிகள் தம் குருவாகிய நமச்சிவாய மூர்த்திகளின்

ஆணையை ஏற்று நாட்டுத் தலைவரைக் கண்டு பேசினார். பலனில்லை. பின்னர் பேரரசின் ஆளுநர் தங்கியிருந்த இராய வேலூருக்குத் திருக்கோயில் சிறப்புகளுடன் சென்றார், அங்கு முதலில் அமைச்சரைக் காண வேண்டி இருந்தது. அவ்வமைச்சர் சித்தராமதேவரிடம் தீட்சை பெற்ற வீரசைவர்; இலிங்கதாரணமில்லாதவர்களை நேரில் கண்டு உரையாடமாட்டார். எனவே இசிச்வப்பிரகாச சுவாமிகள் தம் உடையவராகிய சிவலிங்கத்தையே உடம்பில் அணிந்து கொள்ளலாம் என நினைத்தார், அசரீரியும் அவ்வாறே செய்க எனக் கூறியது. அமைச்சரைக் கண்டார். தில்லைக் கோயிலின் சீர்கேடுகள் நீக்கப்பட்டன. வழிபாடுகள் முன்னையினும் சிறப்பாக நடத்தப் பெற்றன. இதனால் மனம்மகிழ்ந்த இச்சிவப்பிரகாசர் முறைப்படி வீரசைவ தீட்சை பெற்றுத் தொடர்ந்து வீரசைவ நெறியைப் பின் பற்றி ஒழுகலானார்.

**வீரசைவ ஆதீனத் தோற்றம்**

சிவப்பிரகாச சுவாமிகள் இலிங்கதாரணம் செய்து கொண்டு வீரசைவ மரபைப் பின்பற்றியபொழுது இராயவேலூரில் இருந்த விநியநகரப்பேரரசின் ஆளுநரால் திருவண்ணாமலையில் திருமடமும் வேண்டும் வசதிகளும் செய்து கொடுக்கப்பட்டு அங்கேதங்கி வீரசைவ நெறியைப் பரப்பிவந்தார். அது திருவண்ணாமலை வீரசைவ ஆதீனம் எனத் தனியே சிறப்படையலாயிற்று. எனினும் திருவாவடுதுறை ஆதீனத் தொடர்பும் இவரிடம் இருந்து வரலாயிற்று. திருவாவடுதுறை ஆதீனத்து நமசிவாய மூர்த்திகளுக்குப் பின் இவரே மறை ஞானசம்பந்தரையும் பட்டத்தில் இருக்கச் செய்து ஆதீன பரிபாலனத்தை நடத்தி வந்தார்.

**துறையூர் மடம்**

திருத்துறையூர் என்னும் ஊரில் குறுநிலத் தலைவராயிருந்த இலிங்கா ரெட்டியார் என்பவர் இச்சிவபிரகாசரிடம்

தீட்சை பெற்றுத் தம் ஊரிலேயே ஒரு திருமடம் அமைத்துக் கொடுத்து அதில் தங்கியிருந்து மக்களிடையே சிவநெறியைப் பரப்பும்படி வேண்டிக் கொண்டார். அதன் படியே இவர் தங்கியிருந்ததனால் இவர் நிறுவிய ஆதீனம் திருவண்ணா மலை, திருத்துறையூர் வீரசைவ ஆதீனம் என வழங்கப் படலாயிற்று.

**இவருடைய மாணாக்கர்கள் ;**

**தூளிதம் காளத்தி மூர்த்தி :** இவர் தொடக்கத்தில் மத்துவ பரம்பரையைச் சார்ந்தவராக இருந்தவர். இச் சிவப்பிரகாச சுவாமிகள் தலப்பயணமாகத் திருக்காளத் திக்கு எழுந்தருளிய பொழுது சுவாமிகளுடன் தத்துவவாதம் செய்து தோல்வியுற்று வீரசைவ நெறியைத் தழுவியவர்.

**ஞானக்கூத்தர்:** சுவாமிகள் தலப்பயணமாகத் திருக் கலய நல்லூர் என்னும் தலத்தின் வழியே செல்லும் பொழுது அங்குச் சைவ அந்தணர் ஒருவர் இறந்து போன தம்மகனின் உடலைக் கொண்டு வந்து சுவாமிகள் முன்னி லையில் வைத்து உயிர்த்தெழச் செய்யும்படி வேண்டினர். சுவாமிகளும் அவ்வாறே செய்து ஞானக் கூத்தர் எனப் பெயரிட்டுத் தம்முடன் மாணாக்கராக ஆக்கிக் கொண்டார்.

**இவருடன் தொடர்புடையவர்கள் :** காஞ்சிபுரத்துக் குமாரசாமிப் பண்டாரம் என்பவர் திருவண்ணாமலைக்கு வந்து இவரிடம் வீர தீட்சை பெற்று இலிங்கதாரணம் செய்து கொண்டார். இவர் தம்முடைய குமாரர்களில் மூத்தவருக்குச் சிவப்பிரகாசர் எனப் பெயரிட்டார். அவரே பின்னர் கற்பனைக் களஞ்சியம் துறைமங்கலம் சிவப் பிரகாச சுவாமிகள் எனச் சிறப்புடையவராய் மயிலம் பொம்மபுரம் வீரசைவ ஆதீனத்துச் சீடராய் விளங்கினார்.

திருப்பேரூர் ஆதீனத்தை நிறுவிய சர்ந்தலிங்க சுவாமி களும் இவ்விரு சிவப்பிரகாசருடனும் (முன்னவர் குரு பின்னவர் மைத்துனர்) இரண்டு ஆதீனங்களுடனும் (திருவண்ணாமலை ஆதீனம், பொம்மபுர ஆதீனம்) தொடர்புடையவராய் விளங்கினார்,

**இயற்றிய நூல்கள்:**

1. அத்துவித வெண்பா, 2. கணபாஷித ரத்தினமாலை, 3. முக்காண்டம், 4. சதகத்திரையம், 5. அனுபவ சடுத் தலம், 6. மந்திர கோப்பியம். 7. தீட்சா போதம், 8, மிசி ரார்ப்பணம், 9. நூற்றொருதலம், 10, சர்வசார சடுத் தலம், 11. திருவாலந்துறைச் சிந்து, 12. திருக்கழுக்குன்ற மாலை, 13. திருக்கழுக்குன்ற விருத்தம், 14. கப்பறைமுக் கியம், 15. தீட்சாவிதி, 16. வெண்பா முக்காண்டம்.

இவர் தமிழ் நாட்டிலும் தெலுங்கு நாட்டிலும் கன்னட நாட்டிலும் விரிவாகத் தலப்பயணம் செய்து அங்கங்கே மாணாக்கர்களையும் அன்பர்களையும் உடைய வராய் விளங்கினார்.

இவர் வாழ்க்கையில் நிகழ்ந்த அருட்செயல்கள் ;

1. இவர் தில்லையில் வழிபட்டு நின்றபொழுது இறை யருளால் சிவலிங்கம் கைவரப்பெற்றது.

2. கையால் தாளமிட்டுத் தேவாரம் பாடிக் கொண் டிருந்த பொழுது இறையருளால் பொற்றாளம் கைவரப் பெற்றது.

3. இராய வேலூருக்குச் செல்லும் பொழுது தில்லைக் கோவிலிருந்த சிவிகையினையும் குடை முதலிய விருது களையும் பயன்படுத்திக் கொள்ளும்படி இறைவன் அருளியது.

4. இராய வேலூரில் வீரசைவ அமைச்சரைக் காணும் பொருட்டுப் பூசைப் பெட்டகத்திலிருந்த உடையவராகிய சிவலிங்கத்தையே சிறு பெட்டகத்தில் வைத்துத் தலையில் அணிந்து கொண்டு சிவலிங்கதாரணம் உடையவராவதற்கு இறைவாக்கு அசரீரியாய் அனுமதி கொடுத்தது.

5. இராய வேலூர் ஆட்சித் தலைவரின் வேண்டு கோளின்படி மேகராகக் குறிஞ்சிப் பண் அமைந்த தேவாரப் பதிகங்களை வீணையிசையுடன் இயைத்துப் பாடி மழை பொழியச் செய்தது.

6. திருச்செங்கோட்டில் இவருடைய பெருமையைச் சோதிப்பதற்காகச் சில அந்தணர்கள் கூறியபடி திருக் கோயிலிலிருந்த கல் நந்திக்குக் கடலை நிவேதனம் செய்து அதனை அந்நந்தி உண்ணுமாறு செய்தது. அப்பொழுது இவர் கூறிய பாடலாகப் பின் வரும் தனிப் பாடல் வழங்கி வருகிறது.

வில்ஆர் மணிச்சபையின்வித்தகா கூடலின் முன்
கல்ஆனைக்குக் இக்கு அருத்திக் காட்டிய உன்—வல்
ஆண்மை
கட்டுரையே ஆகில் இந்தக் கல்ஏறு எழீஅக் கடலை
இட்டஇவர்முன் தினச்செய்யே.

(கூடல் மதுரை; இக்கு - கரும்பு. அருத்தி - உண்ணச் செய்து, முன் இரண்டு அடிகளில் கல்லானைக்குக் கரும் பருத்தய திருவிளையாடல் கதை குறிப்பிடப்பட்டுள்ளது. கட்டுரை-உண்மையான சொல்; ஏறு-நந்தி; அழீஇ-எழுந்து)

7. மத்துவ நெறியினரை வென்று சீடராக்கிக் கொண்டது.

8. இறந்த சிறுவனை உயிர்பெற்றெழச் செய்து சீடராக்கிக் கொண்டது.

9. காஞ்சிபுரம் குமாரசாமிப் பண்டாரத்துக்கு மக்கட் பேறு உண்டாகும் எனக் கூறி மூத்த மகனைத் தம் பெயரால் வழங்கச் செய்தது.

10. பெண்ணையாற்றில் சிவிகையை ஓடம் போல மிதக்கச் செய்தது.

11, தீவட்டிக்கு எண்ணெய் இல்லாத பொழுது தண்ணீர் விட்டு எரிக்கச் செய்தது.

12. குட்டநோய் தீர்த்தது.

13. சோழ அரச குமரன் ஒருவனுக்குப் பற்றியிருந்த பிரம்ம ஹத்தியைப் போக்கியது.

## 11. திருவருள் கலப்பு :

இவர் கும்பகோணத்தை அடுத்த பட்டீச்சரம் என்னும் தலத்தில் இறையருளில் கலந்தார். தம் இறுதிக் காலத்தில் திருவாவடுதுறை ஆதீனம். திருவண்ணாமலை ஆதீனம் என இரண்டாகப் பிரித்து அவற்றின் நடைமுறைகளையும் ஒழுங்கு படுத்தினார். திருவாவடுதுறையில் அம்பலவாண தேசிகரும் திருவண்ணாமலையில் ஞானக்கூத்தரும் ஆதீனப் பொறுப்பில் நிறுவப்பெற்றனர்.

இச் சிவப்பிரகாச சுவாமிகளின் காலம் கி. பி. 16 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி.

உ

திருச்சிற்றம்பலம்

# அத்துவித வெண்பா

மூலமும் உரையும்

## பிள்ளையார் வணக்கம்

பெத்த மலம் அகற்றிப் பேதம்அறத் தானாக்கும்
சித்தன் சிவப்பிரகாசச் சிவன்செய் - அத்துவிதச்
சைவநூல் உண்மைதனைத் தந்திமுகத்து ஐங்கரநல்
தெய்வமே என் உளத்தில் சேர்.

யானைமுகத்தையும் ஐந்து கைகளையும் உடைய ஞானமே வடிவான விநாயகப் பெருமானே! ஆன்மாவைக் கட்டுப்படுத்துகின்ற ஆணவ மலசத்தியை நீக்கிச் சிவ சீவ வேற்றுமையை நீக்கிச் சீவனைச் சிவமேயாக ஆக்கும் சித்து வல்ல சிவப்பிரகாச சிவம் என்னும் குரு அருளிய சிவசீவ அத்துவித சம்பந்தத்தை உணர்த்தும் சைவ நூலின் உண்மைப் பொருளை என்னுள்ளத்தில் விளங்கச் செய்தருளுக.

## நூல்

### பொது

**மாணாக்கன் வினா - சிவசம்பந்தம் எத்தகையது?**

சிற்றம்பலவா சிவனே சிவாய பவ
அற்றம்பரிக்கும் அரண்ஆகிக் - குற்றம்என்றும்
சாராத சைவம் என்ற சம்பந்தம் இங்ஙன்எனச்
சீரார் திருவாயால் செப்பு 1

தில்லைச் சிற்றம்பலத்தில் எழுந்தருளியிருப்பவனே! சிவனே! சிவாய என்னும் மந்திரப் பொருளாய் உள்ளவனே!

ஆன்மாக்களின் பிறவியாகிய குற்றத்தைக் களையும் பாது காவலாகி எக்காலத்தும் குற்றம் பொருந்தாத சிவசீவ சம்பந்தம் என்பது இத்தகையதென உனது சிறப்புப் பொருந்திய திருவாக்கினால் உரைத்தருளுக.

**ஆசிரியர் விடை - முத்தர்க்கு நூல் வேண்டியதில்லை**

முன்னைப் பிறப்பில் முயன்றசைவ அத்துவிதர்
பின்னைப் பிறவாமல் பேரருளில் - தம்மைக்
கொடுத்து அருள் ஆனந்தம் கொள்கையோர் தங்கட்கு
அடுத்தது இதுவுளனாது ஆகமம். 2

முற்பிறப்பில் சரியை கிரியை யோகங்களை முயன்று செய்து சிவசம்பந்தம் பெற்றவர்கள் அதன் தொடர்ச்சியாய் இப்பிறப்பில் பிறந்து மேலும் பிறவியடையாதபடி பக்தியால் தம்மை அருளில் கொடுத்து ஆனந்தம் பெறும் இயல்புடைய வர்க்கு செய்யத்தக்கது இது தவிரத்தக்கது இது என்று நூல்கள் ஏதும் கூறமாட்டா.

**பத்தர்க்கே நூல் வேண்டும்**

வேண்டும்வகை நடப்பார் வேண்டாமை யாதொன்றும்
ஈண்டு ஒன்றும் இல்லை எனும் அதனால் - பூண்டஅருள்
முத்தர்தமக் கன்று முரணும் பிறப்பறுக்கும்
பத்தர் தமக்கே பகர்வம் பார். 3

அவர்கள் அருளைப் பெற்ற சீவன் முத்தர்கள். அவர் களுக்கு இவ்வுலகில் வேண்டாமை என்பது சிறிதும் இல்லை. எனவே அவர்களுக்கு இத்தகைய நூல் வேண்டுவதன்று. ஆன்மாவுடன் மாறுபட்டு நிற்கும் பிறப்பினை அறுத்துக் கொள்ள முயன்று பக்தி செய்பவர்களுக்கே இந்நூலைக் கூறுவோம்.

## புறப்பத்தியும் அகப்பத்தியும்

புறப்பத்தி என்றும் அகப்பத்தி என்றும்
சிறப்புடைய ஆகமங்கள் செப்பும் - புறப்பத்தி
பேதமதாய் அர்ச்சிக்கை பேதம்இலா அர்ச்சனையே
ஓதும் அகப்பத்திஎன ஓர் 4

ஆகமங்கள் புறப்பத்தி என்றும் அகப்பத்தி என்றும் பக்தியை இருவகையாகக் கூறும். இவற்றுள் புறப்பத்தி யாவது பேதமாக வழிபடுதல்; அகப்பத்தியாவது அபேதமாக வழிபடுதலாம்.

## சரியை கிரியை யோகம்

பூசிப்பித்து ஏகல்சரியை கிரியையது
பூசித்துப் போகை மிகும் அன்பினால் - பூசித்து
அகலாமை யோகம் என அன்று அமலன் ஓதும்
சகல ஆகமமும் உரைக்கும் தான். 5

பிறரைக் கொண்டு வழிபாடு செய்து நீங்குதல் சரியை; தானே வழிபட்டு நீங்குதல் கிரியை; மிக்க அன்புடன் வழிபட்டு நீங்காதிருத்தல் யோகம் என்று இறைவன் அருளிய எல்லா ஆகமங்களும் கூறும்.

## சரியை

எட்டுவித அர்ச்சனைகள் ஈரெட்டு உபசாரம்
முட்ட இயற்றி முடிப்பித்துக் - கட்டு அகலப்
பாடிப் பணிந்து பரிவொடும் சுற்றிப் போகை
கூடும் சரியைக் குறி. 6

திருக்கோவில் சென்று எட்டுவகை பதினாறு வகை எனப்படும் பொருள்களால் அருச்சனையும் உபசாரமும் குறைவின்றி அருச்சகர் மூலமாகச் செய்து பாசம் நீங்கும்படியாகத் தோத்திரங்கள் பாடி, நிலத்தில் வீழ்ந்து வணங்கி,

அன்புடன் வலம் வந்து தன் இல்லம் திரும்புதல் சரியையின் அடையாளம். எட்டு வகை; வாசனைப் பொடி, அட்சதை, பூமாலை, ஆடை. வாசனைப் பூச்சு, சந்தனம், அமுது. வெற்றிலைப் பாக்கு,

**பதினாறு வகை :** ஆசனம், அருக்கியம், பாத்தியம், ஆசமனம், அபிடேகம், ஆடை, பூணூல், சந்தனம், பூ. அட்சதை, தூபம், தீபம், கற்பூர ஆரதி, திருவமுது, வெற்றிலைப் பாக்கு. மந்திர மலர் அருச்சனை.

## கிரியை

பூசை உபசாரங்கள் பொற்பொடுதான் செய்து அரனை
ஆசையின் ஓர்பால் அமர்வித்துப் - பேசிய நல்
ஓமம் புரிந்து அகலல் உற்ற கிரியையது
ஆம் மற்றை யோகம் உரைப்பாம். 7

சிவலிங்கப் பெருமானை விருப்பத்துடன் ஓர் ஆசனத்தில் எழுந்தருளச் செய்து பூசையும் உபசாரங்களும் அழகுறச் செய்து, நூல்களில் சொல்லப்பட்ட நல்ல சிவாக்கினியில் ஓமமும் செய்து பின் தனது பணியின் மேல் செல்வது பொருந்திய கிரியை எனப்படும். இனி யோகம் என்பதைச் சொல்லுவோம்.

## யோகம்

சைவம் சிவத்துடனே சம்பந்தம் ஆதல்எனச்
சைவ ஆகமம் உரைக்கும் சத்தியம் கேள் - செவ்விதாய்
நீங்காமல் உள் புறம்பும் நீங்காத நல்சிவனை
நீங்காமை சைவம் நினை 8

சிவாகமங்கள் சைவம் என்பதற்குச் 'சிவத்துடன் சம்பந்தம் ஆதல்' என்று பொருள் கூறுகின்றன. இதன் உண்மை என்னவெனில் எல்லாப் பொருள்களுடனும்

உள்ளும்புறம்பும் நீங்காமல் முழுவதும் கலந்திருக்கின்ற சிவபரம் எல்லாப் பொருள்களுடனும் உள்ளும் புறம்பும் நீங்காமல் முழுவதும் கலந்திருக்கின்ற சிவபரம் பொருள் உன்னிடத்தும் அங்ஙனம் கலந்திருப்பதை அறிந்து வழி படுதலாம்,

## அத்துவித சம்பந்தம்

பேதம் அபேதம் அல்லாப் பேதாபேதம் எனவே
ஓதுகின்ற நீதி உவர்ப்புஉற்றுத் - தீதுஇல்அருள்
அத்துவித சைவம் அரண் எனக் கண்டார் சிவனோடு
அத்துவிதம் நீங்கார் அவர் 9

சிவமும் உயிரும் பேதம் என்றும் அபேதம் என்றும் பேதாபேதம் என்றும் சொல்கின்ற நெறிகளை வெறுத்து நீக்கித் தீங்கில்லாத அருளுடன் இரண்டறக் கலந்து நிற்றல் என்னும் அத்துவித சம்பந்தம் கூறும் சைவ நெறியே தமக்குப் பாதுகாப்பு என அறிந்து அடைந்தவர்களே நீங்காத சிவசம்பந்தம் உடையவராவர்.

## உண்மைச் சிவசம்பந்தம்

ஆசூசம் என்னும் அவ்வுடல் நீங்க என்றும்
ஆசூசம் இல்லா அரனுடனே - நேசமுடன்
சம்பந்தம் கொண்டு விடாத்தன்மையது சைவம் அலாச்
சம்பந்தம் பேத சம்பந்தம் 10

தூய்மையில்லாத இவ்வுடலின் அசுத்தம் நீங்கும்படி என்றும் சுத்தனாயிருக்கின்ற சிவலிங்கப் பெருமானை உடலில் தலை முதலிய உறுப்புக்களில் தரித்துக்கொண்டு நீங்காதிருக்கச் செய்து வழிபடுவதே அத்துவித சிவசம் பந்தம். மற்ற வழிபாடுகளெல்லாம் பேத சம்பந்தம்.

ஆனஇலய போக அதிகாரம் ஆம் மூன்றும்
ஆன தனுமூன்றில் அவலம் அறத் - தான் இனிய
சம்பந்தம் நீங்காமை சைவம் எனும் ஆகமங்கள்
சம்பந்தம் சொல்லும் தரம் 11

லயசிவம், போகசிவம், அதிகாரசிவம் என்னும் மூன்றனையும் காரணதேகம், சூக்குமதேகம், தூலதேகம் என்னும் மூவகை உடம்பில் பிராணலிங்கம், பாவலிங்கம், இஷ்டலிங்கம் ஆகப் பிறவித் துன்பம் நீங்கும்படி இனிதாகத் தரித்துக்கொண்டு நீங்காதிருத்தலே சிவாகமங்கள் கூறும் உயர்ந்த சிவசம்பந்தம் ஆகும்.

## சைவத்தில் பிறத்தல்

சகளம் முதல் மூன்றனையும் சாற்றும் உருமூன்றில்
அகல்வதுஅறச் சம்பந்தம் ஆதல் - சகல
சனனம் அறுக்கும் இன்பச் சம்பந்தம் சைவ
சனனம் எனும் ஆகமங்கள் தாம் 12

சகளம், சகளநிஷ்களம், நிஷ்களம் என்று முறையே சொல்லப்படும் இஷ்ட்டலிங்கம், பிராணலிங்கம், பாவலிங்கம் என்பவற்றை முனறயே தூலம், சூக்குமம், காரணம் என்னும் உடம்புகளில் ஒருவன் நீங்காமல் தரித்துக் கொள்ளுதலே சிவ சம்பந்தமாம். இவனுக்குச் சகல அவத்தையினால் உண்டாகும் பிறப்பு நீங்கும். இவன் சைவத்தில் பிறந்தோனாவன் என்று ஆகமங்கள் கூறும்.

காயத்தினும் மனத்தும் காதல் உறும் பாவத்தும்
மாய முடிக்க மகிழ்ந்து அருளால் - ஆய
சகளாதிகள் உடலில் சம்பந்தம் சற்றும்
அகலாமைதான் சைவமாம். 13

தூல, சூக்கும, காரண உடம்புகளையே தான் என மதிக்கும் பற்று நீங்கும்படி குரு அருளால் தரித்துக்கொண்ட

சகள, சகள நிஷ்கள, நிஷ்கள லிங்கங்களைச் சிறிதும் நீங்காமல் இருப்பதே சிவ சம்பந்தம் எனப்படும்.

### உயிருட் கலந்த சிவத்தை உடம்பிலும் காணுதல்

உயிர்க்கு உயிராய் நீங்காமல் உற்ற சிவனை
மயக்கம் அறக் காண மதித்து - மயக்கம் அற்ற
காயம்அது மூன்றில் கருதும் சிவம் மூன்றும்
ஆய் அகலாதுஆதல் சம்பந்தம் 14

உயிர்க்கு உயிராய் நீங்காமல் கலந்து நிற்கும் சிவபரம் பொருளைத் தெளிவாகக் கண்டு அனுபவிக்கக் கருதித் தீக்கையினால் மயக்கும் தன்மை நீங்கிச் சுத்தமாகிய தூல, சூக்கும காரண உடம்புகளிலும் முறையே இட்ட, பிராண, பாவலிங்கங்களைத் தரித்து நீங்காதிருத்தலே சிவசம்பந்தமாம்.

### அத்துவித வாழ்வு பெறும் வழி

உள்ளும் புறம்பும் மற்றை உட்புறம்புமாய் மூன்றால்
கொள்ளும் சிவாதி குறிக்கும் உயிர் - கொள்ளும்
உருமூன்றில் சம்பந்தம் உற்று அகலாது ஓங்க
வரும் அறிவில் அத்துவித வாழ்வு 15

உயிரினுள்ளும் புறம்பும் உட்புறம்புமாகிய மூன்றிடத்தும் கலந்திருக்கும் பாவ, இட்ட. பிராணலிங்கங்களை முறையே காரண, தூல, சூக்கும உடம்புகளில் தரித்து நீங்காது கலந்திருப்பதனால் அவனது அறிவில் சிவத்துடன் அத்துவிதமாதலாகிய பெருவாழ்வு சிறந்து விளங்கும்.

### வழிபாட்டில் கற்பு நெறி

அங்கம் உயிர்தானாக ஆனசிவம் லிங்கமதாய்
இங்கு இசைந்ததுஎன்றால் இறைவனுடன்-அங்குஅகலாது
அப்படியே லிங்கத்தோடு அத்துவிதந்தானாக
நிற்பதுவே கற்புடைமை நில் 16

உயிர் சிவத்துக்கு அங்கமாகவும் சிவம் அதில் கலந்திருக்கும் இலிங்கமாகவும் பொருந்தியிருக்கிறது என்பதனால் அத்தகைய சிவத்துடன் நீங்காது பிரிப்பின்றிக் கலந்து நிற்பதே கற்புடைமை எனப்படும். மாணவனே! நீ அவ்வாறே நிற்பாயாக.

நீங்காது அறிவில் நிகழ் சிவத்தின் அத்துவிதம்
தாம்காண வேண்டும்எனும் தாகம் உளார் - நீங்காத
அம்முதலாம் மூன்றும் அனவரதம் அத்துவிதம்
தம்உருவில் பற்றி விடார் தாம். 17

ஆன்மாவினிடத்தில் நீங்காமல் விளங்குகின்ற சிவத்தின் அத்துவிதக் கலப்பினை நேரே காண வேண்டும் என்னும் பெருவிருப்பம் உடையவர்கள் அந்த முதற் பொருளாகிய இட்ட, பிராண, பாவலிங்கங்களை எப்பொழுதும் தம் உடம்புகளில் தரித்து நீங்காது வழிபட்டு நிற்பர்.

## சிவலிங்கம் தரித்தல் சற்காரியத்துக்கு ஒத்தது

தன்னியல்பில் சம்பந்தம் சாற்றும்அது போல
மன்னும் சிவாதிகளை மன்னிவிடாப் - பின்னம்அற்ற
சம்பந்தம் அற்றக்கால் சற்காரியம் சிதையும்
இம்பந்த சம்பந் தமே 18

ஆன்மா தனது உண்மை நிலையில் சிவசம்பந்தம் உடையதாயிருக்கிறது என்று சொல்லப்படுவதற்கு ஒப்பப் பொது நிலையிலும் இட்டலிங்கம் முதலிய மூன்றனையும் தரித்து நீங்காதிருப்பதே சற்காரிய வாதத்துக்குப் பொருந்துவது. இல்லையெனில் கன்ம சம்பந்தமே உள்ளதாகும்.

தன்னியல்பு - ஆன்மா மல கன்ம மாயைகளுடன் கூடாத உண்மை நிலை; பொது வியல்பு - மல கன்ம

மாயைகளுடன் கூடிய நிலை. சற்காரியம் - முன் சூக்கு மாய்க் காரண நிலையில் உள்ளதே பின் தூலமாய்க் காரிய நிலையிலும் உள்ளதாவது, ஆன்மா இயல்பிலே சிவத்தை விட்டு நீங்காதிருக்கிறது என்றால் உடம்பெடுத்த நிலையிலும் சிவத்தை விட்டு நீங்காதிருக்கிறது என்பதே சற்காரியவாதம் என்பது இவ்வாசிரியர் கருத்து. இப்பந்த சம்பந்தம் என்பது இம்பந்த சம்பந்தம் என நின்றது.

## உடம்பு சிவாலயம் ஆகும்

பூமிதனில் லிங்கம் பொருந்தவே தாபித்திட்டு
ஆம்இலய போக அதிகாரம் - மேவியிட
அர்ச்சனை செய்தால் பூமி ஆனசிவக்ஷேத்திரமாம்
அர்ச்சனையால் இவ்வுடலும் ஆம் 19

பூமியில் ஓரிடத்தில் சிவலிங்கத் திருமேனியை எழுந்தருளப் பண்ணி அதில் லயம், போகம், அதிகாரம் என்னும் தன்மைகள் பொருந்தும்படி அருச்சனை முதலியன செய்தால் அவ்விடம் சிவாலயமாகின்றது. அதுபோல உடம்பில் சிவலிங்கம் தரித்து வழிபடுவதால் இவ்வுடம்பும் சிவதேகமாகும்.

லய, போக, அதிகாரம் - சிவபரம் பொருளின் மூன்று நிலை. இவை முறையே ஒடுங்கியிருக்கும் நிலை, படைத்தல் முதலிய தொழிலைச் செய்ய ஊக்கம் கொள்ளும் நிலை, அத்தொழில்களைச் செய்யும் நிலை என்பவற்றை விளக்கும். க்ஷேத்திரம் என்பது கேத்திரம் என நின்றது.

அண்டம் அதனில் அரியலிங்கம் தாபித்தால்
அண்டம்சிவாலயமாம் ஆங்கதுபோல் - பிண்டத்தில்
தற்பரமாம் லிங்கமது தாபித்தால் அத்தனுவும்
சிற்பரனார் கோயில் எனத்தேர் 20

பூமியில் சிவலிங்கம் அமைக்கப்பட்ட இடம் சிவாலயம் என்ப்படுவதுபோல் பிண்டமாகிய தேகத்தில் சிவலிங்கம் தரித்துக் கொண்டால் தேகம் சிவாலயமாகும். தனு - உடம்பு.

## அசரலிங்கம், சரலிங்கம்

*அண்டபிண்டம் என்ன அறியும் தலம் இரண்டில்*
*அண்டர் தொழுதேத்தும் அரியலிங்கம் - உண்டாகத்*
*தாபித்துப் பேரும் சராசரமதாகும் எனத்*
*தாபிக்கும் ஆகமங்கள் தாம்,* 21

அண்டத் (பூமி) தில் தாபிக்கும் லிங்கம் அசரலிங்கம்; பிண்டத் (உடம்பு) தில் தாபிக்கும் இலிங்கம் சரலிங்கம் என்றும் ஆகமங்கள் பெயர் கூறுகின்றன. சரம் - இயங்குவது; அசரம் - ஓரிடத்திலேயே நிலையாக இருப்பது.

*அண்டத்தில் தாபித்ததாம் தாபரலிங்கம்*
*பிண்டத்தில் தாபிக்கப் பெற்றக்கால் - கொண்டபெயர்*
*ஆன சரலிங்கம் என அன்றே சிவாகமங்கள்*
*ஈனம் அறவே உரைக்குமே.* 22

பூமியில் அமைத்த அசரலிங்கத்தை உடம்பில் தரித்துக் கொண்டால் அவ்வுடம்புடையவர் சரலிங்கம் எனப் பெயர் பெறுவர் என்று சிவாகமங்கள் கூறுகின்றன. தாபரலிங்கம் - அசரலிங்கம்.

## சரலிங்கம் சிறப்புடையது

*சரம் அசரம் என்ன இங்஗ன் சாற்றும் உயிரில்*
*சரம் அறிவு மிக்கதுபோல் சம்பு - சரம் அசரம்*
*தானாகிலும் பிரசன்னம் சாற்றும் சரத்தில் எனத்*
*தான்ஆகமம் உரைக்கும் தான்* 23

இயங்கும் உயிர் இயங்கா உயிர் என்னும் இரண்டும் உயிரேயானாலும் இயங்கும் உயிர் அறிவுமிக்கதாகும். அதுபோல அசரலிங்கம் சரலிங்கம் என்னும் இரண்டும் இலிங்கமே யானாலும் சரலிங்கத்தில் சிவபரம்பொருளின் விளக்கம் அதிகமாக இருக்கும். சம்பு - சிவன்.

### சரலிங்கம் என்பதன் காரணம்

*சீவன் உறும் பிண்டத்தில் செல்வச் சிவலிங்கம்*
*சீவனைத்தன் சம்பந்தம்செய்து பிண்டம் - கோவிலாத்*
*தான்கொண்டு சீவன்தனைப் பூசிக்கப் பூசை*
*தான்கொள்ளலால் சரமாம் தான்.* 24

உயிர் தங்கியிருக்கும் உடம்பில் தரிக்கப்பட்ட சிவலிங்கம் அவ்வுயிருடன் சம்பந்தம் உடையதாய் அதன் உடம்பைத் தனக்குக் கோயிலாகக் கொண்டு விளங்கி அவ்வுயிர் செய்யும் பூசையை ஏற்றுக்கொள்ளுகிறது. அத்தகைய உயிரும் உடம்பும் சரலிங்கம் எனப்பெயர் பெறும்.

### அங்கலிங்க சம்பந்திக்குக் கன்மபந்தம் இல்லை

*அங்கமாம் காலத்து அரிய பொறிஎச்சில் அது*
*அங்கு அருந்தல்போல் அருளாம் லிங்கத்தால்-இங்கு அருந்தும்*
*நன்மைப் பிரசாதம் நன்று அருந்துவார் பேதக்*
*கன்மத்து அகப்படார் காண்.* 25

உயிர் உடம்புடன் கூடியிருக்கும் பொழுது ஐம்பொறிகள் அநுபவித்துக் காட்டியவற்றைத் தான் அனுபவிப்பது போல எப்பொருளையும் தான் அணிந்திருக்கும் சிவலிங்கத்திற்குப் படைத்து அதன் பிரசாதமாக அனுபவிப்பவர்கள் வினைகளால் கட்டப்படமாட்டார்கள், பொறி - மெய்வாய் கண்மூக்குச் செவி.

### அங்கலிங்க சம்பந்திக்கு மாயாபந்தம் இல்லை

அங்கமது லிங்கத்துக்கு ஆலயமதாக்கி லிங்க
சங்கம் உறவே உயிரைத் தாபித்திட்டு - அங்கமதால்
உண்பதுபோல் சம்புவினால் உற்ற பிரசாதம் உண்ணும்
பண்புஉடையார்க்கு இல்லைஅங்கம் பார். 26

உயிருக்கு ஆதாரமாக இருந்த உடம்பை இலிங்கத்துக்கு ஆலயமாக்கி, அவ்விலிங்கத்துடன் உயிரைத் தொடர்புபடுத்தி அதனை அவ்வுயிர்க்கு ஆதாரமாக்கிவிட்டால் அவ்வுயிர் முன்பு இந்திரியங்களினால் விடயங்களை அனுபவித்தது போல இப்பொழுது இலிங்கப் பிரசாதமாக விடயங்களை அனுபவிக்கும். இத்தகைய ஆன்மாவுக்கு மாயாகாரியமாகிய உடம்பினால் வரும் பந்தம் இல்லாமல் போகும்.

### இலிங்கதாரணம் உடையவன் உடம்பு ஞான உடம்பாகும்

ஆனலிங்கந் தன்னுடனே அத்துவிதம் ஆன உயிர்
ஞானலிங்கம் தான்அகலா நல்லறிவு - தான்நிறைந்து
தான்அற்றபோது லிங்கம்தானாய் முன்னின்றபர
ஞானத் தனுவாகும் நாடு. 27

இட்டலிங்கம் முதலிய மூன்றனுடன் பிரிப்பின்றிக் கலந்த உயிர் சிவபரம் பொருளை விட்டு நீங்காத நல்ல ஞானத்தால் நிறைந்து தனது ஆன்ம போதம் கெட்டு மேலான சிவஞானமே தனக்கு உடம்பாகக் கொண்டு விளங்கும்.

### இலிங்க தாரணம் மட்டுமே சிவசம்பந்தம் தரும்

நீறுடனே கண்டிகைகள் நின்ற சிவ சம்பந்தப்
பேறு அது அன்றோ என்னில் பேசக்கேள் - கூறுகின்ற
மந்திரமும் கோமயமும் மாநிலம் சுத்தம்செய்ய
வந்ததுபோல் மற்று மதி. 28

திருநீறு, உருத்திராக்கம் முதலிய சிவ சின்னங்களை அணிதல் சிவ சம்பந்தம் ஆகாதா? சிவலிங்கம் அணிதல் வேண்டுமா? வழிபடுமிடத்தில் சிவலிங்கப் பெருமானை எழுந்தருளச் செய்யும் முன் பசுவின் சாணம், அத்திர மந்திரம் ஆகியவற்றால் அவ்விடம் சுத்தம் செய்யப்படுகிறது. அது போலத் திருநீறு முதலியவற்றால் உடம்பு தூய்மை செய்யப்படுகிறது. சிவலிங்கம் அணிதல் மட்டுமே சிவ சம்பந்தத்தைத் தருகிறது என அறிக.

மங்கிலியம் பூண வரும் இனிய மங்கை தனது
அங்கம் அணியால் அழகு செய்யும் - இங்கு அதுபோல்
ஆனசிவசம்பந்தம் ஆம்உடலம் சுத்தி செய்ய
ஆன திருநீறு முதலாம் 29

திருமாங்கல்யம் அணிந்துகொள்வதற்குரிய பெண் தன் உடம்பை மஞ்சளாலும் பிற அணிகலன்களாலும் அழகு செய்துகொள்கிறாள். திருமாங்கல்யம் மட்டுமே அவளைச் சுமங்கலி எனக் காட்டும். அதுபோல சிவலிங்கம் அணிவதற்குரிய உடம்பு சிவ சின்னங்களால் அழகு செய்யப்படும், சிவலிங்கம் அணிதல் மட்டுமே சிவ சம்பந்தம் என்பதைக் காட்டும்.

பூண்ட பணிதியது பொற்புடைய நாயகனுக்கு
ஈண்டு உரியள் என்னாது இவள் தன்னை - ஈண்டு ஒருவன்
பாரிஎன மங்கிலியம் பண்ணுதல்போல் லிங்கசங்க
காரணத்தால் சைவன் என்று காண். 30

ஒருத்தி அணிந்திருக்கும் அணிகலன்கள் அவளை ஒருவனுக்கு உரிய மனைவி என்று காட்டமாட்டா; மாங்கல்யம் மட்டுமே அவ்வாறு காட்டும். அதுபோல இலிங்க சம்பந்தம் மட்டுமே ஒருவனைச் சைவன் என்று காட்டும்.

## வீரசைவம் - பெயர்க் காரணம்

பிரமஅங்கந் தன்னில்பிறந்து இறக்கும்பேதக்
கருமஅங்கக் கட்டைக்கடக்க - வரும்வீரம்
பெற்றசிவ சம்பந்தப் பேறுஅதனால் வீரசைவம்
உற்ற பெயர் என்றே உணர். 31

பிரமனால் படைக்கப்படும் உடம்பில் பிறந்து இறந்து உழலுவதற்குக் காரணமான வினைகளின் கட்டினைக் கடப்பதற்குரிய வீரம் சிவலிங்கம் அணிவதால் கிடைக்கிறது. ஆதலின் இது வீரசைவம் எனப்படுகிறது.

## வினைக்கட்டுக்குக் காரணம்

கட்டு இவைகள் என்று உனக்குக் கட்டுரைக்கக்கேள்அவலப்
பட்ட உட்லோடு பதிந்தவகை - கட்டமாம்
காமம் கடுஞ்சொல் கடிய கொலைகள் களவும்
ஆம்இங்கு இதஅகிதத்தோடு ஆம். 32

வினைக்கட்டுவவதற்குரிய வழிகளாவன : காமம், கடுஞ்சொல், கொலை, கள், களவு முதலியன. நாம் செய்யும் நன்மை, தீமை இரண்டுமே உடம்பு எடுப்பதற்குக் காரணம் ஆகின்றன.

## உடம்பினால் வரும் பந்தங்கள்

தந்தை தாய் உற்றார் தனயர், மனையாள், உறவு,
வந்த பெரும் சாதிமரபு ஒழுக்கம், - அந்தி பகல்,
சூதகங்கள், ஏடணைகள், சொற்ற திரிகாலம் எனும்
வாதனைகள் ஆன அவை. 33

வினையின் காரணமாக உடம்பு எடுப்பதனால் தந்தை. தாய். சுற்றத்தார், மக்கள், மனைவி, உறவினர், சாதிக்குத்

தகுந்த ஒழுக்கம், சந்தியா காலங்களில் செய்யும் வழிபாடு. பிறப்பு இறப்பு முதலியவற்றால் வரும் தீட்டுகள் மூவாசை முக்காலச் செய்கைகள் எனப் பலவகையான கன்மபந்தங்கள் உண்டாகின்றன. ஏடணை - ஈஷணை - ஆசை அது மூன்று வகை. மண், பெண், பொன் என்பன.

## தீக்கையினால் உண்டாகும் வீரம்

இங்கு இவைகள் எல்லாம் இசைந்த உடல் சங்கரனார்
தங்கி நடிக்கும் சர ஆலயமாய்த் - தம் கருணைக்
கண் ஆதி தீக்கையினால் கட்டுஅறக் கண்டே திரும்ப
எண்ணாது இருப்பதும் வீரம், 34

மேலே கூறப்பட்ட கன்மபந்தத்துக்கு இடமான உடம்பு இறைவன் தங்கியிருப்பதற்குரிய இயங்குகின்ற கோவிலாகும்படி குரு தம் அருட்கண்ணால் நோக்குதல் முதலிய தீட்சை செய்வதனால் பந்தம் நீங்குகிறது. அப்பந்தத்தினை மீண்டும் நினைப்பளவிலும் தொடராதிருப்பதே வீரம் எனப்படும்.

## குருலிங்க சங்கமப் பிரசாதத்தையே கொள்ளும் வீரம்

சாற்றும் குருலிங்க சங்கமத்தின் நல்லருளால்
தோற்றும் பிரசாதச் சுகம் அருந்தும் - தோற்றம்
தடுமாற்றம் இல்லாத தன்மை திரியா
நடும் ஆற்றலால் வீர நாம். 35

குருலிங்க சங்கமங்களின் திருவருளின் அடையாளமாகிய பிரசாதத்தினையே அனுபவிப்பேன் என்னும் கருத்தில் தடுமாற்றமில்லாத தன்மையில் வேறுபடாத நிலைத்த ஆற்றலுடையவன் ஆதலினால் வீரம் என்னும் பெயர் பெறுகிறான்.

### சிவலிங்கத் திருமேனியை மட்டுமே வணங்கும் வீரம்

கணவன்பால் இன்பம் உறும் கற்புஉடையாள் வேறுஓர்
கணவன்பால் இன்பம் கருதி - அணைவு உறாள்
ஆங்குஅதுபோல் லிங்கத்துக்குஆகும் அன்பு வேற்று லிங்கத்து
ஓங்கவிடாது ஆங்கு அதும் வீரம். 36

தன் கணவனிடத்து இன்பம் அனுபவிக்கும் மனைவி வேறொருத்தியின் கணவனிடம் இன்பம் அனுபவிக்கச் செல்லமாட்டாள். அதுபோலத் தனக்குரிய சிவலிங்கத் திருமேனியிடத்தன்றி வேறு திருமேனிகளிடத்து அன்பு செல்லாதிருப்பதும் வீரம் எனப்படும்.

### சிவலிங்கம் அணியாதவரிடத்துத் தொடர்பு கொள்ளாத வீரம்

இவ்விரதம் இல்லாதார் எவ்விரதர் ஆயிடினும்
அவ்வவ ரோடு ஒன்றாய் அருந்தல்முதல்-எவ்வெவையும்
உள்ளத்தாலும் நினையாது உற்றதிடம் சற்று அகலாக்
கொள்கைத்து ஆம் கோலமும் வீரம். 37

சிவலிங்கம் அணிதல், அதனிடத்து மட்டுமே அன்பு செய்தல், குருலிங்க சங்கப் பிரசாதம் கொள்ளுதல் முதலிய விரதம் இல்லாதவர்கள் எவ்வளவு சிறந்த ஒழுக்கம் உடையவராயினும் அவரிடத்து உடன் உண்ணுதல் முதலிய உறவினை மனத்தாலும் நினையாத உறுதி சிறிதும் நீங்காத கொள்கையும் கோலமும் உடைமையால் வீரம் எனப்படும்.

### உடம்பின் இச்சைகளைத் துறப்பது வீரம்

வேணும் எனும் இச்சைகளையும் அங்கத்தீமைஇற
வேணும் என்பதெல்லாமும் வேண்டாஎன்று-ஆணியால்
நிற்கும்அது லிங்க நிகழ்ச்சியதாய் அங்கம் அற
நிற்பதுவும் வீர நிலை. 38

எல்லாம் எனக்கே வேண்டும் என விரும்பும் உடம்பினால் வரும் தீமை நீங்கும்படி எதனையும் வேண்டாம் என நிற்பதும் இலிங்கத்தின் இச்சையாக வருவனவற்றை மட்டுமே அனுபவிப்பதுமாகிய கொள்கையில் நிலையாக நிற்பது வீரம் எனப்படும்.

## உடம்பில்சிவலிங்கம் அணியவேண்டியதன் காரணம்

அண்டத்து உண்டாவது போல் பிண்டத்து உண்டாம்
அண்டர் பெருமான் அருள்செய்த - பண்டை [அதுவே
அருள் ஆகமத்திற்கு அவிரோதம்; இல்லாப்
பொருளாகும் மேன்மைப் பொருள். 39

அண்டத்தில் உள்ளது பிண்டத்தும் உண்டாக வேண்டும் இதுவே இறைவனருளிய ஆகமத்துக்கு விரோதமில்லாத தன்மை. அண்டம் இறைவனுக்கு ஆலயம். எனவே இவ்வுடம்பும் இறைவனுக்கு ஆலயம். எனவே இவ்வுடம்பில் சிவலிங்கம் அணிதல் வேண்டும். இதுவே தனக்கொப்பாகும் பொருளில்லாத மேலான பொருளாகும்.

ஆறுஏறுவார்கள் அரியதெப்பம் அங்கத்தின்
வேறு ஆகாதார் கரையின் மேவுவர்கள் - ஆறுஏறார்
தெப்பம் அகன்றோர்கள் இதுபோல் சிவலிங்கம்
அற்பம் அகன்றோர் பிறப்பு ஆழ்வர். 40

ஆற்றைக் கடக்க விரும்புபவர் தெப்பமும் உடம்பும் வேறாகாத தொடர்பு உடையவராவர். வேறானவர் ஆற்றில் வீழ்வர். அதுபோலப் பிறவிக் கடலைக் கடக்க விரும்புகின்றவர் சிவலிங்கத்தை உடம்பில் அணிந்திருப்பர். அணியாதவர் பிறவிக் கடலில் வீழ்வர்.

தூலத்தில் தெப்பம் உறின் சூக்குமமும் ஆறுஏறும்
தூலத்து இன்றேல் சூக்கம்தான் ஏறா - தூலத்தில்
இட்டலிங்கம் நிட்டை உறில் எய்தும் மனமும் ஒன்று
பட்டுவினை நீங்கும் எனப்பார். 41

தூலதேகம் தெப்பத்துடன் நீங்காமல் கலந்திருந்தால் சூக்கும தேகமும் ஆற்றைக் கடக்கும், இல்லையெனில் கடக்காது அது போலத் தூல உடம்பில் இலிங்கம் அணிந்தால் மனமாகிய சூக்கும தேகமும் அதனுடன்கூடி வினைப் பிறப்பாகிய கடலைக்கடக்கும்.

காயத்தால் செய்கருமம் காணும் மனத்தால் அகலா
ஆய மனக்கன்மம் அறு அங்கத்தால் - ஆய
இருவினைகள் ஏறுது இருமையினும் இலிங்கம்
மருவிவிடாதார்க்கு மதி. 42

உடம்பினால் செய்த கன்மப்பயனை உடம்பே அனுபவிக்கும். மனத்தினால் செய்த கன்மப்பயனை மனமே அனுபவிக்கும். ஆகவே உடம்பு, மனம் என்ற இரண்டிடத்தும் இலிங்கம் நீங்காமல் அணிந்திருப்பவருக்கு அவ்விரண்டிடத்தும் வினை ஏறாமல் நீங்கும் என அறிக.

## வீரசைவத்துக்குப் புறம்பான ஒழுக்கம்

ஆகாரம் நித்திரையோடு அச்சம் மருள் மைதுனத்தால்
ஆகாப் பிறப்பாம் அருநரகில் - போகாதே
தான் அருளாம் லிங்கத்தால்தான் அருந்தாதே விடயம்
தான் அருந்தல் பேதநெறிதான். 43

உணவு, உறக்கம், பயம், மயக்கம், பெண் போகம் முதலியவற்றில் வரன்முறையின்றி நடப்பவர்கள் பொருத்தமில்லாத பிறப்பிலும் நரகிலும் உழல்வர்கள். அங்ஙனம் உழலாதபடி நியமந்தவறாத அனுபவங்களைச் சிவனுக்குப்

படைத்துச் சிவலிங்கப் பிரசாதமாக அனுபவிப்பது வீரசைவ ஒழுக்கம். மாயாகாரியங்களால் வருகின்ற போகத்தை இந்திரியங்களின் வழியே அனுபவிப்பது வீரசைவ நெறிக்கு மாறான ஒழுக்கம்.

மந்திரத்தினாலே மருள்மயமாம் தனுவைச்
சிந்திச் சிவன் இருக்கச் செய்வித்து - வந்தவெல்லாம்
ஆன அருள் இலிங்கத்து அர்ப்பித்து அருந்தாத
ஈனமதியும் பேதம் என். 44

ஒருவன் மயக்கத்தைச் செய்யும் நிலையில்லாத தனது உடம்பை மந்திரத்தினால் மயக்கத்தைப் போக்கிச் சிவனுக்கு ஆலயமாக ஆக்கிப் பின் தனக்கு வரும் அனுபவங்களை அச்சிவனுக்குப் படைத்துச் சிவப்பிரசாதமாக அனுபவித்தல் வேண்டும். அங்ஙனம் செய்யாத இழிந்த அறிவு வீரசைவ நெறிக்குப் புறம்பாகும்.

அஞ்சுபொறியில் அடையும் விடயம் எல்லாம்
அஞ்சுமுகமான அரன் அருந்த - வஞ்சம் அற
ஊட்டிப் பிரசாதம் உண்ணாமல் உண்பவரும்
காட்டிய அப்பேதம் எனக் காண். 45

ஒருவன் தனக்கு ஐந்து இந்திரியங்களின் வழியாக வரும் விடய அனுபவங்களைத் தன்னிடத்து ஐந்து வடிவாக எழுந்தருளியிருக்கும் சிவனுக்கு வஞ்சனையின்றிப் படைத்துப் பின் அச்சிவப் பிரசாதமாக அனுபவித்தல் வேண்டும். அங்ஙனம் செய்யாமை வீரசைவத்துக்குப் புறம்பான ஒழுக்கமாகும்.

அஞ்சு முகமான அரன் - 1. பிரசாதலிங்கம், செவியை முகமாகக் கொண்டு ஓசையை ஏற்றுக்கொள்ளும், 2. சங்கம லிங்கம் மெய்யை முகமாக் கொண்டு ஊறு என்பதை ஏற்றுக் கொள்ளும். 3. சிவலிங்கம் - கண்ணை முகமாகக் கொண்டு

உருவத்தை ஏற்றுக்கொள்ளும். 4. குருலிங்கம் - நாவினை முகமாகக்கொண்டு சுவையை ஏற்றுக்கொள்ளும். 5. ஆசார லிங்கம் - மூக்கை முகமாகக் கொண்டு மணத்தை ஏற்றுக் கொள்ளும். ஒரு வீரசைவன் தனக்கு ஐம்பொறி வழியாக வரும்விடய போகங்களை இவ்விலிங்கங்களுக்குப் படைத்துப் பின் சிவப்பிரசாதமாக அனுபவித்தல் வேண்டும்.

தனக்கு இனியவெல்லாம் தலைவனுக்கு அர்ப்பித்துப்
பினைக்கவலை மாற்று பிரசாதம் - கனக்கவே
தான்உண்டு வாழ்வதுஅறத் தான்வேறதாய் வினையைத்
தான் உண்பதும் பேதம்தான். 46

ஒருவன் தனக்கு இன்பம் தருவதாக வரும் அனுபவங் களைத் தன் தலைவனாகிய சிவனுக்குப் படைத்துப் பின்னர் துன்பத்தை நீக்கும் பிரசாதமாகப் பெருமையுடன் அதனை உண்டு வாழ்தல் வேண்டும், அங்ஙனமின்றித் தானே தனியே வினைப் போகங்களைப் பொறிகளின் வாயிலாக அனுப விப்பது வீரசைவத்துக்குப் புறம்பான ஒழுக்கம்.

கற்புடைய மங்கை கருதும் உடல் போகம் எல்லாம்
அற்புதமாம் நாயகன் உண்டு அன்பு ஆர - நிற்பதுபோல்
அங்கசுகம் வாட்டி அரியலிங்க போகம் உண்ணும்
துங்கம் அறியார் பேதத்தோர். 47

கற்புடைய மனைவி ஒருத்தி தன்னிடத்துள்ள இன்பம் அனைத்தையும் தனது கணவனுக்குக் கொடுத்து அவன் அன்பு பெருகுமாறு பணிவுடன் நடப்பதுபோல் ஒருவன் தன் உடம்புக்கு வரும் அனுபவங்களைத் தன் தலைவனாகிய சிவத்துக்குக் கொடுத்து அன்பு வளரச் செய்வது உயர்ந்த வீரசைவ நெறியாகும். இங்ஙனம் செய்யாமை வீரசைவத் துக்குப் புறம்பான ஒழுக்கம் ஆகும்.

ஆருயிருக்கு ஆகா அரும்பொருளைக் காயம் உண்ணா
ஏர் அது போல் இலிங்கத்துக்கு ஏலாத—கார் உடைய
தீயவினை உண்ணாத் தெளிவகன்று தான்புசித்துச்
சாய்வதுவும் பேதம் அது தான். 48

அரிய பொருளாயினும் உயிருக்கு ஒத்துக்கொள்ளாத பொருளை உடம்புக்கு உண்ணக் கொடாதது போல சிவத்துக்குப் பொருந்தாத பொருளைத் தான் படைக்கக் கூடாது என்னும் தெளிவு உடையது வீர சைவம். இத்தெளிவில்லாமல் வினைப் போகங்களை அனுபவித்துக் கெடுவது வீர சைவத்துக்குப் புறம்பான ஒழுக்கம்.

மருந்து அருந்த மாதா மகவு உறுநோய் தீரத்
திருந்து அமிர்தம் கொடுக்கும் சீர்போல்—அரும் பொருள்கள்
உண்டு சிவலிங்கம் உதவுபிரசாதம் உண்ணாது
உண்பவரும் பேதம் என ஓர் 49

குழந்தைக்கு வந்த நோய் தீருவதற்குத் தாய் மருந்து உண்டு சீரணித்து ஊறிய முலைப் பாலினைக் குழந்தைக்கு ஊட்டி நோயைப் போக்குவது போல ஒருவன் தான் அணிந்திருக்கும் சிவலிங்கம் தன்னால் படைக்கப்படும் மாயா போகங்களைப் பிரசாதமாக மாற்றி உதவுகிறது என்று அறிந்து படைத்துப் பிரசாதம் உண்ண வேண்டும். அங்ஙனம் செய்யாமை வீர சைவத்துக்குப் புறம்பான ஒழுக்கம்.

தனக்கு ஒன்று தான் அல்லாதார்க்கு ஒன்று செய்யின்
கனத்த நரகு என்று உரைத்தல் கண்டும்—தனக்குஇறையாம்
சங்கரனுக்கும் தனக்கும் தான் உண்டல் ஆதி இரண்டாய்ச்
சங்கை செய்தலும் பேதம் தான். 50

உண்ணும் பொழுது ஒருவன் தனக்கு ஒருவிதமாகவும் தன்னுடன் இருப்பவனுக்கு வேறு விதமாகவும் உணவு படைத்தால் அவனுக்கு நரகம் கிடைக்கும் என்று நூல்கள்

கூறுகின்றன. அதனை அறிந்திருந்தும் ஒருவன் தன் தலைவனாகிய சிவனுக்கு ஒருவிதமாகவும் தனக்கு வேறு விதமாகவும் உணவு முதலானவற்றைக் கருதுவது இவ்வீர சைவ நெறிக்குப் புறம்பான ஒழுக்கம்.

பொதுவாகி உண்பான் பொதுமாது கற்புத்
திதமாய் ஒருவன்பால் சேர்த்தி—விதமான
போகம் உண்பாள் கற்புடையாள் போல இட்டலிங்கத்தால்
போகம் உண்டல் கற்புடைமைப் பொற்பு 51

பரத்தை பொருளாசையால் பலருடனும் உண்பாள்: இன்பம் கொள்வாள். கற்புடைய குலமடந்தை கணவன் ஒருவனிடத்தில் மட்டுமே அன்பு வைத்து இன்பம் கொள்வாள். அது போல வீரசைவன் தன் இட்டலிங்கப் பிரசாதம் வட்டுமே கொண்டு இன்பம் அடைவான்.

இட்டலிங்கம் வாழும் இனிய தலம்பற்றி வினைக்
கட்டு அறுக்கும் வீரநிலை காதல் அறக்—கட்டவினை
தீர்க்க அரியதலம் சேர்வோம் எனநினையும்
மூர்க்கரும் அப்பேதம் எனமுன் 52

தீக்கையினால் தூய்மை செய்யப்பட்ட இவ்வுடம்பில் எல்லா இலிங்கங்களும் உள்ளன. இவ்வுடம்பிலிருந்து செய்யும் இட்டலிங்க வழிபாடே வினைக் கட்டினை அறுக்கும் என்று உறுதியும் அன்பும் உடையவனாய் வழிபடுபவன் வீரசைவன். இங்ஙனமன்று வினைக்கட்டினை அறுக்கும் சிறப்புடைய தலம் வேறு உளது எனத் தேடிப் போகும் கொடியவன் இவ்வீரசைவத்துக்குப் புறம்பான ஒழுக்கம் உடையவன் எனப்படுவான்-

பரிவுடைய இட்டலிங்க பாததீர்த்தத்தால்
விரிவுடைய கன்மசுவினை வெட்டும் — திறம் அதனை
விட்டு வினைதீர்க்க மிகுபுவியில் தீர்த்தம் எண்ணப்
பட்டவரும் பேதம் எனப்பார் 53

தூல உடம்பில் அன்புடன் எழுந்தருளியிருக்கும் இட்ட லிங்கத்தின் பாததீர்த்தமே மிகப் பலவாகவிரிந்த வினைக் கட்டினை அறுக்கும் திறம் உடையது, இதனை விட்டு ஒருவன் வேறு தலங்களில் தீர்த்தம் உள்ளது எனத் தேடிச் சென்றால் அது வீரசைவத்துக்குப் புறம்பான ஒழுக்கம் எனப்படும்.

மூர்த்திகொண்ட இட்டலிங்க மூர்த்தியினால் தீயவினை
தீர்த்திடும் நல்வீரத்திடம் அகலக் — கூர்த்தவினைக்
கட்டுஅறுக்க எண்ணி மிக்க காசினியில் ஓர் மூர்த்திக்கு
இட்டம் உறும் ஏழையும் பேதம் 54

தன் தூல உடம்பில் சிவலிங்க வடிவாக எழுந்தருளி யிருக்கும் இட்டலிங்க வழிபாட்டினாலேயே வினையைப் போக்கிக்கொள்ளலாம் என்னும் திடம் உடையவன் வீரசைவன். இதனை விட்டு உலகில் வேறு வேறு தலங்களில் உள்ள மூர்த்தியை வழிபட்டு வினையைப் போக்கிக் கொள்ளலாம் என விரும்பும் அறியாமை வீரசைவத்துக்குப் புறம்பான ஒழுக்கம் எனப்படும். கூர்த்த - மேலும் மேலும் வளர்ந்து பெருகுகின்ற; காசினி - உலகம்; ஏழை - அறிவிலி,

அங்கம் திருக்கோவில் ஆக்கி அமலலிங்கம்
அங்கு அருளால் தாபித்ததன் பின்பும் - பொங்கியதீச்
சூதக அங்கம் போலச் சூதகம் சுட்டும் புந்திப்
பாதகரும் பேதம் எனப்பார் 55

இத்தூல உடம்பைத் தீக்கையினால் தூய்மை செய்து ஆலயமாக ஆக்கி இதில் இட்டலிங்கப் பெருமானை எழுந்தருளச் செய்த பின்பும் இவ்வுடம்புக்குத் தீட்டுக்கள் உள்ளன என்று கருதுவது பாதகம், அது வீரசைவத்துக்குப் புறம்பான ஒழுக்கம் எனப்படும். சுட்டும் புந்தி நினைக்கின்ற அறிவு.

தான் அர்ச்சகன் ஆகித் தந்தை தாய் தாரம் மக்கள்
தான் நச்சிடும் எவரும் தம் பிறவி - ஈனக்
குலஒழுக்கம் குன்றாரைக் கூட்டிக் கலக்கும்
நலம் இலனும் பேதம் என நாடு. 56

ஒருவன் இட்டலிங்கம் அணிந்துகொண்டு அதனை வழிபடுபவனாக ஆன பின்னரும் அவ்விலிங்கம் அணியாத தன் தந்தை, தாய், மனைவி, மக்கள் மற்றும் விரும்பப்படும் உறவினர்கள் என்னும் தாழ்ந்த குல ஒழுக்கம் உடையவருடன் கூடிக் கலந்திருப்பது வீரசைவத்துக்குப் புறம்பான ஒழுக்கம் எனப்படும். நாடு - ஆராய்ந்து அறிக.

காட்டம் பலவும் கனலேயாய் நின்றதுபோல்
நாட்டும் பலசாதி நட்டம்உறத் - தீட்டும்
சிவதீக்கையாலே சிவசாதியேயாம்
நவம் அறியானும் பேதம் என நாடு. 57

விறகுகள் பல சாதியானாலும் நெருப்பிவிட்டால் நெருப்பு என ஒரு சாதியாக ஆய்விடும். அதுபோல உடம்பு வினை காரணமாகப் பல சாதியில் பிறந்தாலும் வீரசைவத் தீக்கையினால் சிவசாதி என ஒன்றேயாக ஆய்விடும். இப்புதுமையினை அறியாமல் மீண்டும் பழைய சாதி வேறுபாடு பாராட்டுதல் வீரசைவத்துக்குப் புறம்பான ஒழுக்கம் எனப்படும்,

சிவகுலத்தில் உற்பவித்த செல்வம் அறக்கேட்டால்
அவகுலத்தைச் சொல்லும் அவலச் - சவலையாய்
நின்ற நிலமாதினுக்கு நீண்ட பெரும் பாரமதாய்
நன்று இலனும் பேதம் என நாடு 58

தீக்கையால் சிவகுலத்தைச் சார்ந்தவனாயிருந்தும் உன்குலம் யாது எனக்கேட்டவர்க்குத் தீக்கை பெறுவதற்கு முன் இருந்த குலப்பெயரைச் சொல்வது வீரசைவ நெறிக்குப்

புறம்பான ஒழுக்கம் எனப்படும். இத்தகையவன் அவலமும் சவலையும் உடையவனாய்ப் பூமிக்குப் பாரமாய்த் தனக்குப் பயன் தேடாதவனுமாயிருப்பன்.

பற்றும் குரு கரத்தில் பாரப்பிறப்பு அகற்ற
உற்ற அருளாலே உதிப்பித்த—மற்றவரைத்
தந்தையார் என்ன முன்னம்தான் வினையினால் பிறந்த
தந்தை என்பதும் பேதம் தான. 59

தீக்கை செய்யும் பொழுது குரு மாணாக்கனுடைய பிறப்பு நீங்கும்படியாய் அவனைச் சிவபுத்திரனாகப் பிறக்கச் செய்கிறார், அத்தகையவனை ஒருவன் அணுகி உன் தந்தை யார் என்று கேட்டால் குருவினுடைய பெயரைச் சொல்லு தலே வீரசைவ நெறி. அங்ஙனமன்றி முன்னர் வினை காரணமாகப் பிறப்பித்த தந்தையின் பெயரைச் சொல்லுதல் வீரசைவத்துக்குப் புறம்பான ஒழுக்கம்.

பிறந்த ஊர் எது என்றால் பேரருளாம் ஆசான்
நிறைந்த கரத்தில் பிறக்கச்—சிறந்த ஊர்
தான் உரையாதே வினையால் தான் பிறந்த ஊர் என்னும்
மானம் இலரும் பேதமாம். 60

வீர சைவ தீக்கை பெற்றவனை ஒருவன் அணுகி நீ பிறந்த ஊர் எது என்று கேட்டால் குருவினிடத்துத் தீக்கை பெற்ற தலத்தின் பெயரைச் சொல்லுதலே வீர சைவ ஒழுக்கம். அங்ஙனமன்றி வினை காரணமாக முன் பிறந்த ஊரைச் சொல்லுதல் வீரசைவ நெறிக்குப் புறம்பான ஒழுக்கம் எனப்படும். அத்தகையவர் பெருமையற்றவராவர்.

செம்பைக் குளிகையதால் செம்பொன்னதாக்குதல் போல்
நம்பும் பிரசாதத்தை நல்லகுரு—வம்பான
எச்சில் நாவிட்டு இறக்கவே அருத்தி உண்டு பின்னும்
எச்சில் எனும் கொச்சையும் பேதம். 61

இரசவாதி செம்பை இரச குளிகையால் தூய்மையான பொன்னாக மாற்றுதல் போல் குரு தீக்கைக் காலத்தில் மாணாக்கனுடைய நாக்கில் இருக்கும் எச்சிலை மந்திரத்தால் தூய்மை செய்து சிவப்பிரசாதத்தை உண்ணச் செய்கிறார். இத்தகைய தீக்கையைப் பெற்ற பின்னும் நாவில் எச்சில் உள்ளது எனக் கருதுவது வீர சைவ நெறிக்குப் புறம்பான ஒழுக்கம் எனப்படும்.

நோக்கால் பரிசத்தால் நுண்ணிய வாக்கால் பிறவி
ஆக்கும் உடலை அரன் உருவம்—ஆக்கினோம்
நாம் என்றவர்க்கு அதனை நம்பாத பாவிக்கும்
ஆம் இங்கும் பேதம் அது அம்மா 62

தீக்கையின் போது குரு மாணாக்கனுடைய பிறவிக்குக் காரணமான உடம்பைப் பார்வையாலும், தொடுதலாலும், உபதேசத்தாலும் சிவ உடம்பாகச் செய்தும் மாணாக்கன் அதனை நம்பாதிருப்பது வீர சைவ நெறிக்குப் புறம்பான ஒழுக்கம் எனப்படும்.

## வீரசைவரல்லாதார்க்குச் செய்யப்படுவது பேததீக்கை

செய்த சிவ தீக்கையினும் சேர்ந்த குருவாசகத்தும்
எய்தும் விசுவாசம் அற்ற ஏழையராய்—மையல் உறும்
புந்தி உடையார்க்குப் புகன்றனவாம் பேதம் அது ஆய்த்
தந்த சிவ பூசாதி தான் 63

குரு செய்யும் தீக்கையிலும் உபதேசத்திலும் நம்பிக்கையும் பற்றும்வைக்காத அறிவிலிகளாய் மயக்கம் அடைந்தவர்க்குச் செய்யும் தீக்கை பேத தீக்கையாம். அவர்கள் செய்யும் பூசையும் பேத பூசையாம்.

## மாணாக்கன் வினா

பேதம் அதுஆம் பூசை என்றாய் பேதம் இலாப் பூசை
என்றாய்
ஈது அடியேற்கு இன்னம் இதன்பகுதி—நீதியுடன்
மெய்யா விரித்து உரைநீ மிக்க கருணாநிதியாம்
ஐயா சிற்றம்பல வாணா. 64

மிகுந்த திருவருளாகிய செல்வம் உடைய ஐயனே! சிற்றம் பலத்தில் வாழ்பவனே! பூசையால் பேதபூசை என்றும் அபேத பூசை என்றும் இரண்டுவகை கூறினாய். அதன் பகுதிகளை உண்மையாக எனக்கு விரித்து உரைத்தருள்க.

## குருவிடை - இப்பூசை முறை வாதுளாகமத்தில் உள்ளது

ஆகில் அவை நீ அறிய விரித்து உரைப்போம்
மோகக்குகன் அறிய முன்பு நாம்—தாகமுடன்
வாதுளம் தன்னில் வகுத்து உரைத்ததும் இதனை
ஓத மிகும் அன்பால் உணர். 65

இப்பூசை முறைகள் முன்பு முருகன் அறியும்படியாக வாதுளாகமத்தில் நாம் வகுத்துரை செய்தோம். அதனை இப்பொழுது உனக்கு விரித்துரைப்போம். அன்புடன் உணர்ந்து கொள்க.

## சிவபரம்பொருளின் பொது இலக்கணம்

நாமமொடு சாதி நயந்த குணம் கிரியை
ஆம் இவைகள் ஒன்றும்இலாது ஆம் அமலன் - நாம்அன்று
நின்ற உயிர்க்கு இரங்கி நின்மல சிற்சத்தியுடன்
நன்று இசைந்து நின்று அருளினால் 66

பஞ்சசத்தி தன்தன் பகுதியால் ஐந்து லிங்கம்
வஞ்சம் அறக்கண்டு அதனோடு ஆறுஆகிப் - பொஞ்சி உயிர்க்
காம் அழிந்து பாகம்உற ஆக்குதலே நம்பொதுஎன்
றேஉரைக்கும் ஆகமங்களே. 67

பரசிவமாகிய நமக்குப் பெயர், சாதி, குணம், தொழில், முதலியன சிறிதும் இல்லாமல் மலமில்லாது இருப்பதே நம் உண்மை நிலை, அத்தகைய நாம் நம்முடன் ஒன்றாய் நின்ற உயிரின் பொருட்டுப் படைத்தல் முதலிய ஐந்தொழில் செய்வதற்காக நம்முடன் பிரியாமல் இருக்கின்ற நின்மல சித்சத்தியுடன் கூடி நின்றோம். அந்த சித்சத்தியின் கூறுகளே பராசத்தி, ஆதிசத்தி, இச்சாசத்தி, ஞானசத்தி, கிரியாசத்தி என ஐந்தாய் விரிவடைந்தது. நாமும் பராசத்தியுடன் கூடிப் பராபரன் என்றும் ஆதிசத்தியுடன் கூடி ஈசுரன் என்றும் இச்சாசத்தியுடன் கூடி இச்சிதா என்றும் ஞானசத்தியுடன் கூடி ஞாதா என்றும் கிரியாசத்தியுடன் கூடிக் கர்த்தா என்றும் பெயர் பெற்று நின்றோம். அந்த ஐந்து சத்திகளில் பராசத்தியில் சிவ சாதாக்கியம் தோன்றும்: திரோதான் (ஆதி) சத்தியில் அமூர்த்தி சாதாக்கியம் தோன்றும். இச்சாசத்தியில் மூர்த்தி சாதாக்கியம் தோன்றும். ஞானசத்தியில் கர்த்திரு சாதாக்கியம் தோன்றும், கிரியாசத்தியில் கன்ம சாதாக்கியம் தோன்றும் சித்சத்தியில் மகா சாதாக்கியம் தோன்றும். ஆக ஆறு சத்திகளினிடமாக ஆறு சாதாக்கியம் தோன்றுவோம். இங்ஙனம் தோன்றி உயிர்களினிடத்து மிகவும் இரக்கம் கொண்டு அவைகளைப் பிணித்திருக்கும் மலம் பக்குவப்படும் வகையில் படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் தொழில்களைச் செய்வோம், இதனால் உயிர் மலம் நீங்கி முத்தியடையும். இதுவே நமது பொது இலக்கணம் எனப்படும்.

## ஆறும் மூன்றாகுதல்

ஆறும் அறிய அது நிஷ்களம் ஆதி
ஓதியிட மூன்றும்ஆம் மூன்றும் முன்னம் - நீதியினால்
ஓதும் குருலிங்க சங்கமமே என்று இனிதாய்
ஓதும் சிவ ஆகமங்களே 68

மேலே கூறிய ஆறு சாதாக்கியங்களும் நிஷ்களம் முதலிய மூன்றாக அடங்கும். மகா சாதாக்கியமும் சிவ சாதாக்கியமும் நிஷ்களம் (அருவம்) எனப்படும். அமூர்த்தி சாதாக்கியமும் மூர்த்தி சாதாக்கியமும் நிஷ்கள சகளம் (அருவும் உருவும்) எனப்படும், கர்த்திரு சாதாக்கியமும் கன்ம சாதாக்கியமும் சகளம் (உருவம்) எனப்படும். இம்மூன்றும் குருலிங்க சங்கமம் - நிஷ்களம் குரு. நிஷ்கள சகளம் - லிங்கம். சகளம் - சங்கமம் எனப்படும்.

## தத்துவமசியும் குருலிங்க சங்கமமும்

தற்பதமே சற்குருவாம் தொம்பதமே லிங்கம் அதுஆம்
அற்புதமா நல்ல அசிபதமே - பொற்பு உடைய
சங்கமம்தான் என்றே தகும் சுருதி வாக்கியத்தில்
தங்கும் பொருள் அறியத்தான் 69

வேதத்தில் உள்ள மகாவாக்கியமாகிய தத்துவமசி என்பதில் பொருந்தியுள்ள. பொருள் - தத் - சற்குரு, துவம் - இலிங்கம், அசி - சங்கமம் என அறிக.

குருலிங்க சங்கமம் - அறிவு அங்கம் உயிர்

ஆதலினால் லிங்கம் அது அங்கம் அதுஆம் சங்கமத்துக்கு
ஓதும் சரம் உயிர்ஆம் அவ்உயிர்க்குப் - போதம் அது ஆய்
நிற்கும் குருபரனே நித்தியம்ஆம் மும்முதலும்
நிற்கும் ஒன்றை ஒன்று விடாமல் 70

மேற்கூறிய குருலிங்க சங்கமங்களுள் அசிபதப் பொருளாகிய சங்கமம் என்னும் நிலையில் துவம்பதப் பொருளாகிய லிங்கம் அங்கமாகவும் தற்பதப் பொருளாகிய குரு அறிவாகவும் நின்று ஒன்றையொன்று விட்டு நீங்காமல் அத்துவிதமாக் நிற்கும். தத் - அறிவு; துவம் - உடல். அசி என்பது உயிர், உயிர், உடம்பு, அறிவு, மூன்றும் ஒன்றை விட்டு ஒன்று நீங்காமல் கலந்திருக்கிறது என்பது கருத்து.

இப்பாடலுக்குப் பழைய உரை விளக்கம் வருமாறு : 'மும்முதலாகப் பகுத்துக் கூறியது கிரியா பேதம், முதல் ஒன்று என்பதே கருத்து. இன்னும் இதன் கருத்து இவ்வுயிரை இரட்சிக்கவேண்டும் என்னும் சுத்த சிவத்தின்து நினைவு லயம், அதுவே சங்கமம். அந்நினைவுக்கு இடமாய் இரட்சிக்க வேண்டுவது இப்படி எனப் பகுத்தது போகம், அதுவே இலிங்கம், அப்பகுப்பின்படி அனுக்கிரகம் பண்ணின்து அதிகாரம், அதுவே குரு என்கையால் சங்கமத்துக்கு இருப்பிடம் லிங்கம்; சங்கம வியாபாரம் குரு. இன்னும் இதனை விரிக்கின் பெருகும். குரு முகத்தில் கேட்டு அறிக!

இவ்வுரை குரு, லிங்க சங்கமத்தில் முறையே அதிகாரம் லயம், போகம், என்பதனை அமைத்துக் காட்டுகிறது.

## சிவலிங்கம் அணியா விட்டால் குருலிங்க சங்கம சம்பந்தம் இல்லையாகும்

*நிற்கும் நிலை ஈதால் நின்ற லிங்கம் தன் உடனே*
*அற்புதமாம் அத்துவிதம் அற்றக்கால்—பொற்பு உடனே*
*ஆனகுரு சங்கமத்தில் அத்துவிதம் இல்லை எனத்*
*தான் உரைக்கும் ஆகமங்கள் தாம்.* 71

மேலே கூறியபடி, குரு, லிங்க, சங்கமம்—ஒன்றை விட்டு ஒன்று நீங்காமல் நிற்கும் நிலையினையுடைய சிவலிங்கத்துடனே தேகத்திற்குச் சம்பந்தம் இல்லையானால் குருவினுடனும் சங்கமத்துடனும் சம்பந்தம் இல்லாமல் போகும் என்று ஆகமங்கள் கூறுகின்றன.

## சிவலிங்கம் அணியாவிட்டல் சிவப்பிரசாதம் இல்லையாகும்

*இலிங்கத்தோடு அத்துவிதம் அற்றக்கால் மற்று இனிய*
*சங்கமத்தினோடு அரிய சற்குருவில்—தங்கியிடும்*
*அத்துவிதம் அற்றதனால் இல்லை பிரசாதம்என*
*உத்தமமாம் ஆகமம் ஓதும்* 72

சிவலிங்கம் அணியாவிட்டால் சங்கம சம்பந்தமும் சற்குரு சம்பந்தமும் இல்லையாகும். ஆகவே சிவப்பிரசாதம் இல்லையாகும் என்று உயர்ந்த ஆகமங்கள் கூறுகின்றன.

## சிவப்பிரசாதம் இல்லையானால் ஞானம் இல்லை ; பிறப்பும் அறாது

*பிரசாதம் அற்றால் பிறப்பு அறுக்கும் ஞானப்*
*பரம் ஆனது இல்லை. இல்லை ஆகக்—கரவுஆம்*
*பிறப்பு அறுவது இல்லை இல்லை என்று உயிர்மேல் அன்பின்*
*சிறப்பால் சிவாகமம் செப்பும்.* 73

சிவப்பிரசாதம் இல்லையானால் ஞானம் இல்லை. ஆகவே வஞ்சகமான பிறப்பும் அறாது என்று உயிர்கள் மேல் வைத்த மிகுந்த அன்பினால் ஆகமங்கள் கூறுகின்றன.

## சிவலிங்கம் அணிவதால் மட்டுமே குரு, சங்கம சம்பந்தம் உண்டாகும்

*வாக்கியம் ஈது ஆகையினாலே இலிங்கம் தன்னை விடாப்*
*பாக்கியம்ஆம் அத்துவிதப் பண்பு உடையார்க்கு—ஊக்கு*
*நல்ல குரு சங்கமத்தின் நாட அரிய அத்துவித [அரிய*
*வல்லபம் உண்டு என்றே மதி. 74*

இங்ஙனம் சிவாகம வாக்கியம் இருப்பதனால் சிவலிங்கத்தை உடம்பில் அத்துவிதமாக—விட்டு நீங்காமல்—அணிந்திருக்கும் நற்பேறு உடையவர்களுக்கு ஞானத்தில் செலுத்துகின்ற சிறப்புடைய குருவினுடனும் அத்துவிதக் கலப்பாகிய பெருமை உண்டாகும் என்று அறிக.

## ஆன்மா அங்கம் எனப்படும்

*எமக்குப் பொதுஆம் இனியலிங்க நாமம்*
*உனக்குப் பொது உடம்பு நீயா—மனக்கவலை*
*தன்னால் பிறந்து இறந்து தான் இனிய பாசம் உறல்*
*தன்னால் நீயே அங்கம் தான். 75*

பெயர், வடிவம் முதலியன இல்லாத சிறப்பியல்புடைய பரசிவமாகிய நமக்கு உன்பொருட்டு இலிங்கம் என்னும் பெயருடன் எழுந்தருளுவது பொதுவியல்பாகும். நம்முடைய சிவானந்தத்தை அனுபவிப்பதைச் சிறப்பியல்பாக உடைய உனக்கு மலம் காரணமாக உடம்பே நீ என இருப்பாது பொதுவியல்பு. மலத்தால் துன்பம் அடைந்து பல பிறவிகளில் பிறந்து இறந்து கன்மம் அனுபவித்து மலம் பக்குவப்படவேண்டியவனாக நீ இருக்கிறாய். ஆதலினால் நீ அங்கம் என்னும் பெயருடையவன் ஆவாய்,

ஆதலினால் லிங்கத்தோடு அங்கம் அகலாதத்துவே
நீதியுடன் நீ நம்மை நீங்காமை - ஈதுஎன்னக்
குன்றா மறையில் குலவும் மகாவாக்கியத்தில்
அன்று ஓதினோம் அது கேட்பாய். 76

பொதுவியல்பில் நமக்கு லிங்கம் என்றும் உனக்கு அங்கம் என்றும் பெயர் ஆன்று ஆதலினால் அங்கலிங்கம் ஒன்றை விட்டு ஒன்று நீங்காதபடி சிவலிங்கம் அணிந்திருப்பதே நீ நம்மை நீங்காதிருக்கின்ற அத்துவிதம் என்று வேதத்தில் மகாவாக்கியத்தில் முன்பே சொல்லி வைத்துள்ளோம். அதனைக் கேட்டு அறிக.

## தத்துவமசி - இலிங்க அங்க அயிக்கியம்

தற்பதமே லிங்கம் தகும் அங்கம் தொம்பதமா
நிற்கும் அசிபதமே நேர் அயிக்கப் - பொற்புஎன
அங்கலிங்க சங்கம்என அன்றே கருதி சொன்னோம்
தங்கிய சத்காரியத்தால் தான். 77

தத் என்னும் சொல்லின் பொருள் இலிங்கம் என்றும் துவம் என்னும் சொல்லின் பொருள் அங்கம் என்றும் அசி என்னும் சொல்லின் பொருள் இலிங்க அங்க அயிக்கியம் என்றும், நாம் முன்பே வேதத்தில் சத்காரிய முறைப்படி கூறியுள்ளோம்.

## சிவபரம்பொருளுக்கு இட்டலிங்கம் உடம்பு

உயிர்க்கு உடலம்போல் உற்ற லிங்கம்தானும்
நயப்பு உடைய பிண்டம் நமக்கு - மயக்கம் அற்ற
அங்கப் பிரத்தியங்கம் அரும் சாங்க உபாங்கம் எனத்
தங்கும் இவை நான்கு இலிங்க அங்கம் 78

உயிருக்கு உடம்பு இருப்பதுபோல உருவம் கடந்த நமக்கு இட்டலிங்க உடம்பாக இருக்கும். இந்த இட்டலிங்கம் அங்கம், பிரத்தியங்கம், சாங்கம், உபாங்கம் என்ற நான்கு உறுப்புகளை உடையது.

## நால்வகை உறுப்பு; கன்மசாதாக்கியம் என்னும் பெயர்

ஆன சிரசு முகம் இதயம் அங்கம் மற்றை
ஆன பொறி பிரத்தியங்கம் அதாம் - ஈனம் இலாச்
சூலம் முதல் பத்தும் சொல்லும் சாங்கம் ஆடை முந்நூல்
மாலிகை சந்து ஆபரணமும். 79

சொற்ற உபாங்கம் இவை சொற்றவைகள் ஈரிரண்டும்
உற்ற அங்கம் ஆகும் உவப்பு உடனே - நல்தவத்தோர்
ஒன்றுஆகி நின்றிடலும் ஓர்ந்து தியானித்திடலும்
நன்றாகப் பூசை செய்தலும் 80

நோக்கிக் கருணை எய்தி நோன்பின் தகுதி தனக்கு
ஏற்கும் பேறு ஈயும் இயற்கையினால் - ஊக்க அரிய
ஆன கன்ம சாதாக்கியம் அபிதானம் நமக்கு இங்கு
ஆனது நீ அன்பால் அறி; 81

தலை, முகம், இதயம் என்பவை அங்கம் எனப்படும்; மற்ற உறுப்புகள் பிரத்தியங்கம் எனப்படும்; சூலம் முதலிய கருவிகள் சாங்கம் எனப்படும்; ஆடை, பூணூல், மாலை, சந்தனம். அணிகலன் ஆகியவை உபாங்கம் எனப்படும். நல்ல தவம் உடையவர்கள் இவ்வுறுப்புகளுடைய நம்மை நோக்கி மகிழ்ச்சியுடன் நிட்டை கூடுதல், தியானம் செய்தல், வழிபடுதல் ஆகியன செய்தலைப் பார்த்து இவர்களிடத்து அருள்கூர்ந்து அவர்கள் செய்த வழிபாடு முதலியவற்றின் தகுதிக்குப் பொருத்தமான பயன்களைத் தருவோம். இதனால் நமக்குக் கன்ம சாதாக்கியம் என்னும் பெயர் உண்டு என்பதனை அன்புடன் அறிக,

சூலம் முதலிய பத்து :-

முந்நூல் - பூணூல்; மாலிகை - மாலை; சந்து - சந்தனம், ஒன்றாகி நிற்றல் - நிஷ்டை கூடியிருத்தல்; அபிதானம் - பெயர்.

## சிவசம்பந்தம் நான்கு வகை

*காணப்படுமே நாம் கட்டுரைக்கும் சைவம் நம்மோடு*
*ஆனமுடன் சம்பந்தம் ஆனவரே - பேணுசைவ*
*சம்பந்தம் நாலுவித சம்பந்தம்தான் ஆம் அச்*
*சம்பந்த பேதம் உரைப்பாம்.* 82

நாம் உயிர்க்கு உறுதியுண்டாம் வகையில் கூறும் சைவம் நம்முடன் அன்போடு சம்பந்தம் கொள்ளும் வகையில் நான்கு விதமாக இருக்கும். அதனை உரைப்போம்.

## நால்வகைச் சைவம்

*வீரசைவம் சுத்தசைவம் மிக்க மிசிர சைவம்*
*சாரும் சாமானியமாம் சைவம் என - ஓரில் இவை*
*நான்கும் சம்பந்தம் நாட்டும் இதன் பகுதி*
*ஈங்கு உரைப்பக் கேள் சத்தியம்* 83

ஆராய்ந்து பார்த்தால் வீரசைவம், சுத்தசைவம், மிசிர சைவம், சாமானிய சைவம் என்னும் இவை நான்கும் சிவசம்பந்தம் உடையன. இவற்றின் வேறுபாட்டினை இப்பொழுது உண்மையாகச் சொல்வோம். கேள்,

## சரியை - சாமானிய சைவம்

*கண்டிகை நீறு கருது தண்டு குண்டிகையாய்க்*
*கண்ட உபாங்கம் இதில் காதலொடு - மண்டியநல்*
*தீக்கை குருவால் செறிந்து அணிந்து முப்பொழுதும்*
*ஊக்க அனுட்டானம் உஞற்றி.* 84

நாம் இருக்கும் கோயில் நயந்து அணுகி நன்றி செய்தல்
தாம் இயற்றிப் பாடித் தளர்ந்து உருகித் - தாம் இனிது
சுற்றிப் பல்கால் பணிந்து தொடர்வொடு அகல்வு
உற்ற சரியை உணர் 85

மற்று இவர்க்குக் கற்புமதி இலிங்கம் கண்ட இடத்து
உற்று வழிபாடு செய்தலே அன்றி - மற்று இதுவே
என்னும் கற்பு இல்லா இயற்கையால் பேர் இவர்க்கு
மன்னும் சாமானிய சைவம். 86

நல்ல குருவினிடத்து நெருங்கிய தீக்கை பெற்றுக் கண்டிகை, திருநீறு, தண்டம், கமண்டலம் ஆகிய உபாங் கங்களை அன்புடன் அணிந்து, மூன்று வேளையும் ஊக்க முடன் அனுட்டானம் செய்து, நாம் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலை அடைந்து திருவலகிடுதல் முதலிய நல்ல செயல்களைச் செய்து தோத்திரங்கள் பாடி, உடல் தளர்ந்து மனம் உருகி வலம் வந்து பல் முறை பணிந்து அத்தொடர்பு மனத்தில் நீங்காதிருக்கும்படிப் பிரிந்து செல்லுதல் சரியை நெறியாம். இந்நெறியில் நிற்போர் பொதுவாக சிவலிங் கத்தை எங்கு காண்கின்றார்களோ அங்கு வழிபாடு செய்வர். இன்ன சிவலிங்கம்தான் வழிபடுவதற்கு உரியது எனச் சிறப்பாக ஒன்றைக் கொண்டு வழிபடும் கற்பு இல்லாதவர். ஆதலினால் இவர்க்குச் சாமானிய சைவம் என்று பெயர் ஆயிற்று.

## மிசிர சைவம்

சாமானிய மாகும் சைவம்இது மற்றுஇவர் போல்
ஆம்அரிய சாங்கம் உபாங்கம் அணிந்தே—சேமம்உடன்
நல்லசிவலிங்கம் நண்புடன் ஆசான் அருளால்
அல்லல் அறப்பெற்று அவ்அரனை. 87

சவுரம்முதல் சண்ட அந்தம் ஆவரணம் எல்லாம்.
அவரவர் தம் மந்திரத்தால் அர்ச்சித்து—எவரையும் தாம்
அர்ச்சிக்கும் நல்அரனே ஆம்என்னப் பாவிக்கும்
கற்பு மிசிரசைவம் காண். 88

சாமானிய சைவர்களைப் போலவே திருநீறு முதலியவற்றை அன்புடன் அணிந்து குருவினிடம் தீக்கைபெற்று அவரால் பாதுகாப்பாக ஒரு சிவலிங்கம் அளிக்கப் பெற்றுக் கொண்டு, அதனை வழிபடும் போது சூரியன் முதலாகச் சண்டேசர் இறுதியாகத் திருச்சுற்றில் உள்ள தெய்வங்களை அவரவர்க்குரிய மந்திரங்களால் வழிபட்டுப் பின்னர் எல்லா மூர்த்திகளையும் தன்னால் வழிபடப்படும் சிவபெருமானே எனக்கருதி ஒருமை மனத்துடன் வழிபடுவது மிசிர சைவம் என அறிக.

## மிசிரம் — பெயர்க் காரணம்

ஈங்கு இவர்கள் தாம் பூசை இல்லாரேரோடு உண்டல் முதல்
ஆங்கு அவைகள் வர்ச்சியார் ஆதலினால்-ஓங்குபெயர்
தான் மிசிரம் என்று தகுதியுடன் ஆகமங்கள்
தான் மிகவும் சொல்லியிடும் தான். 89

இங்ஙனம் ஓரிலிங்கத்தை மட்டும் வழிபடும் இவர்கள் சிவபூசை இல்லாத மற்றவர்களுடன் உண்ணல் முதலியவற்றை நீக்காமல் கலந்து கொள்ளுதலினால் இவர்களுக்கு மிசிரசைவர் என்று ஆகமங்கள் பெயர் கூறும். மிசிரம்-கலப்பு.

## சுத்த சைவம்

சொல்லும் உபாங்கம்-சாங்கம் சோர்வு அறவேதான் இனிய
-நல்ல சிவதீக்கையினால் நன்கு அணிந்து—சொல்லியநல்
பூசைக்கு அதிகாரம் பொற்புஉற ஆசான் அருளால்
பேசிய நல்தீக்கையும் பெற்று. 90

ஆவரண தேவதையும்ஆம் சவுர சண்ட அந்தம்
ஆவதுவும் லிங்கம் அது ஆவது அறிந்து—ஆவலுடன்
மந்திரமும் தந்திரமும் முத்திரையும் மற்றும் மிக
உந்தும் உபசாரம் ஈரெட்டும் 91

வாகனமும் சந்தும் மகிழ்கர்ப்பூரம் புழுகும்
ஆகும்இவை ஒன்றில் ஒன்று இன்று ஆகாமல்—ஆகும்
கருஷணை ஆதிப்பிரதிட்டை அந்தம் ஆதி
வருபிரதிட்டை உச்சவ அந்தம் 92

உச்சவம் அது ஆதீஉள பிராச்சித்தம் அந்தம்
அர்ச்சனைகள் சிங்காதனம் அதனில்—நிச்சயமாம்
ஆதார சத்திமுதல் உன்மனை அந்தம்
ஓதியநல் பீடம் அர்ச்சித்து 93

நல்ல அரனை நயந்துசிவ ஆசனத்தில்
மெல்ல இருத்தி விருப்பினால்—அல்லல் அறப்
பூசித்து மந்திரமே ஆதிபொருள் ஈறாகப்
பேசும் அதில் லோபம் அறப்பின் 94

சொல்லும் பிராச்சித்தம் முற்றும் சோர்வு அறவே செய்து அசுத்தம்
புல்லல் அறச் சுத்தமாம் பொற்பினால்—நல்ல பெயர்
சுத்தசைவம் ஆகும் இதுசொல்லில் இரண்டு ஆகும் இவைக்கு
ஒத்த பெயர் சொல்வோம் உணர் 95

திருநீறு உருத்திராக்கம் முதலியவற்றைச் சோர்வின்றி அணிந்து குருவினிடத்தில் தீக்கை பெற்றுப் பூசை செய்யும் அதிகாரம் பெற்றுத் திருச்சுற்றில் உள்ள தெய்வங்களையும் சூரியன் முதல் சண்டேசர் இறுதியாக எல்லோரையும் சிவம் எனவே கண்டு விருப்பத்துடன் மந்திரம், தந்திரம், முத்திரை மற்றும் பதினாறு வகை உபசாரங்களில் குறைவின்றிச் செய்து பரார்த்த பூசைக்கு வாகனம், சந்தனம், கர்ப்பூரம், புனுகு முதலிய பூசைக்குரிய பொருள்களில் ஒன்றும் குறை

யாமல் தேடிவைத்துக் கொண்டு, திருக்கோயில் கருஷணை முதல் பிரதிட்டை ஈறாக முறைப்படிச் செய்து அமைத்துக் கொண்டு, உச்சவ மூர்த்திகளையும் அமைத்துக் கொண்டு, அதில் குறை வந்தால் அதற்குப் பிராயச்சித்தம் செய்து வழிபடுவதும் அவ்வாறே ஆன்மார்த்த பூசைக்கு சிவலிங்கப் பெருமானை ஒரு சிம்மாசனத்தில் எழுந்தருளுப்பண்ணி ஆதாரசத்தி முதலாக உன்மனாசத்தி ஈறாக ஒதிய பீடங் களில் அருச்சனைப் பண்ணி பின் அவ்இறைவனை சிவ ஆசனத்தில் இருத்தி விருப்பத்துடன் வழிபட்டு, அவ்வழி பாட்டில் மந்திரம், பொருள் முதலியவற்றால் அறியாமல் நேர்ந்த குறைகளுக்குப் பிராயச்சித்தமும் செய்து, அசுத்தம் சிறிதும் சேராமல் சுத்தமுடன் வழிபாடு செய்வது சுத்த சைவம் எனப்படும், இதுவும் இரண்டுவகையாகும், அதனை இனிச் சொல்வோம்,

கருஷணை—சிவபெருமானை எழுந்தருளச் செய்யும் இடத்தை உழவு முதலியவற்றால் சுத்தப்படுத்துதல்.

## சுத்த சைவம் இரண்டு வகை

ஆனபரார்த்தம் ஒன்றுஒன்று ஆன்மார்த்தம் ஆம் என்னத்
தான் இனிய சைவ நூல்தான் உரைக்கும்—ஆன இவை
தாம் இரண்டும் பூசிரிப்பர் தங்கும் சிவத்துவாசர்
ஆனவர்கள் என்றே அறி 96

சுத்தசைவ வழிபாடு பரார்த்தம் என்றும் ஆன்மார்த்தம் என்றும் இரண்டு வகைப்படும் என்று சிவாகமங்கள் கூறும். இவ்விரண்டிலும் பூசிப்பதற்கு உரியவர் ஆதி சைவர் எனப் படும் சிவப்பிராமணர்கள் (குருக்கள்) ஆவ என அறிக.

பரார்த்தம்—திருக்கோயிலில் உள்ள சிவலிங்கத்தில் பூசை செய்வது. ஆன்மார்த்தம்—தனக்காகக் குருவினால் தரப்பட்ட சிவலிங்கத்தில் பூசைசெய்வது.

## பரார்த்தத்துக்கும் ஆன்மார்த்தத்துக்கும் உரியவர்கள்

சொல்லும் சிவத்துவசர் சொற்ற இரண்டு அர்ச்சனைகள்
அல்லும் அறச்செய்தல் அறமாகும்—அல்லாதார்
ஆம்வருணம் நாலினுக்கும் ஆன்மார்த்த பூசை செய்ய
யாம் பரிவால் உரைத்த தாம் 97

ஆதி சைவர்கள் ஆன்மார்த்தம், பரார்த்தம் என்னும் இரண்டிடத்திலும் வழிபாடு செய்தல் முறைமை என்பதும் மற்ற நான்கு வருணத்தாரும் ஆன்மார்த்த வழிபாடு செய்தல் முறைமை என்பதும் நாம் ஆகமத்தில் சொல்லிய முறைமையாகும்.

ஓதுகின்ற நால்வருணத்து உற்றவர் தாம் சுத்தர் என
ஓதும் பரார்த்தத்தைப் பூசிக்கில்—நீதிகுன்றும்
பஞ்சம் அது ஆம் பார்வேந்தர்க்கு இன்னாா ஆம்
அஞ்சப் புவி கலகம் ஆம் 98

சொல்லப்பட்ட நான்கு வருணத்தில் உள்ளவர்களும் குறைவின்றிச் சிவவழிபாடு செய்வதால் சுத்த சைவர் எனப்பட்டாலும் இவர்கள் பரார்த்தலிங்கத்தில் பூசை செய்தால் உலகில் நீதி குன்றும்; பஞ்சம் உண்டாகும்; அரசர்க்குத் துன்பம் உண்டாகும்; உலகில் கலகம் உண்டாகும்.

ஆதிசைவர் என்னும் வகை நால்வகை வருணத்தை நீக்கியே எண்ணப்படுகிறது. நூல்களில் நால்வகை வருணம் அன்றி வேறு வருணம் கூறப்படாமையால் நால்வகை வருணத்தாரிலும் பரார்த்த பூசைக்கு உரிய தீக்கை பெற்றவர்கள் ஆதிசைவர் எனப்படுவர்: இங்ஙனம் தீக்கை பெற்றவரே பரார்த்த பூசைக்கு உரியவர் என்பது கருத்து.

## சுத்த சைவம் என்னும் பெயர்க் காரணம்

முப்பொறியால் மந்திரமே ஆதி பொருள் ஈறாகச்
செபிபிவரும் உச்சவம் அது அந்தமா—முப்பொழுதும்
செய்து அவ்வயில் லோபம் அதால் சேரும் அசுத்தம் எனும்
அல்லல் அறவே பிராச்சித்தம் 99

*சொற்றபடி செய்து சுசியாய் அசுசி நீக்குதலால்*
*உற்ற பெயர் சுத்த சைவம் ஒன்னச்—சொற்ற பெயர்*
*என்று ஆகமங்கள் இயல்பா எடுத்து உரைக்கும்*
*இன்று ஓர்ந்து அறி அஃதினால்* 100

மனம், மொழி, மெய்களினால் மந்திரம் முதலாக வழிப்பாட்டுக்குரிய பொருள் இறுதியாகவும் கருஷணை முதல் உச்சவம் இறுதியாகவும் காலை, பகல், மாலை என்னும் மூன்று வேளையிலும் சிவவழிபாடு செய்து, அவ்வழிபாட்டில் நிகழ்ந்த தாழ்வுகளால் அசுத்தம் சேர்ந்தது என்று உணர்ந்து, அதற்கு ஆகமங்களில் கூறியபடி பிராயச்சித்தம் செய்து அசுத்தத்தை நீக்கிச் சுத்தமாக வழிபடுவதனால் இவர்களுக்கு ஆகமங்களில் சுத்த சைவர் எனப் பெயர் கூறப்பட்டது என்பதை நுண்மையாக ஆராய்ந்து அறிக.

## வீரசைவ தீக்கையே அத்துவிதத்தை விளக்கும்

### தீக்கை

*கல்நாய் அதனைக் கனகமயம் ஆக்கியக்கால்*
*பின்நாய் எனும் பேர் பிழைபடா—அன்னதனால்*
*தீயபொருள்கள் தினம் சுசி செய்யும் தீக்கை*
*ஆயவும் பேத தீக்கை* 101

கல்லால் செய்யப்பட்ட நாய் உருவைச் சித்துவல்ல ஒருவன் பொன்னாக மாற்றினாலும் நாய் என்னும் பெயர் மாறாது. நாய் என்னும் உருவமும் பெயரும் மாறினால் தான் அதன் இழிவு நீங்கும். அது போல மல சம்பந்தமான இவ்வுடம்பை நாள்தோறும் சகநீகரணம், நியாசம் முதலியவற்றால் சிவமானதாகப் பாவிப்பதனால் இவ்வுடம்பின் இழிவு மாறாது. தீக்கையினால் உடம்பைச் சுத்தமாக்கிச் சிவ உடம்பாக மாற்றிச் சிவலிங்கமும் அணிந்து அதனைச் சிறிதும் நீங்காதிருப்பதனால் மட்டுமே இவ்வுடம்பின் இழிவு நீங்கும். எனவே வீரசைவமில்லாத தீக்கை உயிருக்கும் இறைவனுக்கும் பேத சம்பந்தத்தையே தரும்.

முப்பொறியும் மந்திரமும் முற்றும் திரவியமும்
தப்பு அறவே பாசத் தகுதியால்—இப்பொருள்கள்
யாவும் திரவியம்ஆம் ஆன்மாவுக்கு ஆதலினால்
யாவும் உயிர்க்குப் பேதம் ஆம் 102

மனம், மொழி, மெய் என்னும் மூன்று கருவிகளும், மந்திரங்களும் மாயாகாரியங்கள் ஆதலினால் இவை ஐயத்திற்கிடமின்றிப் பாசம் என்னும் தன்மையுடையன. எனவே அறிவாகிய ஆன்மாவுக்குச் சடமாகிய இப்பொருள்களால் சிவசம்பந்தம் உண்டாகாது, எனவே இவற்றை மட்டும் கொண்டு செய்யப்படும் தீக்கை பேத நெறியையே காட்டும்:

பேதம் அது ஆன பெரும் பொருள்களால் சிவனை
நீதியினால் அக்ச்சித்து நின்றதால்—தீது அகன்ற
பேறும் சாலோகமோடு சாமிப்பியம் என்னக்
கூறும் சிவாக மங்கள் 103

மேலே கூறிய பேத சம்பந்தமான மாயாகாரியமாகிய பொருள்களைக் கொண்டு சிவபரம்பொருளை முறைப்படி வழிபட்டாலும் அதனால் பெறும் பேறும் சாலோகம் சாமீப்பியம் என்னும் பெயருடைய பேதப் பேறாகவே இருக்கும் என்று ஆகமங்கள் கூறுகின்றன.

சொல்லும் அருச்சனைகள் சொற்ற புறப்பூசை என்றும்
சொல்லியது ஈது அன்றியும் நீ சொல்லக் கேள்-வல்லமகா
வாக்கியத்தின் முப்பதத்தின் வாய்மையினாலே புறம்என்று
ஆக்கியது நாமம் அறி 104

மேலே கூறிய வழிபாட்டினைப் புறப் பூசை என்று கூறியது மாயாகாரியமாகிய பொருள்களைக் கொண்டு பேதமாக வழிபடுதல் என்ற காரணத்தால் மட்டுமன்று; வேதங்களில் சொல்லப்பட்ட மகா வாக்கியத்தோடு பொருந்தாமையாலும் பேதவழிபாடு என்று சொல்லப்பட்டதென அறிக.

மகாவாக்கியங்களாவன :- தத்துவமசி, சிவத்துவமசி, முதலியன, இவ்வாக்கியங்கள் அது நீ ஆனாய். சிவம் நீ ஆனாய் என்னும் பொருள்களை உணர்த்தும். மேலே கூறப் பட்ட வழிபாடுகள் சிவம் வேறு நீ வேறு என இருந்து வழி படுவதால் பேதவழிபாடு எனப்பட்டது: வீரசைவத்தில் மாயாகாரியமாகிய உடம்பு தீக்கையினால் சிவ உடம்பாகச் செய்யப்பட்டுச் சிவத்துக்கு அங்கமாகப் பிரிப்பின்றி இருந்து அபேதமாக வழிபாடு செய்வதால் வீரசைவ 'வழி பாடு மகாவாக்கியத்துக்குப் பொருந்துவது என்பது கருத்து.

## சற்காரியத்தால் சற்பத்தி தோன்றும்

பெத்தம் முத்தி இரண்டி னிலும் பேராத அத்துவிதம்
ஒத்துறுதல் சற்காரியம் என்னும்—புத்தி அது
உண்டாகச் சத்திபதிய வரும் நூல் உணர்ந்து
கொண்டு ஆரும்பத்தி உதிக்க 105

உயிர் கட்டு நிலையிலும் வீட்டு நிலையிலும் சிவத்தை விட்டு நீங்காது அத்துவிதமாகக் கலந்திருப்பதே சத்காரிய வாதம்; இந்த உணர்வு உண்டானால் அவ்வுயிரினிடத்து இறைவனுடைய திருவருட்சத்திபதியும்; அதனால் பதி, பசு, பாசங்களின் உண்மை நிலையினை நூல்வழியால் உணரலாம், அதனால் இறைவன் மேல் நீங்காத சத்பத்தி தோன்றும்.

## உண்மையான அத்குவிதத்தை தரும் தீக்கை

பொற்கட மானவப் புலவன் பொங்குதழலில் உருக்கி
அற்புதமாம் சிங்கஉரு ஆக்குதல்போல்—சற்குருவால்
சங்கற்பகாயம் அறச் சம்பு உருவாகி நிற்றல்
தங்கிய மெய்த் தீக்கை அதுதான், 106

பொன்னால் செய்த மதயானையின் உருவை ஓர் அறிஞன் நெருப்பில் உருக்கி யானையென்னும் உருவத்

த்தையும் பெயரையும் மாற்றிச் சிங்கம் என்னும் உருவும் பெயரும் அமைத்தாற்போல சற்குரு மாணாக்கனுடைய கன்மத்துக்கு ஈடாகப் பிரமன் நினைத்துப் படைத்த தேகத்தைத் தீக்கையினால் மாயமலி உடம்பு என்னும் பெயரை மாற்றிச் சிவ உடம்பாகவும் அதில் தங்கிய உயிரைச் சிவ சொரூபமாகவும் ஆக்கி இரண்டையும் இயைத்துக்கொடுப்பார். இதுவே உண்மையான அத்துவிதத்தைத் தரும் தீக்கை எனப்படும்.

வேட்டுவளி புழுவின் மேனிஅறத் தன்உருவம்
கூட்டுதல்போல் ஞானக்குருராயன் — தீட்டும்
மருள் யம் வாட்டி மகாலிங்கம் என்னும்
திருக்காயம் செய்தல் மெய்த் தீக்கை. 107

வேட்டுவ்ளி என்னும் குளவி பச்சைப் புழுவைப் பிடித்துக் கொட்டிக் கொட்டி அப்புழுவின் உருவத்தையும் பெயரையும் மாற்றித் தன்னைப் போன்ற குளவியாக மாற்றும். அதுபோல ஞானகுரு மாணாக்கனுடைய ம்யக்கம் செய்யும் மாயாதேகத்தைத் தீக்கையினால் மாற்றி மந்திர தேகமாகச் செய்து அத்தேகத்திலிருந்த உயிரையும் சிவசொரூபமாகச் செய்வதே உண்மையான அத்துவிதத்தைத் தரும் தீக்கையாகும்,

## வீரசைவ தீக்கையே அத்துவித தீக்கை

தீர்ன்என்னும் வீரசைவ தந்திரம் கண்டு ஆவலுடன்
ஊன்என்னும் காயம் ஒழித்துஅருள - ஆனகுரு
தேசிகனைக் கண்டு தினம் வழிபாடு அன்பு.அதனால்
ஆசையுடன் செய்து ஆசரனால் 108

சாங்கம் உபாங்கம் கருணை சற்குருவால் தீக்கை பெற்றிட்டு
ஆங்குஅது நீங்காதே அணிந்து அருளை — நீங்காத
இன்புமிகவே இசைந்து அகலாதே இருக்க
அன்புமிகும் ஆசை யால் 109

நல்உயிராம் தன்னை நல்வீரசைவமுடன்
வல்ல சைவ தந்திரமும் வன்மையுடன் — வல்ல
குருபரனால் நம்மைக் குறைவு அற அர்ச்சிப்பித்து
இருமைஅறல் வீரசைவமே. 110

தனக்கு ஒப்பின்றித் தானேயாக உயர்ந்து விளங்கும் வீரசைவ ஆகமங்களாகிய வீராகமம், வாதுளாகமம், அசிந்தியாகமம், மகுடாகமம் முதலியவற்றை அறிந்து பெரிய விருப்பத்துடன் மாயா தேகத்தினை மாற்றியருளக் கூடியவனும் சைவ ஆகமங்களுடன் வீரசைவ ஆகமங்களையும் நன்கு கற்று வல்லவனுமாகிய குரு தேசிகனைக் கண்டு நாள்தோறும் அன்பும் விருப்பமும் உடையவனாய் வழிபாடு செய்து, அக் குரு தேசிகனிடத்து சாங்கம் உபாங்கங்களாகிய திருநீறு முதலியன பெற்று அணிந்து, அவற்றைச் சிறிதும் விட்டு நீங்காமலிருந்து வீரசைவ தீக்கை செய்விக்கப்பெற்று வழிபாட்டு முறையில், சிறிதும் குறைவின்றி நம்மை வழிபட்டு இரண்டு என்னும் தன்மையின்றி அத்துவிதமாகக் கலந்து ஒன்றுபட்டிருப்பதே வீரசைவ நெறியாகும்.

## வீரசைவ வழிபாட்டின் பெருமை

அங்கம் உயிராய் உயிர்க்கு இங்குஆம் தொழில்கள்
செய்திடினும்
அங்கம் சுதந்திரமா? மற்றுஅதுபோல் — லிங்கம்அது
அர்ச்சிப்பித்துக் கொள்ளவல்லார் சுதந்திரம்அற்று
அர்ச்சிப்பர் வேறுஅற அம்மா! 111

நம் உடம்பு உயிருடன் வேற்றுமையின்றிக் கலந்து நின்று உயிருக்கு வேண்டியவற்றைச் செய்தாலும் உடம்பு இன்ப துன்பங்களை நுகரும் சுதந்திரம் உடையதாகுமா? ஆகாது. அதுபோல இட்டலிங்கம் முதலியவற்றை வழிபாட்டுடன் அணிந்து கொள்ளவல்லவர்கள் அவ்விலிங்கங்களுடன் வேற்றுமையின்றி வழிபடுவர். இத்தகைய வீரசைவ வழிபாடு மிகவும் பெருமையுடையதாகும்.

## வீரசைவ வழிபாட்டில் குற்றமும் இல்லை, பிராயச்சித்தமும் இல்லை

*தாம் அற்றதனால் தகும் பூசை செய்வதில்லை;*
*யாம் அற்றதனால் லோபம் யாதும் இலை: — ஆம் அதனால்*
*குற்றம் இல்லை; குற்றம்இல்லையாகப் பிராச்சித்தம்*
*மற்று அவர்கட்கு இல்லை இல்லையாம்.* **112**

தாம் என்ற சிவமும் யாம் என்ற ஆன்மாவும் வேற்றுமையின்றிக் கலந்து நின்று வழிபடும் வீரசைவ வழிபாட்டில் வழிபாடு செய்கிறோம் என்ற சிறு வேறுபாடும் இல்லை; இவ் வழிபாட்டில் குற்றம் வருவதற்குச் சிறிதும் இடமில்லை. எனவே இவர்களுடைய வழிபாட்டில் பிராயச்சித்தம் செய்ய வேண்டுவதும் இல்லை.

## வீரசைவ வழிபாட்டில் குற்றமில்லை என்பதற்குக் காரணம்

*தன்னைத் தந்தார்க்குத் தகுதி நமைக் நமைக் கொடுத்தல்*
*பின்னைக் கொடையில்லை பேசுங்கால்—அன்னதனால்*
*நாம் அவனாய் நின்று செய்வோம்; நம் செயற்குக் குற்றம் என்றும்*
*ஆவதில்லை ஆவதில்லை யாம்* **113**

சிவம் நமக்குத் தன்னையே தந்து நம்முடன் கலந்திருக்கின்றது. இக்கொடையின் பெருமையை அறிந்து கைம்மாறாக நாம் ஏதேனும் அவனுக்குக் கொடுக்க வேண்டுமென்று ஆராய்ந்து சொன்னால் அவனுக்கு நம்மையே கொடுத்து நாம் அவனாய்ப் பிரிவின்றி நின்று வழிபடுதலே தகுந்த கைம்மாறாகும். இங்ஙனம் செய்யும் வழிபாட்டில் எப்பொழுதும் குற்றம் சிறிதும் உண்டாவதில்லை என்பது உறுதி.

ஆவாகனமும் விசர்ச்சனமும் யாதும் இல்லை
ஆம் ஆம் அவர் பூசை ஆச்சரியம்—நாஆரச்
சொய்ல அவர்விரதம் சொற்கு அடங்கா ஆதலினால்
இல்லை அவர்க்கு இணையாக. 114

## வீரசைவ வழிபாடு ஒப்புமையில்லாதது

வீரசைவர்கள் எங்கும் நிறைந்து முழுநிறைவாயிருக்கும் வத்துடன் வேற்றுமையின்றி எப்பொழுதும் நீங்காது கலந் ிருப்பதனால் இவர் செய்யும் வழி பாட்டில் தம் வழி ாட்டை ஏற்றுக் கொள்ளுவது இறைவனை அழைத்து ஒரு ிருமேனியில் தங்கியிருக்குமாறும் செய்தலும் வழிபாடு ுடிந்தபின் அதனை விட்டுச் செல்லுமாறு வேண்டிவிடுத் லும் இல்லை. இவ்வழிபாடு மிகவும் வியப்பானது. இதன் பருமை சொல்லிக்காட்ட முடியாதது. இவ்வீர சைவர்க்கு ப்பானவர் யாரும் இல்லை.

## வீரசைவமே அத்துவித சைவம்

ஆதலினால் அத்துவித சைவம் அது வீரசைவம்
ஓதும் அதனில் உவப்பு நமக்கு—ஈது அல்லாது
ஆனதனில் அன்பு இன்றோ ஆம்என்னில் அப்பகுதி
யான் உரைப்ப நீ இன்று அறி. 115

மேற்கூறியவாறு எப்பொழுதும் சிவபரம் பொருளுடன் ிரிப்பின்றிக் கலந்து நின்று வழிபடுவதனால் அத்துவித சவம் என்னும் சிறப்புக்கு உரியது வீரசைவமேயாகும், ிவ்வழிபாட்டிலேயே சிவபரம் பொருளாகிய நமக்கு ிகவும் மகிழ்ச்சியுண்டாகும். இத்தகைய வீரசைவமல்லாத ற்றைய சைவ வழிபாட்டில் நமக்கு மகிழ்ச்சியில்லையோ னில் அதற்கு நாம் கூறும் விடையைக் கேட்டு அறிக.

## வழிபாட்டு முறைகளில் சிறிதும் குறைவின்றி வழிபடுவர் மேல் இறைவனுக்கு அன்பு அதிகம்

நிற்பனவாய் நில்லாது இயங்குதலால் நல்உயிர் மேல்
எப்பொழுதும் அன்பாம் இதில் நடக்கும் - பொறப்பு உடைய
ஆன உயிர்மேல் அதிகம் அன்புஅதுஆம் அவ்உயிராம்
மானிடர்மேல் அன்பு அதிகம்ஆம். 116

மானிடரின் நான்கு வருணத்து அதிகம் அன்பு
தான் அவ் வருணத் தகுதியால் - ஆனமறை
வேதியர்பால் அன்பு அதிகம் வேதியரில் கண்டிகைநீறு
ஈது அணிவார் பால் அதிகம் என். 117

மற்று இவைகள் தீக்கையினால் மன்னி அகலாது அணியப்
பெற்றவர்பால் அன்பு அதிகம்-பேசுங்கால் - மற்று இவையோடு
ஆம் தீர்த்தம் மூர்த்தி நலம் ஆனவைகள் சேவிக்கத்
தான் சரிப்பார்பால் அதிகம்தான் 118

இங்கு இவரின் நம் கோயில் எய்தி நம்மைச் சேவித்திட்டு
அங்கு அருந்துவோம் என்று அருவிரதம் - தங்குனர்பால்
அன்பு மிக்கது ஆகும் அவரில் அதிகம் சொல்லின்
இன்பமுடனே இயல்பாக 119

நம்மைப் பூசித்து அன்றி நாம் அருந்தோம் என்பவர்பால்
அம்ம அதிகம் அன்பு அது ஆம் அவரின் - நம்மைமிகும்
அர்ச்சனைகள் எட்டும் உபசாரம் ஈரெட்டும்
கற்பனை ஆயே விரதம் ஆய் 120

ஒன்று குறைந்தாலும் உண்ணாவிரதம் அது ஆய்
நின்று அருச்சிப்போம் என்று நிட்டை உடன் - குன்றாமல்
பூசிப்பவர்தாம் புனிதர் தம்பாலே மிகவும்
ஆசையுடையோம் என்று அறி. 121

ஓரிடத்தில் நிலையாய் நில்லாமல் இங்குமங்கும் இயங்குவனவாக இருக்கும் உயிர்களின் மேல் நமக்கு அன்பு அதிகம். அவற்றுள்ளும் ஊர்ந்து செல்லும் உயிரினமாக இல்லாமல் நடந்து செல்லும் உயிரினங்களின்மேல் நமக்கு அன்பு சிறிது அதிகம். அவற்றுள்ளும் மானிட உயிர்களின் மேல் அன்பு மேலும் சிறிது அதிகம். மானிட உயிர்களுள்ளும் கலப்பு வருணமாக இல்லாமல் அவ்வவ் வருணத்துக்குரிய ஒழுக்கம் உடையவர்கள் மேல் அன்பு மிக அதிகம். நான்கு வருணத்தார்களுள்ளும் அந்தணர்கள்மேல் அன்பு சற்று அதிகம். அவ்வந்தணர்களுள்ளும் உருத்திராக்கமும் திருநீறும் முதலிய சிவசின்னங்களை அணிபவர் மேல் அன்பு மிக அதிகம். சிவசின்னங்களையும் தாமே அணிந்துகொள்ளாமல் குருவினிடம் தீக்கைபெற்று அணிந்து, சிவசின்னங்கள் அணிதலுடன் நில்லாமல் மூர்த்தி, தலம், தீர்த்தங்களைத் தேடி யாத்திரை மேற்கொள்பவர்மேல் அன்பு இன்னும் அதிகம். யாத்திரை செல்பவர்களைக் காட்டிலும், நம் திருக்கோயிலை அடைந்து வழிபாடு செய்தபின்பே உணவு கொள்வோம் என்பதை விரதமாகக் கொண்டிருப்பவர் மேல் நமக்கு அன்பு மிக அதிகம். இன்னும் சொல்லப்போனால் எவ்வகையிலும் வழிபாடு செய்த பிறகன்றி - செய்வதற்கு முன்பு உண்ணோம் என்பவர் மேல் அன்பு மிக அதிகம். அவ்வாறு வழிபடும்பொழுது எட்டுவகை அருச்சனைகளும் பதினாறு வகை உபசாரங்களும் குறையாமல் வழிபாடு செய்வதை விரதமாகக் கொண்டு - அவற்றுள் ஒன்று குறைந்தாலும் உண்ணாவிரதம் இருந்து நிறைவாக வழிபடுவதை நியமமாகக் கொண்டு வழிபட்டு, நிட்டை கூடி நம்மைப் பிரியாமல் இருப்பவர் புனிதர் என்று சொல்லத் தகுந்தவராவர். அவர் மேல் நாம் மிகமிக ஆசை உடையவராக இருப்போம்.

## இவை அங்கசுகம்; சிவலிங்கபூசை

சொற்றவைகள் எல்லாம் அங்கசுகம் ஆதலினால்
உற்ற இவர் வேண்டல் உறும் பதங்கள் - பற்றும் அன்பால்
நம்மால் அவர் பெற்றார் நாடில் லிங்க அர்ச்சனை ஈது
அம்மா பிராண சுகம் கேள். 122

மேலே சொல்லப்பட்ட சிவசின்னம் அணிதல், தல யாத்திரை செய்தல், உபசாரங்களில் நிறை வழிபாடு செய்தல் எல்லாம் ஆராய்ந்தால் சிவலிங்க பூசை எனப் படும். இதனால் வருவது அங்கசுகமே. இவ்வொழுக்கம் உடையவர்கள்மேல் நாம் வைத்த அன்பால் நாம் அவர்க்குச் சாலோகம் முதலிய பதங்களைக் கொடுத்தோம். இனிப் பிராணசுகமாக இருக்கும் வழிபாடு இத்தகைய தெனச் சொல்வோம் கேள்.

## அறிவால் செய்யும் வழிபாடு - பிராணசுகம்

அழியாத ஆருயிரால் ஆவலுடன் நம்மை
ஒழியாமல் அன்பால் உருகித் - தெளிவாலே
அர்ச்சிப்பது நமக்கு இங்கு ஆன பிராணசுகம்
அர்ச்சனை செய்வார் இடத்து அம்மா. 123

அழியக்கூடிய உடம்பினால் பூசை செய்யாமல் அழியாத உயிர் அறிவினால் எங்கும் நிறைந்த நம்மை நீங்காமல் மிகுந்த அன்புடனும் ஞானத் தெளிவுடனும் வழிபடுவதே நமக்குப் பிராணசுகசுமான வழிபாடு. இவ்வழி பாடு மிகவும் வியப்புடையதாகும்!

## அறிவால் வழிபடும் வீரசைவ பூசை அளவிட்டுரைக்க முடியாதது

மக்கள் மேல் மாதர் மகிழும் அன்பினும் அனந்தம்
மிக்கது என்றாலும் அமையா மெய்ஆசை - மிக்க அதனைச்
சொல்ல என்றால் சொல்லுக்கு அடங்கா பிராணலிங்க
வல்லபம் ஆம் வீரசைவ வாழ்வு. 124

பிராண சுகமாகிய பிராணலிங்க பூசை செய்வார் மேல் நமக்குள் ஆசை குழந்தைகளின் மேல் தாய்க்கு உள்ள ஆசையைக் காட்டிலும் மிக்கது என்று சொன்னாலும் முழுமையாகச் சொன்னதாக ஆகமாட்டாது. ஒருவாறு சொல்லுக என்றாலும் அதன் பெருமை சொல்லுக்கு அடங்காதது. இது வீரசைவ வாழ்வின் பெருமையாகும்.

## வழிபாடுகளில் வீரசைவ வழிபாடு சிறந்தது

*மிக்கதுவால் பூசை என்ற பேரால் வேறுஅன்று என்னத்*
*தக்கதுஅன்று அதுஎன் என்னில் சாற்றக்கேள் - தொக்க*
*மாணிக்கம் வாழ்தருவில் கற்பதரு தேனுஅதில் [கல்லின்*
*காணின் மிக்க காமதேனு.* 125

*மிருகம்அதில் சிங்கம் மிகும் ஒலியில் வேதம்*
*உருவம்அதில் இலிங்கம் ஒளியில் - பெரிய கதிர்*
*தன்மம் அதனில் சிவதன்மம் அக்கரத்தில்*
*பன்னில் அருள் பஞ்சாக்கரம்.* 126

*சுவையில் அமுதம் இன்பில் சொல்லும் பேரின்பம்*
*சபையில் கனகசபை சாற்றும் - இவை இவைகள்*
*மிக்கதுபோல் பூசையினில் பூசை பிராணலிங்கம்*
*மிக்கது இது சத்தியமே மெய்.* 127

மேலே கூறிய வீரசைவ வழிபாடு மற்ற வழிபாடுகளைக் காட்டிலும் மிகுந்த சிறப்புடையது. வழிபாடு என்ற பெயர் ஒற்றுமையால் இதுவும் மற்ற வழிபாடுகளைப் போன்ற ஒரு வழிபாடே. அவற்றின் வேறான தனிச்சிறப்பு உடையது அன்று எனக் கருதவேண்டாம். எவ்வாறு எனில்? கற்களில் மாணிக்கக் கல் சிறந்தது; மரங்களில் கற்பக மரம் சிறந்தது; பசுக்களில் காமதேனு சிறந்தது; விலங்குகளில் சிங்கம் சிறந்தது; ஒலிகளில் வேத ஒலி சிறந்தது; தெய்வ உருவங்களில் சிவலிங்க உருவம் சிறந்தது; ஒளிகளில் சூரிய ஒளி சிறந்தது; புண்ணியங்களில் சிவ புண்ணியம் சிறந்தது. இவைகளைப்போல் வழிபாடுகளில் பிராணலிங்க வழிபாடாகிய வீரசைவ வழிபாடு சிறந்தது.

## சிவதீக்கை செய்வதற்குரிய குருமார்

*மெய்யாம் பிராணலிங்க அத்துவித வீரசைவர்*
*பொய்யாத வீரமுடன் புந்தி செய்யின் - மெய்யான*
*சாமானியம் ஈறாய்ச் சாற்றிய நால் தீக்கை செய்ய*
*ஆம்ஆகும் தேசிகர் அம்மா.* 128

*சுத்தசைவர் சுத்தம்முதல் மூன்றான தீக்கைசெய்ய*
*உத்தமர் தாம் ஆகும் உயர் மிசிரர் - வைத்த*
*இருவகைத் தீக்கைக்கு உரியர் சாமானியர்தாம்*
*ஒருவகைத் தீக்கைக்கு உரியரே.* 129

சிவதீக்கை செய்வதற்குரிய குருமார் யாவர் என ஆராய்ந்து பார்த்தால் உண்மையான பிராணலிங்கத்துடன் அத்துவித சம்பந்தம் உடைய வீரசைவ குருவே பொய்மை இல்லாத வீரசைவம், சுத்த சைவம், மிசிரசைவம், சாமானிய சைவம் என்னும் நால் வகைச் சிவ தீட்சைக்கும் உரிய வராவர். சுத்தசைவகுரு சுத்தம், மிசிரம், சாமானியம் என்னும் மூவகைச் சிவதீக்கைக்கு உரியவர். மிசிர சைவ குரு மிசிரம் சாமானியம் என்னும் இருவகைச் சிவ தீக்கைக்கு உரியவர் சாமானிய சைவகுரு அச்சாமானிய சைவம் என்னும் ஒரு தீக்கை செய்வதற்கு மட்டுமே உரியவர்.

## வீர சைவம் உயிர், மற்ற சைவம் உடம்பு

*ஆதலினால் அத்துவித வீரசைவமே சீவன்*
*ஓதுகின்ற சுத்தசைவமோடு அரிய—நீதியுள்ள*
*சாமானியம் ஈரும் சைவம் அஃது அங்கம் அஃது*
*ஆம் ஆம் எனும் ஆகமம்.* 130

எனவே அத்துவித சைவமாகிய வீரசைவமே நமக்கு உயிராக இருக்கும். சுத்த சைவம், மிசிரசைவம், சாமானிய சைவம் என்று சொல்லப் படுகின்ற அரிய முறைமையுடைய சைவங்

கள் மூன்றும் நமக்கு உடம்பாக இருக்கும் என்று ஆகமங் களில் கூறியுள்ளோம்.

## குருவை வழிபடும் முறைமை

சொற்றபடியே சொலும் சுத்த சைவர்முதல்
உற்றவர்க்குத் தாரதம்மியம் உள்ளதாம்—குற்றம் அற்ற
ஆன அதிகாரத்து அடைவாம் வழிபாடு
தான் இயற்றலே தகுதிதான்- 131

ஒன்றதனுக்கு ஒன்று ஒன்று உயர்ந்தது அத்தீக்கை என
நன்று அறிந்திட்டு அன்பால் அனவரதம்—நின்று
வழிபாடு செய்தல் அறம் செய்யாரே ஆகில்
இழிவார் பிறந்து நரகில்.

மேலே கூறியபடி நால்வகைச் சைவத்துக்கும் உரிய தனித் தனிக் குருமார்களிடையே ஏற்றத் தாழ்வு உண்டு. இதற்குக் காரணம் அவரவர் செய்வதற்கு உரிமையுடைய தீக்கை முறைமைகளே. தீக்கைகள் ஒன்றுக்கொன்று உயர்வு தாழ்வுடைமையால் இவற்றைச் செய்யும் குருமார் களிடையேயும் உயர்வு தாழ்வு உண்டு. அவரவர்க்கு உரிய முறையால் அன்புடன் வழிபாடு செய்தலே அறம். அங்ஙன மன்றி எல்லாரையும் ஒன்றாகக் கருதுபவர் மீண்டும் மீண்டும் பிறந்தும் நரகத்தில் அழுந்தியும் வருந்துவர்.

## வீரசைவ தீக்கை மூவகை

வீரசைவ தீக்கை விதிக்கில் ஒரு மூவகைத் தாம்
சீருடனே மற்று அதனைச் செப்பிடினே— வீரமுடன்
சாமானியம் விசேடம்பின் நிராபாரம்
ஆம் ஆம் பேர் ஈது அதற்கு அம்மா. 133

வீரசைவ தீக்கை மூவகைப்படும். அவற்றிற்கும் பெயர் வீரசாமானியம், வீரவிசேடம், வீரநிராபாரம் என்று சொல்லப்படும்.

## வீரசாமானிய தீக்கை—மும்மல நீக்கம்

*வீரதீக்கைக்கு விருப்பு மிக்கு வந்தவர்க்கு இங்கு*
*ஆரியனாம் ஆசான் உபதேசித்து—ஆடுகின்ற*
*மும்மலங்கள் நீக்கும் முறைமை அதுகேள் இருண்ட*
*இம்மைப் பிறவி அதனில்* **134**

*பிறந்த பிறவிப் பெரும் குடும்பக் கொத்துச்*
*சிறந்த குலத்தோடு செறியும்—இறந்த அன்பு*
*விட்டுச் சிவகுலத்தில் சென்மித்து அதனில் அன்பு*
*கட்டுறுதல் ஆணவம் நீங்கல்* **135**

*நீங்கி நின்றார் தாங்கள் நிகழ்சாதி வேந்தர் இவர்*
*ஈங்கு இழியும் சாதி என எண்ணாமல்—ஆங்கு நிற்றல்*
*மாயை மல நீக்கம்என மற்றுஇனிய ஆகமங்கள்*
*நேயமொடு சொல்லும் நினை.* **136**

*மூஏடணையின் முரணுடனே சென்றுமனம்*
*பாவாது அகற்றிப்பழவினைநல்—தேவுஉளது*
*தான்தருவன் என்று தளராமை கன்மமலம்*
*தான் அறவே நிற்கும் தரம்.* **137**

வீரசைவ தீக்கையினைப் பெறுவதற்கு மிகவும் விருப்பத்துடன் வந்த மாணாக்கனுக்கு மேலான குரு உபதேசம் செய்து அம்மாணாக்கனுக்குப் பொருந்தியுள்ள ஆணவம், மாயை, கன்மம் என்னும் மும்மலத்தையும் நீக்கும் முறைமையைக் கூறுகிறோம். முதலில் மிகவும் அறியாமையுடைய இப்பிறப்பில் மாணாக்கன் பிறந்த குடும்பம் சார்ந்த குலத்தை நீக்கி அவனைச் சிவகுலத்தில் பிறந்தவனாக ஆக்குகின்றார். இதனால் மாணாக்கனுக்கு ஆணவமலம் நீங்குகின்றது. பின்னர் மாணாக்கன் தான் பிறந்த சாதி உயர்ந்ததென்றும் மற்றவர்கள் பிறந்த சாதி தாழ்ந்ததென்றும் கருதாமல் எல்லாரும் ஐம்பூதத்தாலாகிய உடம்புடைய ஓரேசாதி என்னும் கருத்தில் நிலைபெறச் செய்

கிறார். இதனால் மாணாக்கனுக்கு மாயாமலம் நீங்குகின்றது, பின்னர் மாணாக்கனுடைய மனம் மண் ஆசை, பெண் ஆசை, பொன் ஆசை என்னும் மூன்று ஆசைகளின் வழியே பரவிச் செல்லாதபடி நமக்குவரும் நுகர்ச்சிகளெல்லாம் நாம் முன் செய்த பழவினையின்படியே இறைவனால் தரப்படுகின்றன; நமக்கு உள்ளதைத்தான் அவன் தருவான் என அறிந்து மனம் தளராமல் நின்று நுகரும் பக்குவத்தினைக் குரு அவனுக்குத் தருகிறார். இதனால் கன்மமலம் நீங்குகின்றது.

## வீரசாமானிய தீக்கைக்கு உரிய தகுதி

பரதாரத்தோடு பரதிரவியங்கள்
திரமாய் விடம்போல் தெசித்துப் - பரவும்
கொலை, களவு, கள், காமம் கூறு பரநிந்தை
சலம் இதனை விட்டு இனிதுதான் 138

வீரசைவ தீக்கை பெற விரும்பியவன் மேற்கூறியவாறு மும்மலங்களின் நீங்கிப் பிறன் மனைவி, பிறன் பொருள் ஆகியவற்றைக் கண்டால் நஞ்சைக் கண்டதுபோல நடுங்கிக் கொலை முதலிய பாவச் செயல்களையும் கைவிடவேண்டும்.

இங்கு இவைகள் எல்லாம் இனிய சிவதன்மமொடு
தங்கி வரும் அறத்தில் தாழ்வுஅது அற - அங்கு உறவே
வந்தது அன்றி வாராது அவைவிடம் என்றே அகலும்
சிந்தை திடம் ஆகிநின்று அதின் 139

சிவ புண்ணியமாகக் கூறப்பட்டவற்றைக் குறைவின்றிச் செய்தல் வேண்டும். நமக்கு என இறைவன் நியமித்ததன்றி நமக்கு வேறு நுகர்ச்சி வராது எனக் கருதி வந்ததை மட்டும் அருந்தி வராதவைகளுக்கு முயற்சி செய்யாமல் அவை நஞ்சு எனக் கருதி நீக்கி மனத்தை ஒரு நிலையில் வைத்திருக்க வேண்டும்.

இடம் பொருள் ஏவல் எனும் இவைகள் பூத
விடம் பட நின்றவைகள் வேண்டி - மடம்படவே
சற்குருவின் பாவகத்தால் தீக்கிப்பித்தே சிவனை
அற்புதமாய்த் தாபித்தல் ஆம் 140

இடம் பொருள், ஏவல் முதலியவாக ஐம்பூதங்களால் ஆகிய நுகர்ச்சிப் பொருள்களை ஞானகுருவின் முன் கொண்டுவந்து நிறுத்திப் பாவனா தீக்கையால் தூய்மை செய்தல் வேண்டும். ஏவலாளர்களுக்குச் சிவலிங்கம் அணிவித்தல் வேண்டும்.

குரு இடத்தும் இலிங்கத்தும் கோட்பாடு ஒன்றாகித்
திருவளரும் சற்குருவின் சேவை - உரிமையுடன்
ஏற்கில் அது செய்திட்டு இனியலிங்க சேவை செய் என்று
ஆக்கினைக்கு உட்பட்டவர்க்கு அன்பால் 141

குரு, இலிங்கம், அடியார் என்னும் மூன்றிடத்தும் வேறுபாடு கருதாமல் எல்லாம் சிவம் எனவே கண்டு ஞான குருவின் பணிவிடைகளைச் செய்யும் வாய்ப்புக் கிடைத்தால் செய்து, இலிங்கத்திற்குப் பணிவிடை செய்க என்று அக்குரு ஆணையிட்டால் அதற்கு இசைந்து அன்புடன் செய்தல் வேண்டும்.

விதித்த சமயாசாரம் ஆன சதாசாரம்
மதித்து அதனில் சற்றும் வழுவில் - கதித்த
தவ நரகத்து ஆழ்வர் எனத்தான் ஆகமங்கள்
அவம் அகலவே உரைக்கும் ஆம். 142

வீரசைவனுக்கு விதிக்கப்பட்ட சமயாசாரம், சதாசாரம் முதலிய ஒழுக்கங்களில் தவறாமல் ஒழுகுதல் வேண்டும். இதில் சிறிது தவறினாலும் மிகுந்த நரகப் பிறப்பை எடுத்து அதில் அழுந்துவர் என்று மக்களிடத்துள்ள வீண் செயல் நீங்கும் வகையில் ஆகமங்கள் வற்புறுத்திக் கூறுகின்றன.

*ஆணைதப்பேன் தப்பில் உயிரானது ஒழிப்பேன் என்று*
*காணும் அன்பால் நின்று உருகிக் காதலால் - வீண் ஆம்*
*பவம் அகற்று என்று அஞ்சிப் பரிவொடு தொண்டு ஆகும்*
*தவம் உடைமை கண்டு அருளால் தான்.* 143

இங்ஙனம் ஒழுகிக் குருவினை அடைந்து தங்கள் ஆணையின்படித் தவறாமல் நடப்பேன்; தவறு நேர்ந்தால் உயிர் விடுவேன் என்று உறுதி கூறி, அன்புடையவனாய் எனது பயனற்ற பிறப்பை நீக்குங்கள் என்று பிறவிக்கு அஞ்சி வேண்டிக் கொண்டு அன்புடன் தொண்டு செய்து வாழும் தவமுயற்கியை நோக்கி அவனுக்கு அருளுடன் தீக்கை செய்தல் வேண்டும்.

## தீக்கை முறை - வீரசாமானியம்

*முன்நாள் உபவாசம் முற்றுவித்துத் தாபித்த*
*மன்னுபஞ்ச கவ்வியம் அது அருத்தி - மன்னும் ஐந்து*
*பூதசுத்தியாகப் பொருந்திய தானம் தொட்டுத்*
*தீது அகற்றி மற்றை நாளில்* 144

தீக்கைக்கு முன்னைய நாளில் முழுப் பட்டினி இருக்கச் செய்யவேண்டும். பின் மந்திர விதிப்படி அமைக்கப்பட்ட பஞ்ச கவ்வியம் பருகச் செய்தல் வேண்டும். பின் உடம்பில் ஐம்பூதங்களும் தூய்மையடையும் வகையில் அததற்குரிய இடங்களில் தொட்டுத் தூய்மை செய்தல் வேண்டும்.

கோயில் மடம் மன்னும் குலவு நதிதீரம் மற்றும்
ஆயதரு நீழல் வனம் ஆம் இவற்றுள் - ஆய ஓர்பால்
தீக்கைக்கு இயல்பாகச் செய்து செல்வமண்டபம்தான்
தூக்கி விதானம் செய்து அதுள். 145

அடுத்த நாளில் கோயில், மடம், ஆற்றங்கரை, மரநிழல், நந்தவனம் போன்ற ஏதாவது ஓரிடத்தில் தீக்கைச் சடங்கு செய்வதற்குப் பொருந்திய மண்டபம் செய்து, மேற்கட்டி முதலியனவற்றால் அழகு செய்தல் வேண்டும்.

மந்திர மாநீரில் மகிழ்ந்து முழுகுவித்துச்
சந்தத் துகில் புனைந்து தான் ஒளியே - வந்த நல்ல
நீறு புனைவித்து நிகழ் சுகந்தமாலை சந்து
நூறு களபம் அணிவித்து. 146

பின் மாணாக்கனை மந்திரம் ஏற்றப்பட்ட நீரில் முழுகச் செய்து, அழகிய ஆடை அணியச் செய்து, முறைப்படிச் செய்யப்பட்ட திருநீறு அணிவித்து, மணம் மிக்க மாலை, சந்தனம், சாந்து ஆகியவற்றால் அவனை அழகு படுத்துதல் வேண்டும்.

மண்டபத்தின் உள்ளே மகிழஓர் தானத்தை
விண்ட மெழுக்கால் சதுரம் கொண்ட இடம் - கண்டு
அவ்விடத்து
உற்று அருக்கியம்தான் உரிமையுடன் தாபித்திட்டு
உற்று எதிராய் மற்று இருத்திப் பின். 147

பின்னர் மண்டபத்தினுள் ஓரிடத்தைச் சதுரமாக மெழுகி அமைத்துக்கொண்டு; அருக்கிய தீர்த்தத்தையும் அமைத்துக்கொண்டு மாணாக்கனைக் குரு தனக்கு எதிராக உட்கார வைத்தல் வேண்டும்.

காயசுத்தி பண்ணிக் கருதிய தானங்கள் தனில்
ஆய விபூதி அணிவித்து - நேயம் உடன்
தன்னைப் பணிவித்துச் சச்சிதானந்த ஒளி
துன்னும் சிவகரம் வைத்து 148

பின்னர், புறஉடம்பைத் தூய்மைசெய்து உரிய இடங்களில் திருநீறு அணியச் செய்து குருவாகிய தன்னை வணங்கச் செய்து தன்னுடைய கையைச் சிவத்தினுடைய கையாகப் பாவனை செய்து அம்மாணாக்கனுடைய தலையில் தொடுதல் வேண்டும்.

மற்று மைந்தன் தன்னை மகிழ்ந்து கருணையினால்
உற்ற கரம்பற்றி உவப்பினால் - உற்ற அருள்
சந்ததமும் நீங்காத் தகுதி பெறவே நினைந்து
தந்து சிவ சமுகத்தை 149

பின்னர் மாணாக்கனை மகிழ்ச்சியுடன் கருணை பொருந்திய கையினால் பற்றி அழைத்து வந்து திருவருள் எப்பொழுதும் நீங்காத நிலைமை அம்மாணாக்கனுக்கு அமையும்படியாகத் தியானம் செய்து அவனைச் சிவகணங் களின் முன்னிலையில் கொண்டுவந்து நிறுத்துதல்வேண்டும்.

தெண்டன் இடுவித்து அனுக்கிரகம் செய்வித்துக்
கொண்டுவந்து கும்பத்தில் தாபித்த - அண்டர்
பெருமானை அட்டாங்க பஞ்சாங்கத்தோடும்
உரிமையுடனே பணிவித்து. 150

சிவகணங்களை வணங்கச் செய்து அக்கணங்களின் அருளை மாணாக்கனுக்குப் பெற்றுத் தந்து பின் கலசம் இருக்கும் இடத்திற்கு அவனை அழைத்துவந்து அக்கலசத்தில் இடங்கொண்டிருக்கும் இறைவனை அட்டாங்கமாகவும் பஞ்சாங்கமாகவும் விழுந்து வணங்கச் செய்யவேண்டும்.

தனக்கு அங்கு எதிராகத் தன்மைந்தன் தன்னை
மனத்தின் இருள்மாள இருத்திக் - கனத்தவினை
கிட்டாது ஒழியக் கிருபையினால் கங்கணத்தை
இட்டம் உறவே கட்டிப் பின் 151

பின்னர், குரு மாணாக்கனுடைய மனத்தில் உள்ள அஞ்ஞான இருட்டு நீங்கும்படியாகத் தன் முன்னிலையில் உட்கார வைத்து, அவன் செய்துள்ள மிக அதிகமான வினைத்துன்பம் அவனை அணுகாதபடிக் கருணையுடன் அவன் கையில் விருப்பத்துடன் காப்புக் கட்டுதல் வேண்டும்.

கட்டிய தாரம் தன்கனைகழல் பொன்பாதத்தில்
கட்டியபின் நீறுடனே கண்டிகையை - இட்டம் உறச்
சொல்லும் விதிப்படியே சோர்வு அறச் சாத்தித் தரித்துப்
புல் இந்திய லிகிதத்தை. 152

பின் மாணாக்கனுடைய வலக்கையில் ஒரு கயிறு கட்டி அதனைக் குரு தன் அழகிய பாதத்துடன் இணைத்து மாணாக்கனுக்கும் தன்க்கும் தொடர்பு செய்து கொள்ளுதல் வேண்டும். பின் நூல்களில் சொல்லியுள்ள விதிப்படி திருநீறும் உருத்திராக்கமும் அணியச் செய்தல் வேண்டும்.

துடைத்து இலிங்க நல்லிகிதம் தூய்மையுடனே
அடுத்த நியாசத்தினால் ஆர - மடுத்ததன்பின்
மாயா போகத்தில் மகிழ்ந்துபற்றி நீங்காத
தீய மனம் தூய்மை உறவே. 153

பின் மாணாக்கனுடைய உடம்பில் உள்ள ஐம்பொறிகளுக்கு மாயா காரியம் என்றிருந்த பெயரை அழித்து இலிங்க சம்பந்தமுடைய பொறிகளாகத் தன் கையால் தொட்டுத் தூய்மை செய்தல்வேண்டும். அவ்வாறே மாய போகங்களில் மகிழ்ந்து பற்று வைத்திருக்கும் கெட்ட மனத்தையும் தூய்மை செய்தல் வேண்டும்.

அனல் உருவச் சோதி அது நினைந்து நல்ல
சலம்அதனிலே லிங்கம் தன்னை - இலகவே
வாசம்அது செய்து பின்பு ஆன விசுவாதிக பின்
தேசு அனைத்தும் என்று எடுத்தே. 154

நெருப்புப் போன்ற நிறமும் ஒளியும் உடையவன் எனச் சிவபெருமானை நினைந்து அப்பெருமானை அமைப்பதற்குரிய சிவலிங்கத்தைக் குற்றமற்றதாக ஆராய்ந்து எடுத்து அதனை நல்ல நீரிலே சிறிது காலம் இருக்கச் செய்து உலகங் கடந்த பொருளும் ஒளிகளுக்கெல்லாம் பேரொளியாக விளங்கும் பொருளும் இதுவே எனக் கருதி அதனை நீரில் இருந்து வெளியில் எடுத்தல் வேண்டும்.

சிலை சுத்திசெய்து பிரரணப் பிரதிட்டை பண்ணி
நிலவு தபனம் செய்து அபிடேகம் - இலகவே
ஆட்டியபின் ஆடைஅதுசாத்தி நல்லஒளி
நாட்டும் விபூதி தரித்து. 155

பின் அச்சிவலிங்கத் தூய்மை செய்து அதில் சிவபரம் பொருள் நிலை கொண்டிருக்கும்படிச் செய்து, அபிடேக தீர்த்தம் அமைத்து நீராட்டி, ஆடை அணிவித்து மிகுந்த ஒளியுடைய திருநீறு அணிவித்தல் வேண்டும்.

பூணநூல் பட்டாடை புகழ்கந்தம் அட்சதைபூ
சேண்உறச் சாத்தித் தூபம் தீபம் அது - வீண் அகல
அன்பால் சமர்ப்பித்திட்டு ஆன உபசாரம் எலாம்
இன்பம் உற எய்துவித்த பின் 156

பின் அச்சிவலிங்கத்துக்குப் பூணூல், பட்டாடை, வாசனைப் பொருள், அட்சதை, பூ முதலியவற்றை அணிவித்து மணப்புகை, தீபம் ஆகியன காட்டி மற்றும் உபசாரங்களும் இன்பமுடன் செய்தல் வேண்டும்.

நைவேத்தியம் பண்ணி நன்றாகத் தூய்மை செய்திட்டு
ஐயம்அறத் தாம்பூலம் அற்பித்து - மெய்ஆன
மந்திரபுட்பம் அணிந்து வந்தித்த பின்னர்
உந்தும் அனுட்டானம் உஞற்றி 157

பின்பு அமுது படைத்து, தாம்பூலம் அளித்து மந்திரம் ஓதி மலர் சாத்தி மாணாக்கன் அச்சிவலிங்கத்தை வணங்குமாறு செய்தல் வேண்டும் பின்னர் வீர சைவ அனுட்டான முறையை மாணாக்கனுக்கு அறிவித்துச் செய்ய வைக்க வேண்டும்.

பின்புமைந்தன் அங்கமாங்கத்தை மற்று இனிதுசோதித்திட்டு
இந்துதரனை அங்கத்தே தரித்து - மைந்தனைத்தான்
வாயுப்பிராணன்அற வாங்கிநல்லிங்கப் பிராணன்
தூய்மையுடன் செய்து அக்குரோதம் 158

பின்னர் மாணாக்கனுடைய [illegible] காரிய உடம்பை நன்கு சோதித்துத் தூய்மை செய்து சந்திரசேகரனாகிய சிவ பொருளைத் தலை முதலிய உறுப்புக்களில் அணிவிக்க வேண்டும். பின் ஐம்பூதங்களுள் வாயு வடிவாக இருக் கின்ற பிராணனைத் தூய்மை செய்து இலிங்கப் பிராண னாக அமைத்துக் கோபம் முதலிய தீய குணங்கள் நீங்கு மாறு செய்தல் வேண்டும்.

நன்றாய் அனுக்கிரகித்து நாடும்வினைஅது நீ
வென்றிடுவை என்று விபூதிப்பட்டம் - குன்றாமல்
கட்டி அவலிகிதம் காதில் சிவலிகிதம்
இட்டு இனிய அத்தமும் வைத்து. 159

கோபம் முதலிய கெட்ட குணங்கள் நீங்குமாறு அருள் செய்து இனி நீ வினைகளை வெல்வாய் என்று திருநீறு அணிவிக்கவேண்டும். பின் மானாக்கனுடைய காதில் வீணான ஒலிகள் அடையாதபடிச் சிவபரம் பொருளைப் பற்றிய ஒலியே கேட்குமாறு செய்தல் வேண்டும். பின் குரு தன் கையைச் சிவபரம் பொருளின் கையாகப் பாவித்து மாணாக்கனைத் தொடுதல் வேண்டும்.

பஞ்சாக்கரமாம் பரம் உபதேசம்
நெஞ்சம் இடம்கொண்டு நிகழ்ந்த அன்பு - பொஞ்சவே
நற்கருணையாலே நயந்து உபதேசம் பண்ணி
அற்புதமாம் நோக்குஅளித்து அம்மா, 160

பின்பு திருவைந்தெழுத்தாகிய மேலான உபதேசத்தை மனத்தில் நிலைபெற்று விளங்கும் அன்பு மிகும்படியாகக் கருணையினாலே விரும்பி உபதேசம் செய்து, வியப்புடைய திருவருள் பார்வையினாலே மாணாக்கனைப் பார்த்தல் வேண்டும்.

தூல உடம்பில் தொகும் இந்திரியத்தில்
சாலப் பொருந்தத் தகும்விடயம்—கோலம்அதுஆம்
கண்ஆதியால் இலிங்கம் காணும் கருத்து உணர்த்தி
எண்ணிய நல் பூசை தனக்கு 161

பின், இத்தூல உடம்பில் உள்ள ஐம்பொறிகளால் பொருந்தி அனுபவிக்கும் நுகர்ச்சிகளைக் கண் முதலிய பொறிகளினிடமாக இருந்து இலிங்கம் ஏற்றுக் கொள்ளு கின்றது என்று மாணாக்கனுக்கு அறிவித்துப் பூசை செய் வித்தல் வேண்டும்.

சொல்லியதில் ஓர்காலம் சோர்வுஅறவே அர்ச்சித்திட்டு
அல்லல் அறத்தமையும் அப்படியே—சொல்லும்
வழிபாடு நீங்காமை மன்னும் விரதம்
அழியாது நில் என்று அன்பால் 162

வழிபாட்டுக்கு உரியதாகக் கூறப்படும் காலங்களிலும் ஒரு காலமும் தளர்ச்சி இல்லாமல் சிவபெருமானை வழிபட வேண்டும். அவ்வாறே குருவாகிய நம்மையும் வழிபட வேண்டும். இதனை நீங்காத விரதமாகக் கொண்டு இதில் தவறு இல்லாமல் நடப்பாயாக என அன்புடன் அறிவித்தல் வேண்டும்.

சிவலாஞ்சனை கண்டால் சிந்தை உருகி
நவமாய் அவர் நயப்ப நன்மை—கவலைஅற
முப்பொறியால் ஏற்ற தொழில் முட்டாமல் செய்துஅருளில்
தப்பு அறவாழ் என்று அருளித்தான் 163

சிவனுக்குரிய அடையாளமாகிய திருநீறு, உருத் திராக்கம் முதலியன அணிந்த அடியவரைக் கண்டால் அவர் விரும்புகின்ற நல்லனவற்றை வருத்தமின்றி மனம் மொழி மெய்களால் குறைவின்றிச் செய்து அருள் நிலையில் தவறு உண்டாகாமல் வாழ்க என அறிவித்தல் வேண்டும்.

அற்பித்து அருந்தும் நிட்டை சற்று அசையில் ஆழ்நரகில்
நிற்பிக்கும் லிங்கம் உடல் நீங்கில்—உற்ற உடல்
விட்டுவீடு என்றே ஆணை மெய்யாகக் கற்பித்திட்டு
இட்டமுடனே உலகில் நில் 164

நீ அருந்தும் பொருள்களை முதலில் சிவத்துக்குப் படைத்து பின் அருந்துக. இந்த நிலையில் தவறினால் இச் செயல் உன்னை நரகத்தில் ஆழ்த்திவிடும். மேலும் நீ அணிந் திருக்கும் சிவலிங்கம் உன் உடம்பை விட்டு நீங்கக் கூடாது; நீங்கினால் உயிரை விட்டுவிடுக என்று கட்டளையிட்டு இவ்வொழுக்கத்தை தவறாமல் விருப்பத்துடன் கடைப் பிடிக்கச் செய்தல் வேண்டும்.

*மாயப்பொருளை மிக்க மந்திரத்தால் சுத்திசெய்ய*
*ஆயஅதனில் கோடி அதிக சுத்தி—மாயைமுற்றும்*
*நீக்கும் பரஞான சங்கமத்தால் மாயை எச்சில்*
*நீக்கிப் பிரசாதம் நீ* 165

மாயா காரியமாகிய பொருளை மந்திரத்தால் தூய்மை செய்வதால் வரும் தூய்மையைக் காட்டிலும் கோடிமடங்கு அதிகத் தூய்மை மேலானஞானம் பெற்ற சங்கமத்துக்குப் படைப்பதால் உண்டாகும். அதனால் மாயா காரியப் பொருளைச் சங்கமப் பிரசாதமாக ஆக்குதல் சிறந்தது என அறிவிக்க வேண்டும்.

*அற்பித்து அருந்தல் அமல ஞானக்கிரியை*
*உற்பத்தி ஆக்கும் இது உண்மையாம்—பொற்பு அதனால்*
*முத்திநிலம் காட்டி மலம்முற்றும் முடிக்கச் சரிக்கும்*
*சத்தியமாம் சங்கமம் தன்னை* 166

எப்பொருளையும் சிவத்துக்குப் படைத்துப் பின் அருந்து தல் குற்றமற்ற ஞானச் செயலை உண்டாக்கும் என்பது உண்மை. இத்தன்மையினால் உலக மக்களுக்கு முத்தியாகிய இடத்தை உணர்த்தி ஆணவ மலத்தை முழுவதுமாக அழிப் பதற்காகப் பலதலங்களுக்கும் சென்று வந்துகொண்டிருக்கும் அடியார்களை உண்மையாக வழிபடுக என அறிவித்தல் வேண்டும்.

பாதம் பூசித்த பவித்திர பாதஉதகம்
தீதுஇல் பவித்திரமாம் சேடமும்நல்—ஆதரவால்
அற்பித்து அருந்த அருள்துலங்கும் என்று இனிது
கற்பித்து இருள் அறுத்தல் காண். 167

அடியார்களது திருவடிகளை வழிபட்டுப் பெற்ற தூய திருவடி நீரினையும் அவர்களிடத்துப் பெற்ற தூய பிரசாதத்தினையும் சிவனுக்குப் படைத்து அருந்தினால் அருள் விளங்கும்; ஆணவம் நீங்கும் என அறிவித்தல் வேண்டும்.

சிவபுராணங்கள் சிவஆகமங்கள் நன்மைத்
தவபுராணங்கள் முன்னோர் செய்த—சிவபத்தி
நற்கதைகள் கேள் அவலநாள் கழியாதே என்றுஎன்று
அற்புதமாய்க் கற்பித்தல் ஆம் 168

சிவனைப் பற்றிய புராணங்கள், சாத்திரங்கள் மற்றும் முனிவர்களைப் பற்றிய புராணங்கள், முன்னோர் செய்த வழிபாடு பற்றிய கதைகளைக் கேள். வீணில் வாழ்நாளைக் கழிக்காதே என்று அறிவுறுத்துதல் வேண்டும்.

தீக்கை குருகொடுக்கை தீதுஅகன்ற சொல்கிருபை
வாக்கியம் தப்பாத மகன்சீடன் —நோக்கு அரிய
தேசிகன் சிட்சிக்க வந்த சிட்டை தவறான் அதனால்
ஆகும் பெயர் சீடன் ஆம், 169

குருசிட்சிக்க அந்த சிட்சையில் தவறாமல் நடப்பதனால் சீடன் என்று பெயர் உண்டாயிற்று. எனவே தீக்கை செய்த குரு திருவருளால் கட்டளையில் தவறாமல் நடக்கும் நல்ல மாணாக்கனே உயர்ந்த சீடன் எனச் சொல்லப்படுவான்.

## இது வீரசாமானியம்; இனி வீரவிசேடம்

*காயம் நமக்கு அற்பித்துக் கட்டு அகன்ற தீரத்தால்*
*ஆயபெயர் வீரசாமானியமாம் - நீ அறிமேல்*
*வீரவிசேட விதிகேள் இத்தீக்கையொடு*
*சீருடன் நல் சீவ சுத்தி செய்.* **170**

*தூலசூக்கும காரண உடம்புகளுள் தூல உடம்பை மட்டும் நமக்குக் கொடுத்து அது தொடர்பான கட்டுக்களி லிருந்து நீங்கிய ஆற்றலுடையவனாக இருப்பதனால் இத் தீக்கை பெற்றவன் வீரசாமானியன் எனப்படுகிறான். இனி வீர விசேட தீக்கை முறை கூறுவோம். வீரசாமானிய தீக்கைக்குக் கூறிய முறைப்படியே இடம், மண்டபம், கலசம் முதலியன அமைத்துக்கொண்டு முன்னர் உடம்பைத் தூய்மை செய்ததுபோல இதற்கு உயிரைத் தூய்மை செய்தல் வேண்டும்.*

## நீராட்டல் முதலியன முன்போலவே

*சச்சிதானந்தம் தயங்குகின்ற கும்பசலம்*
*பொற்பு உடைய சீடன் புனிதம் உற - அற்புதமாய்*
*ஆடுவித்த பின்னர் அரிய துகில் ஆதி முன்போல்*
*நீடிய பின் நின்மல மாகும்.* **171**

*சச்சிதானந்த மயமாகிய சிவம் விளங்குகின்ற கலசத்தில் உள்ள நீரினால் மாணாக்கனை நீராட்டி முறைப்படி ஆடை முதலியன முன்னர்க் கூறியபடி அணி வித்தல் வேண்டும். இதனால் பிராணனும் சூக்கும உடம் புடன் தூய்மை அடையும்.*

## சூக்கும உடம்பில் இலிங்கம் தரித்தல்

*சூக்கும காயத்துச் சுடர்இலிங்கம் தாபித்துத்*
*தாக்கும் நினைவுஎல்லாம் தகும் இலிங்கம் - நோக்கும்*
*தேசம் செய்து அமலலிங்கம் தான் ஆகும்*
*அனு போகமும் நவிற்றி.* **172**

அங்ஙனம் தூய்மை செய்யப்பெற்ற சூக்கும உடம்பில் ஒளியுடைய சிவலிங்கத்தை நிலைபெறச் செய்து, உயிரை வந்து தாக்கும் விடயங்களைப் பற்றிய நினைவு எல்லாம் இருதயத்தில் எழுந்தருளியுள்ள பிராணலிங்கத்தின் நினைவாகக் கருதும்படி உபதேசம் செய்து, குற்றம் அற்ற அவ்விலிங்கமே தானாக வேற்றுமை இன்றி நிற்கும் புதிய அனுபவத்தையும் அவனுக்குக் கூறுதல் வேண்டும்.

## குருலிங்க சங்கமமே எல்லாம்

*அந்தப் பிராணன் அபிமானம்தான் உடையார்*
*உத்தமம் ஆம் மும்முதலே என்னும் உண்மை - வித்தை அது*
*காட்டிப் பிரசாதம் காதல் விரதம்அதுஆய்*
*நாட்டும் வியாதி நடுங்க.* **173**

## சிவசின்னங்களே மருந்து

*வந்திடினும் வாழநினைந்து அவுடதம் தன்னைச்*
*சிந்தை நினையாதே தெளிவித்துச் - சந்ததம்ஆய்*
*நிற்பார் மனஅயிக்கர் நிற்பவருக்குப்பேர் உரைக்கின்*
*மெய்ப்பான வீரவிசேடம்.* **177**

இந்த அனுபவத்தை உணர்ந்த மாணாக்கனுக்கு உன்னுடைய செல்வங்கள், உயிர், நுகர்ச்சி எல்லாவற்றுக்கும் இனி உரிமை உடையவர்கள் குரு, லிங்கம், சங்கமம் என்னும் மூவருமே ஆவர் என்பதை அவனுக்கு உணர்த்தி இவர்களின் பிரசாதமாகவே நுகர்வதில் அன்பு மிக உடையவனாக விளங்கும்படிச் செய்தல் வேண்டும்.

இந்நிலையில் அவன் அஞ்சும்படியாக நோய் முதலியன வந்தாலும் அவற்றுக்கு மருந்து தேடி உண்டு வாழ விரும்பாமல் மருந்து முதலியன சிவ சின்னங்களும் சிவப்பிரசாதங்

களுமே என உணர்ந்து அதில் நிலையாக நிற்குமாறு செய்தல் வேண்டும். இங்ஙனம் இருப்பவனுக்கு வீர விசேடன் என்பது பெயர்.

## வீர நிராபாரத்தின் வகை

வீர விசேடத்தின் மேன்மை அது நற்சைவம்
வீரநிராபார விதி மூன்றாம் - சீர் ஆம்
பரம் சரம் மற்றும் சுயம் என்னும் தீக்கை
திரிவிதம் ஆகும் பரம் செப்பில் 175

வீர விசேடத்தின் மேன்மை முன்னே சொல்லப்பட்டது. இனி நல்ல சைவமாகிய வீரநிராபாரம் சொல்லப்படும். அது மூன்று வகை. அவை : சிறப்பு மிக்க பரம், சரம், சுயம் என்பன. அவற்றுள் பரம் வருமாறு :-

## வீர நிராபாரம் துறவறத்தார்க்கு உரியது

தாசோகம் செய்யத் தகும்நன் மனைவாழ்க்கை
ஆசைவிடாதாருக்கு அருளியது என்று - ஏசுஇல்
சிவகாமச் செல்வம்உடைச் செம்மலான் வாழ்க்கை
தவமா சவுக்கியம் முற்றும். 176

## மனை வாழ்க்கை இன்பத்தை விடவேண்டும்

தீயவிடம் போல் தெளிவிக்கும் பாகம்அது
மாயம்அற உள்ளே மருவிஇடத் - தூயதா
நல்ல சவுக்கியங்கள் யாவும் நடலைஎனும்
அல்லல் அறத் துறந்து அம்மா. 177

சிவனடியார்களுக்குப் பணிவிடை செய்வதற்கென்றே மனை வாழ்க்கையில் ஆசை விடாமல் இருப்பவர்களுக்கு

முன் கூறிய வீரசாமானிய, வீர விசேட தீக்கைகள் உரியன. நேரே சிவத்தை அடைய விரும்பிய மேன்மையுடையவர்கள் மனை வாழ்க்கையில் உள்ள மிகுந்த இன்பங்கள் முழுவதும் துறக்கவேண்டும்.

அந்தச் சுகங்களைக் கண்டால் நஞ்சினைக் கண்டது போல வெறுத்து ஒதுக்கும் பக்குவம் உள்ளத்தில் தோன்ற வேண்டும். இதனால் எல்லா இன்பங்களும் பொய் என்ற உணர்வு தோன்றித் துறவு மேற்கொள்வர்.

## குருவினிடம் வணங்கி வேண்டிக்கொள்வர்

*சற்குருவைப் பற்றிச் சரண அரவிந்தம் அதில்*
*அற்புதமாய் வீழ்ந்து உருகி ஐயனே! — நற்கருணை*
*தன்னால் மகிழ்ந்துதரும் சங்கம தீக்கை*
*இன்னே எனக்குஅருள் என்ன* 178

அங்ஙன் துறவு பூண்டவர் ஒரு ஞான குருவினை அடைந்து அவருடைய திருவடித் தாமரையில் விழுந்து மனம் உருகி ஐயனே! மிகுந்த கருணையினாலே எனக்குச் சங்கம தீக்கையினை இப்பொழுதே தந்தருள்க என வேண்டிக்கொள்ளுதல் வேண்டும்.

## ஆன்மசுத்தி செய்தல்

*நின்ற பரிபாக நிலைகண்டு நேசத்தால்*
*நன்று நன்று நீநினைத்தல் நன்றுஎன்று — குன்றாத*
*மைந்தன்தனக்கு மகிழ்ந்து ஆன்மசுத்தி செய்திட்டு*
*அந்தம்இலாக் காரணித்து அம்மா* 179

அங்ஙனம் மாணாக்கன் வேண்டிக்கொண்ட மிகுந்த பக்குவ நிலையைக் கண்டு மாணாக்கனே! நீ நினைத்து வந்த

செயல் மிகவும் நல்லதே என்று மகிழ்ச்சியுடன் அவனைப் பாராட்டி, அவனுடைய ஆன்மாவைத் தூய்மை செய்தல் வேண்டும்.

## பாவலிங்கம் அணிவித்தல்

உள்ளும் புறம்பும் ஒழிவுஅறவே தான்விளங்கிக்
கொள்ளும் சரலிங்கக் கோமளத்தைத் — தெள்ளும்
உணர்வுஆம் கரத்தால் உறக் கொடுபோய்த் தாபித்து
உணர்வுஆன சங்கமத்தோடு 180

## ஆன்ம அறிவை இலிங்கத்துடன் ஒற்றுமைப்படுத்துதல்

ஆனஅறிவை அதனோடு அயிக்கம்அது ஆய்த்
தான்இயற்றி ஒன்றானதன்மை அது — தான்ஆன
நல்ல அநுபூதி நயந்து அறியப் போதித்திட்டு
ஒல்லை உலகம் துறந்ததால் 181

அங்ஙனம் தூய்மை செய்த ஆன்மாவில் உள்ளும் புறம்பும் நீங்காமல் எங்கும் நிறைந்திருக்கும் சரலிங்கமாகிய அழகிய பாவலிங்கத்தைக் குரு தமது அறிவாகிய கையினால் கொண்டுசென்று மாணாக்கனுடைய அறிவுக்கு அறிவாய் விளங்கும்படி நிலைபெறுத்துதல் வேண்டும்.

அங்ஙனம் மாணாக்கனுடைய அறிவும் இலிங்கமும் வேறன்று; ஒன்றே என்னும் தன்மையை மாணாக்கன் அநுபவத்தால் அறியும்படி குரு அவனுக்கு உணர்த்துதல் வேண்டும். இதனை உணர்ந்த மாணாக்கன் உலகைத் துறந்து சிவமேயாக ஒற்றுமைப்பட்டு நிற்பான்.

## அபயம் அளித்தல்; திருவடி சூட்டுதல்

*அளவற்ற ஞானவிழி அன்பால் அளித்திட்டு*
*அளவற்ற நறகருணை அத்தம் — உளம் அடங்கப்*
*பாவித்து ஞானப் பரிபூரண பதத்தை*
*வால்அறிவாம் சிரத்தில் வைத்து* **182**

*அங்ஙனம் சிவமேயாக நின்ற மாணாக்கனை அன்புடன் ஞானப்பார்வையினாலே நோக்கி அவனுடைய அறிவில் சிவம் எங்கும் நிறைந்திருக்கும் தன்மை புலப்படுமாறு செய்தல் வேண்டும். பின் குரு தனது கையைச் சிவத்தி னுடைய கையாகக் கருதி அபயம் கொடுத்து மாணாக்க னுடைய சீவபோதம் அடங்கும்படிச் செய்தல் வேண்டும். பின்பு முழு நிறைவாகிய ஞானமயமாக விளங்கும் தனது திருவடியை மாணாக்கனது அறிவாகிய தலையில் பதித்தல் வேண்டும்.*

## மகாவாக்கிய உபதேசம்; புறவேடம்

*நாமே நீஎன்று நயந்து திருவாக்கு அருளி*
*ஆம்இவ் உலகம் அவலம்அறச் — சேமம் அது ஆய்க்*
*காவி மரஉரியில் கந்தை கவுபீனம் அது ஆய்த்*
*தாவுசடை முண்டிதம் தன்னுள்* **183**

*பின்பு சிவமாகிய நாமே ஆன்மாவாகிய நீ என்னும் பொருளைத் தரும் மகாவாக்கியத்தை உபதேசித்தல் வேண்டும். இவ்வுலகத்தில் வாழும் மற்ற உயிர்களும் துன்பமெல்லாம் நீங்கிப் பாதுகாப்பாக இருக்கும்படி, தவ வாழ்க்கை மேற்கொள்வதற்குரிய காவியாடை, மரவுரி, கந்தலாடை, கோவணம் இவற்றுள் ஏதேனும் உடுத்திக் கொண்டு விரிந்த சடையுடையவனாகவோ, மழித்த தலையுடையவனாகவோ இருக்கச் செய்தல் வேண்டும்.*

## தவ வாழ்க்கை

*செய்து உலகம் செடஅறிவு நீங்கியிட*
*வையம் அதில் பிச்சை மகிழ்ந்து அருந்தித் — துய்ய*
*சுகியாய் இயங்கு என்று சொற்று உயிர்க்குப் பொய்யாம்*
*சகமாயை விட்டு இறக்கத்தான்* 184

இங்ஙனம் புறவேடம் தரித்து, உலகமக்களின் பாசத்தைப் பற்றிய அறிவு நீங்கும்படியாக அவர்களிடத்தில் பிச்சை பெற்று மகிழ்ச்சியுடன் உண்டு சுத்தமான இன்பம் உடையவனாய்த் தலங்கள்தோறும் பயணம் செய்து வாழ்க; இதனால் உனக்கு உலகப் பொருள்களால் வரும் மயக்கமும் நீங்கும் என்று அறிவித்தல் வேண்டும்.

துறவிகள் பூண்டிருக்கும் புறவேடம் உலக மக்களுக்குச் சிவ பரம்பொருளை நினைவுபடுத்தி வழிபடச் செய் வதற்கும் பிச்சை ஏற்றல் உலக மக்களுக்குச் சிவபுண்ணியம் உண்டாகச் செய்வதற்குமே எனக் கூறியிருப்பது அறியத் தக்கது.

## தீர்த்தப் பிரசாதச் சிறப்பு அறிவித்தல்

*அங்குட்டம் தன்னில் அமர் தீர்த்தம் தன்நிலையும்*
*தங்கிய நல் சிங்குவையில் தான் விளங்கும் - பொங்கிய நல்*
*ஞானப் பிரசாத நல்நிலையும் சங்கமத்தில்*
*ஆனது அறிவித்து அன்பினால்* 185

பின்பு சிவனடியார்களின் திருவடிப் பெருவிரலில் பொருந்திய திருவடித் தீர்த்தத்தின் பெருமையினையும் ஞானமயமான நாக்கில் பொருந்தியிருக்கும் பிரசாதத்தின் பெருமையினையும் மாணாக்கனுக்கு விளங்கும்படி அன்புடன் அறிவித்தல் வேண்டும்.

## தீக்கை செய்ய அதிகாரம் அளித்தல்

*ஆன செகம் செய்யும் அரும்பூசை கொண்டு அவர்க்கு*
*ஞான பிரசாதம் நல்தீர்த்தம் - தான் அளித்துத்*
*தீக்கையொடு சிட்சை தெளிவான மோட்சம் அது*
*ஊக்க அதிகாரம் அளித்து* **186**

இவ்வளவும் அறிவித்துப்பின் உலகில் உன்னை யாரேனும் வழிபட விரும்பினால் அவர்களுடைய வழி பாட்டை ஏற்றுக்கொண்டு அவர்களுக்குத் தீர்த்தமும் பிரசாதமும் அளிக்கவும் பக்குவம் உடையவர்களுக்குத் தீட்சை செய்து ஞான நெறியைப் போதிக்கவும் உரிமை அளித்தல் வேண்டும்.

## இதுவே பரம் என்னும் தீக்கை

*நிற்கும் அறிவோடு அறிவு அயிக்கியமாய் நடக்கும்*
*கற்பு பரதீக்கை காதலுடன் – சற்குணம் ஆம்*
*சாந்தம் தயா தன்மம் சத்தியம் மாநல் சீலம்*
*வாய்ந்து இனிய ஞான வளம்* **187**

இங்ஙனம் உரிமை பெற்று எங்கும் நிறைந்திருக்கும் சிவத்துடன் கலந்து சிவம் ஒன்றையே கண்டு பிறி தொன்றையும் காணாமல் ஒன்றுபட்டு நிற்பதே பரதீக்கை யாகும்.

இத்தகைய நிலையைப் பெற முடியாதவர்களுக்கு அளிப்பது சரதீக்கை. இவர்கள் ஞான நெறிக்குரிய குணங்க ளாகிய சாந்தம், தயவு, தருமம், சத்தியம், நல்ல ஒழுக்கம் உடையவர்களாய் ஞான நெறியில் பயிலுதல் வேண்டும்.

## சரதீக்கை

பாவித்து லாஞ்சனைகள் பத்தியுடனே பணிந்திட்டு
ஓ இயங்கலோ நல் சரம் உரைத்தல் - ஓ உரைத்த
சற்குணங்கள் வேண்டிச் சத்ஆசாரமாய் விரதம்
கற்புடனே நல் தலத்தின்கண். 188

சாந்தம் முதலிய ஞான குணம் உடையவர்கள் எதனையும் சிவமாகவே கருதி முற்கூறிய காவியாடை, விரிந்த சடை முதலியன உடையவராய் எல்லா இடங் களிலும் பயணம் செய்து கொண்டிருக்கும்படி உரிமை யளிப்பது சரதீக்கை எனப்படும்.

பரம், சரம் என்னும் இருவர்க்கும் உரியன எனக் கூறிய பக்குவம் இல்லாதவர் அந்தப் பக்குவம் வரும் வகையில் சதா சாரம் முதலிய ஒழுக்கங்களிலிம் நற்குண நற்செயல்களிலும் உறுதியுடையவர்களாக ஒழுகிப் புண்ணியத் தலத்தில் தங்கி யிருத்தல் வேண்டும்.

## சுயம் என்னும் தீக்கை

செய்த மடத்தில் சிறந்து இருந்து லாஞ்சனையோடு
ஐயன் அருளால் அமைந்ததனை - ஐயம் அறத்
தானே வரக்கண்டு தான் இருத்தலே சொயம்ஆம்
தான் அவர்க்குப் பாவ தீக்கை. 189

அங்ஙனம் புண்ணியத் தலங்களில் அன்பர்கள் கட்டிக் கொடுத்த மடத்தில் தங்கியிருந்து புற அடையாளங்களும் அணிந்து விருப்பு வெறுப்பின்றி இயல்பாகவே கிடைக்கக் கூடியப் பொருள்களை ஏற்றுக்கொண்டு வாழ்ந்திருப்பதே சுயம் எனப்படும் தீக்கையாகும். இத்தகையவர்களுக்குக் கிரியைகளுடன் தீக்கை செய்தல் இல்லை, பாவனை யாகவே தீக்கை செய்யப்படும்,

பொது முற்றுப்பெற்றது

# அத்துவித வெண்பா

## உண்மை

### நூல்களில் கூறப்படும் பொருள் மூன்று

வேதஆகமத்துள் மிகும் கலைகள் யாவையினும்
ஓதும் பொருள்கள் உணர்வுஉடையோர் - சோதித்துச்
சொல்லும் பொருள்மூன்றாம் சொற்ற இதன்பெயர்கள்
அல்லல்அறச் சொல்வோம் அறி. 1

இறைவன் அருளிய வேதம், ஆகமம், மற்றும் கலை ஞான நூல்கள் அனைத்திலும் சொல்லப்படும் பொருள் களும் அறிஞர்களால் ஆராய்ந்து கூறப்படும் பொருள்களும் மூன்று உள்ளன. உன் பிறவித் துன்பம் நீங்கும்படியாக இவற்றின் பெயர்களைச் சொல்வோம். கேட்டு அறிக.

### அவை பதி, பசு, பாசம் எனப்படும்

பதிஎன்றும் மற்றுப் பசுஎன்றும் பாசத்
திதிஎன்றும் ஆகமங்கள் செப்பும் - விதிமூன்றுஅது
ஆகும் அதில் பதிதான் ஆனந்த அதீத நித்தம்
ஆகும் அதுஆய்ப் பூரணம்அது ஆகும். 2

பதி, பசு, பாசம் என்று ஆகமங்கள் சொல்லும் முறையில் மூன்றாகும். இவற்றுள் பதி என்பது ஆனந்த மயமாய், எல்லாப் பொருள்களையும் கடந்ததாய், அழிவற்றதாய், முழு நிறைவாய் இருக்கும்.

### பதியின் சிறப்பியல்பு

நாமமொடு சாதி நயந்தகுணம் கிரியை
ஆம் இவைகள் எட்டஅரிய அற்புதமாய்ச் - சேமப்
பொருள் ஆய்ப் புகல்அரிதாய்ப் போகம்இன்றாய் நீங்காப்
பொருளாய் உயிர்க்கு உயிராகி. 3

மேலும் அப்பதி பெயர், சாதி, குணம், தொழில் ஆகிய இவை சிறிதும் பொருந்துதல் இல்லாத அற்புதமான பொருளாய், உயிர்களுக்குச் சேமித்து வைக்கப்பட்ட பொருள்போல் உதவுவதாய், சொல்லுதற்கு அரியதாய்த் தனக்கொரு இன்பத்தை விரும்பாமல் தானே எல்லா உயிர்களுக்கும் இன்பம் கொடுப்பதாய், எப்பொருளையும் விட்டு நீங்காமல் கலந்திருப்பதாய், உயிர்க்கு உயிராய் உள்நின்று இயக்குவதாகவும் இருக்கும்.

## பதியின் பொதுவியல்பு

*நின்றநிலை தன்இயல்பு அதுஆகும் நிகழ்பதிக்கு இங்கு*
*என்றும் உளதாகும் இருள்மலத்தால் - நின்ற உயிர்க்கு*
*ஆன அறியாமை எனும் ஆணவ பாகம் வருத்தித்*
*தான் அதுஆகும் கருணைதான்.* 4

விளங்குகின்ற பதிப்பொருளுக்கு மேலே கூறப்பட்ட நிலைமை தன் இயல்பு எனப்படும் சிறப்பிலக்கணம் ஆகும், இனி, என்றும் நீங்காதிருக்கின்ற இருளாகிய ஆணவமலத்தால் அறிவு மறைக்கப்பட்டு நின்ற உயிர்க்கு அறியாமையைச் செய்யும் ஆணவ மலத்தைப் பக்குவப்படுத்தித் தனது கருணை எனும் சித் சத்தியுடன்தான் அதுவே என்னும் படிக் கலந்திருக்கும்.

*என்னும் குணம் ஒன்று இயல்பு ஆகையால் உயிர்க்கு*
*மன்னும் மலத்தால் வளர்துயிலாய் - மன்னிய நோய்*
*தீர்க்கக் கிருபை தெளிவுஆம் பெருவாரி*
*ஊக்கும் காலம் பொது ஆகும்.* 5

அங்ஙனம் சத்தியுடன் கலந்து நிற்பது அப்பதிக்கு இயல்பு ஆகையால் நிலைபெற்ற ஆணவமலத்தால் பெருந் தூக்கம் உடையவன்போல அறிவு மயங்கி நோய்பற்றி யிருந்த பசுவுக்கு அந்நோயைப் போக்கக் கருணையாகிய

பெரிய கடல் ஊக்கமுற்றுத் தொழில் செய்யத் தொடங்கிய காலமே அப்பதிக்குப் பொது இயல்பு ஆகும்.

## சிற்சத்தியின் இயல்பு

அந்நினைவே சிற்சத்தியாம் அதற்கே ஆனந்தம்
துன்னும் மிக்க சுகம் என்ன - மன்னு பெயர்
ஆகும் சிவனுக்கு உருவம் ஆகும் அந்தச் சிற்சத்தி
ஆகும் இருவகையது ஆய். 6

பதி அங்ஙனம் தொழில் செய்ய நினைத்த கருணையே சித்சத்தியாம். இதற்கே ஆனந்த சத்தி, சுக சத்தி என்றும் பெயர். இது சிவத்துக்கு உருவமாக இருக்கும், இந்தச் சித்சத்தி இருவகையாக இருக்கும்.

## சிற்சக்தி இருவகை

பத்தி சத்தி என்னப் பகர இருபேதம் அது ஆய்ப்
பத்திஅது சற்பத்தி சார் நயிட்டை - ஒத்த
அவதானம் தன்னோடு அனுபவம் ஆனந்தம்
நவம்ஆம் சமரசம் ஆகும். 7

சத்சத்தி பத்தி என்றும் சத்தி என்றும் இருவகைப் படும். இவற்றுள் பத்தியானது சற்பத்தி, நயிட்டாபத்தி, அவதானபத்தி, அனுபவபத்தி, ஆனந்தபத்தி, சமரச பத்தி என ஆறுவகைப்படும்.

## சத்திகள் ஐந்து, சாதாக்கியம் ஐந்து

பரை ஆதி இச்சையொடு ஞானம் கிரியை
தரம் ஆகும் ஐந்து பெயர் சத்தி - உருவாகத்
தோன்றும் சதாசிவம்தான் தோன்றும்இதில்சத்திஐந்தால்
தோன்றும் ஐந்து சாதாக்கியம் 8

சிவசத்தியிலிருந்து பரை, ஆதி. இச்சை, ஞானம், கிரியை என்னும் ஐந்து சத்திகள் முறையே ஒன்றற்கொன்று ஆயிரத்தில் ஓர் கூறு உடையதாகத் தோன்றும். இச்சத்திகளையே உருவமாகக் கொண்டு தோன்றும் சிவமே சதாசிவம் எனப்படும். சத்திகள் ஐந்தாகையினாலே சதாசிவமும் ஐந்தாகும். சதாசிவம் சாதாக்கியம் எனவும்படும்.

## ஐந்து சாதாக்கியங்களின் பெயர்

கன்ம சாதாக்கியமும் கர்த்திரு சாதாக்கியமும்
தன்மசிவ மூர்த்தி சாதாக்கியமும் — நன்மைஅது அ
மூர்த்தியொடு நல்சிவ சாதாக்கியமும் ஆம்பெயர் கொள்
மூர்த்திகளுக்குப் பேர்இனும் ஐந்துஆம். 9

ஐந்து சாதாக்கியங்களுக்கும் பெயர்கள் கன்ம சாதாக்கியம், கர்த்திரு சாதாக்கியம், மூர்த்தி சாதாக்கியம், அமூர்த்தி சாதாக்கியம், சிவசாதாக்கியம் என்பனவாம். இவற்றிற்கு வேறும் ஐந்து பெயர்கள் உள்ளன.

## ஐந்து சாதாக்கியங்களுக்கும் வேறு பெயர்கள்

ஆசாரலிங்கம் குருலிங்கத்தோடு சிவம்
பேசுசரலிங்கம் பிரசாதலிங்கம் — ஓசைப்
பெயரும் ஐந்தாம் கன்மத்தின் மாயேசர் பின்னும்
நயமொடு ஐயைந்தாம் விக்கிரகம். 10

ஐந்து சாதாக்கியங்களுக்கும் வேறு பெயர்களாவன: ஆசாரலிங்கம், குருலிங்கம், சிவலிங்கம், சரலிங்கம் (அ)சங்கமலிங்கம், பிரசாதலிங்கம் என்பனவாம். கன்ம சாதாக்கியத்திலிருந்து மயேச்சுரரும் இருபத்தைந்து சிவமூர்த்தங்களும் தோன்றும்.

இருபத்தைந்து சிவமூர்த்தங்கள்: 1. பிறையணிந்தவர் 2. உமையுடன் இருப்பவர் 3. எருது வாகனம் உடையவர் 4. அம்பலவாணர் 5, உமையைத் திருமணம் புரிந்தவர் 6. பிச்சைத்தேவர் 7. மன்மதனை அழித்தவர் 8. கூற்றுவனை அழித்தவர் 9. முப்புரம் எரித்தவர் 10. சலந்தரனை வென்றவர் 11. பிரம்மனுடைய தலையைக் கொய்தவர் 12. வீரபத்திரர் 13. நரசிம்மத்தை அடக்கியவர் 14. மாதுஒரு கூறர் 15. எலும்பணிந்தவர் 16. சண்டேசருக்கு அருளியவர் 17. கறைமிடற்றர் 18. சக்கரப்படை அளித்தவர் 19. வேட்டுவ வடிவினர் 20. யானைமுகனை அருளியவர் 21. உமையுடனும் கந்தனுடனும் இருப்பவர் 22. ஒற்றைக்கால் உடையவர் 23. தென்முகக் கடவுள் 24. அளவில்லாத இன்பம் அளிப்பவர் 25. இலிங்கத்தில் தோன்றியவர்.

**ஐந்து சத்திகள் - ஐந்து சாதாக்கியங்கள் :** சத்திகள் கலைகள் எனவும் பெயர் பெற்று இருக்கும். சாதாக்கியம் தத்துவம் எனப்படும். இந்தத் தத்துவங்களுக்குத் தத்துவ வடிவினர் உளர், இவர்களுக்கு வடிவம், தன்மை, தொழில் முதலியனவும் கூறப்படும்.

**1: பராசத்தி - சிவசாதாக்கியம் :** பராசத்தி சிவ சத்தியில் ஆயிரத்தில் ஒரு கூறாக இருக்கும். இது சாந்தி யதீதக் கலையெனப் பெயர் பெறும். இதில் உருவமாய்த் தோன்றுவது சிவசாதாக்கியம் - இதன் தத்துவமூர்த்தி சதாசிவன். இவர் ஒரு வடிவாய் எங்கும் நிறைந்து பேரானந்தமயமாய் இருப்பர். இவருக்கு முகம் ஈசானம்.

**2, ஆதிசத்தி - அமூர்த்தி சாதாக்கியம் :** ஆதிசத்தி, பராசத்தியில் ஆயிரத்தில் ஒரு கூறாக இருக்கும். இதற்குத் திரோதான சத்தி என்பதும் பெயர். இது சாந்திகலை என்னும் பெயர் பெற்றிருக்கும். இதில் உருவமாய்த் தோன்றுவது அமூர்த்தி சாதாக்கியம். இதன் தத்துவமூர்த்தி

ஈசன். இவர் உருவ வேறுபாடு இன்றி ஒளிவடிவாய்த் தூண்போல விளங்குவர். இவருக்கு முகம் சத்தியோஜாதம்.

**3. இச்சாசத்தி - மூர்த்தி சாதாக்கியம் :** இச்சாசத்தி, ஆதிசத்தியில் ஆயிரத்தில் ஒரு கூறாக இருக்கும். இது வித்யா கலை எனவும் பெயர் பெற்றிருக்கும். இதில் உருவமாய்த் தோன்றுவது மூர்த்தி சாதாக்கியம். இதன் தத்துவமூர்த்தி பிரமீசன். இவர் இலிங்க வடிவாய் மேலே ஒரு முகமும் மூன்று கண்ணும் இரண்டு கையும் உடையவ ராய் இருப்பர். இவர்க்கு முகம் வாமதேவம்.

**4. ஞானசத்தி - கர்த்திரு சாதாக்கியம் :** ஞானசத்தி, இச்சாசத்தியில் ஆயிரத்தில் ஒரு கூறாக இருக்கும். இது பிரதிட்டா கலை எனவும் பெயர் பெற்றிருக்கும். இதில் உருவமாய்த் தோன்றுவது கர்த்திரு சாதாக்கியம். இதன் தத்துவமூர்த்தி ஈசுரன். இவர் இலிங்க வடிவமாய் மேலே நான்கு முகம், பன்னிரு கண், எட்டுக் கை ஆகியவற்றை உடையவராக இருப்பர். வலக்கைகளில் சூலம், மழு, வாள், அபயமுத்திரை ஆகியவற்றை உடையவராகவும் இடக் கையில் பாம்பு, பாசம், மணி, வரதமுத்திரை ஆகியவற்றை உடையவராகவும் இருப்பர். இவர் எல்லா முதன்மையும் உடையவராக இருப்பர். இவருக்கு முகம் அகோரம்.

**5. கிரியாசத்தி - கன்ம சாதாக்கியம் :** கிரியாசத்தி, ஞானசத்தியில் ஆயிரத்தில் ஒரு கூறாக இருக்கும். இது நிவிர்த்தி கலை எனவும் பெயர் பெற்றிருக்கும். இதில் உருவமாய்த் தோன்றுவது கன்ம சாதாக்கியம். இதன் தத்துவமூர்த்தி ஈசானன். இவர் இலிங்க வடிவாய் இருப்பர். நாதம் இலிங்கமாகவும் விந்து பீடமாகவும் இருக்கும். இவர் படைத்தல் முதலிய ஐந்தொழிலும் செய்பவராக இருப்பர். இவருக்குத் தத்புருஷம், ஐந்து முகமும் பதினைந்து கண்ணும் பத்துக் கையும் உடையவர்.

மேற்கூறிய சாதாக்கியங்களில் கன்ம சாதாக்கியத்தில் ஐந்து சாதாக்கியங்களும் ஒன்றாகச் சேர்ந்து ஈசானம் முதலிய ஐந்து முகங்களாக இருந்து கொண்டிருக்கும்.

பத்தி அதில் தோற்றம் பகரில் அத்தம் ஆறு ஆகும்
மற்று அதன் நாமம் சித்தம் நல் சுபுத்தி - மற்றும்
நிர் அகங்காரம் சுமனம் நீள்ஞானம் பாவம்
வரும் அப்பெயராம் வளம். 11

பத்தி என்பதில் தோன்றுவது அத்தம் எனப்படும் அது ஆறுவகைப்படும். அவை : சுசித்தம், சுபுத்தி, நிர் அகங்காரம், சுமனம், சுஞ்ஞானம், சுபாவம் என்பன.

சு என்பது தூய்மை; அது மாயையைக் கருதாமல் சிவத்தையே கருதுவதனால் உண்டாகும்.

## பத்தி என்பதன் விளக்கம்

பத்தி சத்தி என்னும் பகுப்பு இரண்டாம் பத்திஅது
சற்றும் உயிர் தோன்றாமல் தற்பரம்ஆய் - நிற்றல்
தளராமல் ஏகம் அதுஆய் நிட்டை
தளராமல் செய்யும்அதுதான் 12

பத்தி என்றும் சத்தி என்றும் பகுத்துச் சொல்லப்படும் இரண்டனுள் பத்தி என்பது சிறிதும் உயிரின் உணர்வு மேம்பட்டுத் தோன்றாமல் எங்கும் சிவத்தின் உணர்வையே கண்டு அது வேறு தான் வேறு என ஆகாமல் அதுவே தானாய் ஒன்றுபட்டு அதில் சிறிதும் தளராமல் நிட்டைகூடி இருப்பதுவேயாம்.

## சத்தியின் உபகாரம்

*சத்தி சிவன்தன்னைத் தகும் உயிர்ச் சித்துவிடாச்*
*சத்தி விளக்கிச் சரிப்பிக்கும் - இத்திறத்தால்*
*சத்தினி பாதர்க்குஆகும்பத்தி சத்தி தீயமலப்*
*பித்துஅறப் பாகம் வருத்தும்.* 13

சத்தியானது உயிரின் அறிவு சிவத்தை விடாமல் பற்றும்படியாக அதனை விளக்கிச் சிவத்தினிடத்துச் செலுத்தும். இதனால் உயிர்க்குச் சத்தினி பாதம் என்னும் நிலை வரும். மேலும் அச்சத்தி உயிரைப் பற்றியிருக்கின்ற கொடிய ஆணவமல மயக்கம் நீங்குவதற்குரிய பக்குவத்தினையும் வருவிக்கும்.

## உயிர்க்கு உடம்பு

*ஆதலினால் பத்தி உயிர்க்கு அந்தரங்கமாகும் சத்தி*
*ஓதுகின்ற வகிரங்கம் ஓஆகும் - ஓதுகின்ற*
*சத்தியால்ஆம் மூர்த்திதான் ஆறுஆம் மூர்த்தியினால்*
*உற்றது ஐயைந்து ஒன்றா* 14

பத்தியும் சத்தியும் இவ்வாறு இருக்கின்றதனால் பத்தியை உயிர்க்கு உள் உடம்பு என்றும் சத்தி உயிர்க்கு வெளியுடம்பு என்றும் சொல்லப்படும். முன் சொல்லப்பட்ட சிற்சத்தி முதலிய ஆறு சத்திகளினிடமாகத் தோன்றும் சாதாக்கியங்கள் ஆறாகும். இவற்றுள் கனம் சாதாக்கியத்தில் தோன்றும் இருபத்தைந்தையும் ஒன்று சேர்க்க முப்பத்தொரு மூர்த்திகள் உளவாகும்-

முன் எட்டாவது ஒன்பதாவது பாடங்களில் சத்தி ஐந்தும் சாதாக்கியம் ஐந்தும் சொல்லப்பட்டன. அவற்றுடன் சாந்தியதீத உத்தரகலை என்னும் பெயருடைய சிற்சத்தியைக் கூட்டி சத்தி ஆறு என்றும் அந்தச் சித்சத்தியினிடமாக உருவங்கொண்டுதோன்றும் மகா சாதாக்கியத்தையும் கூட்டி சாதாக்கியம் ஆறு என்றும் கொள்ளப்படும். இந்த மகா

சாதாக்கியம் மகாலிங்கம் என்று பெயர் பெறும். இதற்கு முகம் அதோமுகம் எனப்படும். இந்த முகத்தில் பூசை செய்தல், அருளல், தண்டித்தல் முதலியன இயல்பாக நிகழ்வதில்லை ஆதலின் இது நூல்களில் ஏனைய ஐந்து முகங்களைக் கூறுவதுபோல விரித்துக் கூறப்படுவதில்லை.

சாதாக்கியம் ஆறு ; சிவமூர்த்தம் இருபத்தைந்து, ஆக முப்பத்தொன்று எனக் கொள்க.

## சிவத்துக்கு மூவகை உடம்பு

*ஆறைந்தோடு ஒன்றும் அரும்தூல சூக்கம் எனக்*
*கூறுகின்ற ஆறுசத்தி கூடவே - கூறில்அது*
*ஆகும் அதி சூக்கதனுஆம் அதனால் நின்மலர்க்கும்*
*ஆகும்தனு மூன்று அது ஆம்* 15

முன் கூறிய முப்பத்தொன்றும் தூலம் என்றும் சூக்குமம் என்றும் சொல்லப்படும். சத்திகள் ஆறும் அதி சூக்குமம் என்று சொல்லப்படும். ஆகையினால் நின்மலனாகிய சிவ பரம்பொருளுக்குச் சத்திகள் ஆறும் அதி சூக்கும உடம்பு என்றும் சாதாக்கியங்கள் ஆறும் சூக்கும உடம்பு என்றும் சிவமூர்த்தங்கள் இருபத்தைந்தும் தூல உடம்பு என்றும் மூவகை உடம்பு சொல்லப்படும்.

## படைப்பு வகை

*சிவனால் சிவசத்தியால் சத்திமூர்த்தி*
*அவற்றால் மூன்றுஆகும் சிருட்டி - இவைதாமும்*
*சங்கற்பமாம் சிருட்டி சாற்றில் விகற்பச் சிருட்டி*
*இங்கு அதிகாரம் பெற்றிடும்* 16

படைத்தல் தொழில், சிவத்தின் படைப்பு, சத்தியின் படைப்பு, சாதாக்கியத்தின் படைப்பு என மூன்று வகைப்

படும். இம்மூன்றும் நினைப்பு அளவில் செய்யப்படும் சங்கற்ப சிருட்டி எனப்படும், இனி பிரம்மா முதலிய ஐந்து கடவுளர்களால் பரம்பொருளின் அதிகாரம் பெற்றுச் செய்யப்படும் சிருட்டி கருவிகளினால் செயலளவில் செய்யப் படும் விகற்பச் சிருட்டி எனப்படும்.

## ஆன்மாவுக்குப் பந்தம் ஆக்குதல்

*மற்று இவர்கள் மூவர் மதிக்கில் அவர் மும்மாயை*
*பற்றி அதில் உண்டாகும் பான்மை எல்லாம் - குற்றம்அற*
*ஆக்கி உயிர்க்குப் பெந்தம் ஆக்கிப் பிறந்து இறந்துஉள்*
*ஊக்கும்வினை ஆன்மாவுக்கு.* 17

இனி. பரமசிவன், மயேச்சுரன். உருத்திரன் என்னும் மூவரும் முறையே சுத்தமாயை, அசுத்தமாயை, பிரகிருதி மாயை என்னும் மாயைகளைக் கலக்கி அவற்றிலுண்டாகும் உடம்பு, கருவி, உலகம், நுகர்ச்சிப் பொருள் ஆகியவற்றைப் படைத்து உயிர்களுக்குப் பந்தத்தினை ஆக்குவார்கள். இதனால் ஆன்மா பிறந்தும் இறந்தும் மன ஊக்கத்துடன் வினைப்பயனை அனுபவிக்கும்.

## உயிர் இலக்கணம் - வகை

*சொல்லும் உயிர்கள் தொகும் பகுதி மூவகைத்தாம்*
*நல்ல விஞ்ஞானகலர் நல்பிரளயர் - புல்லும்*
*சகலர்எனப் பேர் இவர்க்குச் சாரும்அன்றே நித்தத்*
*தகைமையினர் எண் அரியர்தாம்.* 18

மேலே சொல்லப்பட்ட உயிர்த்தொகுதி மூவகையாகும். அவர்களுக்கு விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் எனப் பெயர் அமையும். அவ்வான்மாக்கள் - அழிவற்றனவாய் இத்துணை எனத் தொகைகணக்கிட்டு அறியப்படாதனவாக இருக்கும்.

## மூவகை உயிர்

மலம்அது விஞ்ஞானகலர் மற்று மலகன்மர்
குலபிரளயர் சகலர்கூறின் - மலம் மூன்றும்
தாம் உடையர்தாம் சகலர்தாம் என்றே ஆகமங்கள்
தாம் உரைக்கும் சத்தியமாய்த்தான். 19

விஞ்ஞானகலர் எனப்படுபவர் ஆணவ மலம் மட்டும் உடையவர்கள்; பிரளாயகலர் ஆணவ மலமும் கன்ம மலமும் உடையவர்; சகலர் ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலமும் உடையவர் என்று ஆகமங்கள் உண்மையாகக் கூறும்.

## அவத்தைகளின் பெயர்கள்

கேவலன் என்றும் விகலன் என்றும் பேராம் மலத்தால்
தாவுசகலன் பெத்தன்தான் சகலன் - தாஇல்
அமலன் மிக்கஆதிமுத்தன் முத்திஅவத்தைப்பேர்
விமலன் மாயை மலத்தானே 20

ஆன்மா ஆணவமலத்தால் முழுவதும் மறைக்கப்பட்டிருக்கும் பொழுது கேவலன் என்றும் விகலன் என்றும் பெயர். கலை முதலிய தத்துவங்களால் உடம்புகளைப் பெற்றபொழுது பெத்தன் என்றும் சகலன் என்றும் பெயர். குற்றம் இன்றி மலம் நீங்கிய நிலையில் அமலன் என்றும் ஆதிமுத்தன் என்றும் பெயர். ஆதிமுத்தனுக்கு அருளே இருப்பிடம், சகலனுக்கு மாயையே இருப்பிடம் கேவலனுக்கு ஆணவ மலமே இருப்பிடம்;

## கேவல அவத்தையின் தன்மை

நின்மலன்நான் என்ன நிகழ்போகமும் அமலத்
தன்மம் எனத் தானே தனிப் பொருளாம் - சின்மயமா
ஞானந்தனை மலத்தால் ஆவரிக்கக் கேவலன்என்று
ஆனஅந்த ஆன்மாவின் பேர். 21

நின்மலனாக இருக்கின்றபொழுது விளங்கக்கூடிய சிவானந்தத்தினையும் அமலத் தன்மையுடைய தனிப் பொருளாக விளங்கும் சித் எனப்படும் பெரிய ஞானத் தையும் மலம் தடை செய்வதனால் அந்த ஆன்மா கேவலன் எனப் பெயர் பெற்றது.

## சகல அவத்தையின் தன்மை

நெய்யை உருக்கி நிகழ்குணமும் சேறுஅது நீர்
தீய்ய இறுக்கத் திகழ்குணமும் – வெய்யவனுக்கு
ஆர்த்த முகிலால் அடங்கி விளங்குதல் போல்
சேர்த்த மாயா உருவத்தில் 22

நித்தியம்ஈதுஎன்றும் நிகழ் அநித்தியம் ஈது என்றும்
வைத்து அறியும் வளம் அடங்கி - ஒத்த
கலை வித்தை அராகத்தில் காணுதலால் மிக்க
சகலன் எனப்பேர் உயிர்க்குத்தான். 23

சூரியனுக்கு உறைந்துள்ள நெய்யை உருகச் செய்யும் தன்மையும், சேற்றுடன் கலந்துள்ள நீரைத் தீய்த்து இறுகச் செய்கின்ற தன்மையும், மேகத்தால் மறைக்கப்பட்டு வெப்பம் தோன்றாமல் ஒளி மட்டும் சிறிதே விளங்குவது போல,

மாயா காரியமாகிய உடம்பில் சேர்ந்த ஆன்மாவுக்கு நிலையான பொருள் இது என்றும், நிலையில்லாத பொருள் இது என்றும் பிரித்து அறியும் அறிவுத்திறம் குறைந்து, கலை, வித்தை. அராகம் என்னும் தத்துவங்களால் செயல், அறிவு, விருப்பம் சிறிதே விளங்குவதால் இவ்வான்மா வுக்குச் சகலன் எனப் பெயர் ஆயிற்று.

## சுத்த அவத்தையின் தன்மை

நின்மலனால் தீயமலம் நீங்கியிடத் தான்அற்ற
நின் மலனே தான்ஆகி நின்றதால் - அம்மா
நிமலன் என்ற பேரும் நிகழ்ந்திடும் ஆன்மாவுக்கு
அமலம்எனும் ஆகமங்கள் தாம். 24

நின்மலனாகிய சிவபெருமானால் ஆன்மாவுக்குத் தீமை செய்யும் ஆணவமலம் நீங்குவதால் ஆன்மா தன் தன்மை யின்றிச் சிவமேயாக ஒற்றுமைப்பட்டு நிற்பதனால் அந்த ஆன்மாவுக்கு நிமலன் என்று பெயர் விளங்கும் என்று குற்றம் அற்ற ஆகமங்கள் கூறும்.

## உயிரின் பொதுவியல்பு

இறந்து பிறந்தே இருவினைகள் உண்டு
மறந்துதனையும் மலத்தால் - பிறந்து அகலாது
ஒன்றுஆம் சிவத்தினையும் ஓராது உழல்வது உயிர்க்கு
என்றார் பொது இயல்பு அதே. 25

எப்பொழுதும் தன்னை விட்டு நீங்காது தன்னுடன் ஒன்றுபட்டிருக்கும் சிவத்தினையும் தன்னையும் ஆணவமல மறைப்பினால் மறந்து, பிறந்தும் இறந்தும் உழன்று இருவினைப் பயன்களை அனுபவிப்பது ஆன்மாவின் பொது இயல்பு எனச் சான்றோர் கூறினர்.

## உயிரின் சிறப்பியல்பு

சத்திநிபாதம் உறச் சத்தியமாம் பத்திஅஃது
ஒத்துஉணர்வாம் காலம் உயிர்க்கு உயிராய் - நித்தியம் அது
ஆகும் பரிபூரணமாம் சிவமே தான்
ஆகும்அது தன்இயல்பு அது ஆம் 26

ஆன்மாவினிடத்தில் திருவருள் சத்தி பதிவதால் அச்சத்தியும் உண்மையாகிய பத்தியும் ஒத்து ஒன்றாய் நிற்கும்பொழுது, உயிர்க்கு உயிராக, அழிவின்றி நின்ற முழு நிறைவுடைய பொருளாகிய சிவமேதானாய் ஒற்று மைப்பட்டு நின்று சிவானந்தத்தை அனுபவிப்பதே உயிரின் சிறப்பியல்பு ஆகும்.

## ஆணவமலமும் திரோதான சத்தியும்

*ஒன்று ஆகிச் சத்திஒன்றாய் உற்றவினைப் போகம் உயிர்*
*நின்று அருந்தலுக்கு ஆய்ப் பலஆய் நிற்பதுஆய் - நின்று அறிவால்*
*தன்னை வினைஉருவைச் சத்தியம் என்றே உணர்த்தும்*
*தன்மைஅது சத்தி செயல்,* 27

ஆணவ மலம் ஒன்றாக இருக்கும். ஒவ்வொரு ஆன்மா வுக்கும் தனித்தனி ஒவ்வொரு சத்தியாய் நின்று மறைக்கும். வினைப் பயனை உயிர் அனுபவிக்கும் பொழுது பல காரிய வேறுபாடு உடையதாய் நிற்கும். திரோதான சத்தி ஆன் மாவினது அறிவினைப் பிற பயன்களை அறியவிடாமல் மறைத்து, தன் உடம்பும், வினைப் பயனாக வந்த நுகர்ச்சி யுமே மெய்யென்று உணரும்படிச் செய்யும்.

## ஆணவம் கண்ணை மறைக்கும் படலம் போன்றது

*ஏகம் அதுஆம்சத்தி எழில்அறி பொய்ப்போகம் உண்ணும்*
*மோக அறிவும் அற மூடியே - ஏகம்அது ஆய்*
*நின்றசிவனை நினையாது உயிர்அறிவில்*
*ஒன்றும் படலம் என ஓர்.* 28

ஒவ்வொரு ஆன்மாவுக்கும் தனித்தனி ஒன்றொன்றாக இருக்கும் சத்தியை உடைய ஆணவம் கன்ம நுகர்ச்சியாக

வரும் பொருள்களின் அழகு முதலிய நிலையில்லாத நுகர்ச்சியை அனுபவிக்கும் அறிவையும் முழுமையாக மறைத்து, உயிருடன் ஒற்றுமைப்பட்டு நிற்கும் சிவபரம் பொருளையும் நினைய ஒட்டாமல் தடுத்து நிற்கும். இது கண்ணொளியை மறைத்து நிற்கும் படலம் போன்றது என அறிக.

## ஆணவம் நித்தியம்

*முத்தி அடையும் காலம் மூலம் ஆம் சத்தி தன்னோடு*
*ஒத்தகுணிதானும் ஒழிந்து அகன்று - நித்தியம் ஆய்*
*நிற்பதுதான் ஆணவம்ஆம் நின்று இதனை ஆதிசத்தி*
*கற்புடன் பொற்புஆய்ச் செலுத்தும் காண்.* 29

ஓர் ஆன்மா முத்தியடையும்போது அதனை மறைத்து நின்ற சத்தியோடு அதனை உடைய ஆணவமும் நீங்கும், என்றாலும் ஏனைய ஆன்மாக்களைப் பந்தித்து நிற்கும் ஆதலால் ஆணவத்திற்கு அழிவு இல்லை. அது நித்தியமாகவே இருக்கும். இந்த ஆணவம் பக்குவப்படும்படியாய் முறைமையாய் உடனிருந்து செலுத்தும் தன்மை உடையது திரோதான சத்தி.

## திரோதான சத்தி ஆணவ மலத்தைப் பக்குவப்படுத்தும்

*ஆதி திரோதாயி அரன் ஆக்கினை என்றே பெயராய்த்*
*தீதுஇல் உயிர்க்கு மலத்தீய நோய் - வாதைகெட*
*உள்ள அவுடதமாம் உற்றவினை அருத்தி*
*உள்ள மலபாகம் வருத்தும்.* 30

சிவபரம் பொருளின் ஆணையாகிய சிற்சத்தியே ஆதி என்றும் திரோதாயி என்றும் பெயருடையதாய்த் தீமையில்லாத உயிருக்கு ஆணவ மலமாகிய கொடிய நோயின் துன்பம் நீங்குவதற்கென்றே இருக்கும் மருந்தாக நின்று ஆணவ மலத்தைப் பக்குவப்படுத்தும்.

## சுத்த மாயையின் இயல்பு

சுத்தம் அதுஆம்மாயை சொலும் சத்திமூர்த்திகளால்
வைத்தஅதிகாரம் அடையும் நல்ல - தத்துவம் ஆம்
மூர்த்திகளுக்கு ஏற்ற தனுஆதிகளாயே முழுதும்
தோற்றுவிக்கும் மற்றும் சொல்லின் 31

## சுத்த மாயையின் பெயர் வேறுபாடுகள்

சரியாதி செய்தோர்க்குச் சாலோகம்ஆதி
அரிதாம் பதங்கள் பயன் ஒன்றப் - பெருமையுடன்
காட்டும் வயிந்தவம் மாமாயை சிவம் விந்துஎன
ஈட்டும் பெயர் இவைகளே. 32

சுத்த மாயை என்பது முன்சொன்ன சத்தி மூர்த்திகளாகிய சாதாக்கியங்களில் உள்ள மூர்த்திகளால் தொழிற்படுத்தப்பட்டு அந்தந்தப் புவனங்களில் உள்ள ஆன்மாக்களுக்குரிய உடம்பு முதலியவற்றை ஆக்குவதற்குப் பயன்படும். மேலும் சொல்லுமிடத்து,

சரியை முதலியவற்றைச் செய்த ஆன்மாக்களுக்குரிய சாலோகம் முதலிய அரிய பதவிகள் பொருந்தும்படிச் செய்யும். இது பல வேறு பெயர்களைப் பெற்றிருக்கும். அவை வயிந்தவம், மாமாயை, சிவம், விந்து முதலியனவாம்.

## அசுத்த மாயையின் இயல்பு

நித்தியமாய் அன்றே நிகழ் உயிர்க்கு நேம வினைக்கு
உற்ற தனுஆதி ஒருநான்கும் - வித்தரமாய்
உண்டாம் அதற்கு இடம்ஆய் உற்ற முத்திகாலம் மயக்கு
உண்டாகும் சத்தி தன்னோடு 33

## முத்தியில் மாயை நீங்கும்

*காணாதே நீங்கியிடுங்காண் அசுத்தமாயை அது*
*பேணும் மகேசரொடு பேதம் அதுஆய்க் - காணும் இதற்கு*
*ஏற்றபொது உண்மைஇதுஆம் என்று ஆகமங்கள்*
*தேற்றம்உறச் சொல்லும் திடம். 34*

அசுத்தமாயை நித்தியமானது. தொன்று தொட்டே விளங்குகின்ற உயிர்களுக்கு நியமித்த வினைப்பயனை அனுபவிப்பதற்கு ஏற்ற உடம்பு, கருவி, உலகம், நுகர்ச்சிப் பொருள் என்னும் விரிவாக உண்டாவதற்கு இடமாக இருக்கும். பொருந்திய முத்தியடையும் காலம் வரையிலும் ஆன்மாவை மயக்கும் சத்தியுடையதாக இருக்கும்.

முத்தியடையும் காலத்தும் மயக்கும் சத்தியோடு மாயையும் ஆன்மாவை விட்டு நீங்கும். அது தொழிற்படும் பொழுது ஈசுர தத்துவத்திலிருக்கும் மகேசுரர் என்னும் அனந்தேசுரர்க்குப் பேதமாய்ச் சடசத்தியாய் இருக்கும். இதுவே அசுத்தமாயையின் பொதுவியல்பும் உண்மை யியல்பும் ஆம் என்று ஆகமங்கள் துணிந்து கூறும்.

## கன்ம மலத்தின் வகை

*கோணா மலம் அகற்றும் கொள்கைஅது ஆன வினை*
*காணில் இருவகைத்துஆம் கட்டுரைக்கின் - கோண் ஆகும்*
*இன்ப துன்பம் ஆகி இதம் அகிதம்ஆய்த் தனுக்கள்*
*வந்து உற்றிட ஏதுஆம். 35*

மாறுபாடில்லாத ஆணவமலத்தினை அகற்றும் தன்மை யுடைய வினையை ஆராய்ந்து பார்த்தால் இரண்டு வகை யாக இருக்கும். அவை : ஒன்றுக்கொன்று மாறுபாடாக இருக்கும் இன்பமும் துன்பமும் தருவதாகிய நல்வினையும்

தீவினையும் என இருந்து ஆன்மாக்களுக்கு உடம்பு முதலியன வருவதற்குக் காரணமாக இருக்கும்.

## கன்ம மலத்தின் பெயர்கள்

*பக்குவம் ஆம் காலம் பயன் ஆகும் சுகதுக்கத்து*
*ஒக்க அருத்தும் வலியோடு ஒன்றுஆகி - அக்கணமே*
*தோன்றாது ஒழியும்எனச் சொல்லும்மிக்க ஆகமங்கள்*
*ஊன்றும் விதி ஊழ் கருமப் பேர்.* **36**

கன்ம மலம் பக்குவப்பட்ட காலத்தில் தன்பயனாகிய இன்பத் துன்பங்களைப் பொருத்தமாக நுகரச் செய்யும் சத்தியும் தானும் ஒன்றாக அப்பொழுதே கெட்டுத் தோன்றாது மறையும் என்று ஆகமங்கள் கூறும். இதற்கு விதி, ஊழ், கருமம் என்பனவும் பெயராகக் கூறப்படும்.

## சிவம் ஆன்மாக்களுக்குப் பந்தம் உண்டாக்குதல்

*ஐம்பாசம் என்றே அரிய சிவஆகமங்கள்*
*நம்பா உரைக்கும் நடலை அறத் - தம்பம் இதில்*
*ஆர்ப்புஉண்டு நின்றுஇருந்தவாம் உயிர்க்குநாதன்அன்பால்*
*ஆர்ப்பு உறுத்தும் தன்மை உரைப்பாம்.* **37**

மேலே கூறப்பட்ட ஆணவம், திரோதானம், சுத்த மாயை, அசுத்தமாயை, கன்மம் என்பவற்றை ஆகமங்கள் ஐம்பாசம் என விரும்பி உரைக்கும். இப்பாசங்களின் வஞ்சனையான மறைப்பு நீங்கும்படியாக, இப்பாசமாகிய கம்பத்தில் கட்டுப்பட்டுக் கிடந்த உயிர்க்கு இறைவன் அருளுடன் இவற்றை அனுபவித்துத் தொலைக்கச் செய்யும் முறையினை இனிக் கூறுவோம்.

## கேவலத்தில் ஆன்மாவின் தன்மை

மூலமலத்தால் தலைமைமுற்றும் மறைக்கப்பட்டுச்
சாலும் உரு அருவம் சார்குணங்கள் - சீலக்
கலாதிஇன்றிப் போகக் கருத்துஇன்றிக் கர்த்தன்
அலதுவிபு கேவலத்து ஆன்மா 38

ஆணவமலத்தால் ஆன்மா தன் தலைமைக் குணங்கள் முழுதும் மறைக்கப்பட்டு, உருவாகிய தூல உடம்பு, அருவாகிய சூக்கும உடம்பு, குண உடம்பு, கலை முதலிய தத்துவங்களாலான கஞ்சுக உடம்பு ஆகியவற்றுள் ஒன்றும் இன்றிப் போகம் நுகரும் கருத்துச் சிறிதும் இன்றி. எந்த ஒரு செயலுக்கும் தலைவனாம் தன்மை இன்றி ஆணவத்துடன் வியாபகமாக அடங்கிக் கிடக்கும்.

## சகலத்தில் ஆன்மாவின் தன்மை

தூங்கும் குருடர் துயில்எழுந்து தூய்மையுடன்
ஓங்கி வழிகண்டு செ(ல்)ல உற்றஒருவர் - தாம்கொடுக்கும்
கோலால் வழிநடக்கும் கொள்கை அதுபோல் மாயைக்
காலாம் தனுகரணங்கள். 39

உறங்குகின்ற குருடன் விழித்தெழுந்து நல்ல ஊக்கம் பெற்று வழியறிந்து நடந்து செல்வதற்கு, உறவாகப் பொருந்திய ஒருவர் உதவியாகக் கொடுத்த கோலைக் கொண்டு வழிநடக்கும் தன்மைபோல ஆணவத்தில் கிடந்த ஆன்மாவுக்கு இறைவன் மாயையின் வழியாக உண்டாகும் உடம்பு கருவி முதலியவற்றைப் படைத்துக் கொடுப்பன். இவற்றால் ஆன்மா வினைப்பயன்களை அறிந்து அனுபவிக்கும்.

## மாயையிலிருந்து தத்துவங்கள் தோன்றும் முறைமை

*ஒப்புஅற்ற மேல்ஆம் உணர்வுஆம் அமலன் உயிர்க்*
*கப்புஅற்று ஒன்றுஆகக் கருணையால் - துப்புஉண்ர்த்தற்கு*
*ஆய சதாசிவம் மேல்ஆம் ஓர் சிவம் உரிமை*
*ஏய சுத்தமாயை தனிலே.* **40**

தனக்கு ஒப்பும் உயர்வும் அற்றதும், அறிவு மயமாய் இருப்பதும், மலம் இல்லாததும் ஆகிய சிவம், உயிர்கள் தன்னை விட்டு வேறாகச் செல்லுவது நீங்கித் தன்னொடு ஒன்றாக இருந்து சிவானந்தம் அனுபவிக்கும்படி, தனது திருவருளால் ஆன்மா கன்மப்பயனை நுகர்ந்து நீங்குவதற் காகச் சுத்த மாயையிலிருந்து முதலில் தத்துவங்களில் மேலாக உயர்ந்து நிற்கும் ஒலிவடிவாகிய சிவதத்துவத்தைத் தோற்றுவிப்பான்.

## பிரேரகாண்டம்

*சொற்றஅதனில்விந்து சொ(ல்)லும்இதில்சாதாக்கியம்ஆம்*
*உற்ற அதனில்ஈசர் அதில்வித்தை - மற்ற இது*
*ஐந்து ஆகும் தத்துவங்கள் ஆம் பிரேரகாண்டம் என*
*வந்த அவைகள் சொல்ல மதி,* **41**

மேலே சொல்லப்பட்ட நாத தத்துவத்திலிருந்து விந்து தத்துவமும் அதிலிருந்து சாதாக்கிய தத்துவமும் அதிலிருந்து மயேச்சுர தத்துவமும் அதிலிருந்து சுத்தவித்தை என்னும் தத்துவமும் என ஐந்து தத்துவங்கள் உண்டாகும். இவற்றைப் பிரேரகாண்டம் என அறிக.

பிரேரகாண்டம் - பிற தத்துவங்களைத் தூண்டி எழுப்பிச் செயல்படுத்தும் தத்துவங்களின் தொகுப்பு.

## சுத்தமாயையில் தோன்றும் ஏனைய சொல் உலகும் பொருள் உலகும்

*அக்கரங்கள் ஐம்பத்தொன்றுஆம் பதினொன்றுஆம் மனுவும்*
*மிக்கபதம் எண்பத்தொன்றுஆம் வியப்பாய் - வர்க்கம்*
*எழுகோடி மந்திரம் நூல்எண்இல் புவனம்*
*அழிவுஇல் எண்மூன்றோடு இருநூறுஆம்.* **42**

மேலும் சுத்தமாயையில் 'அ' முதல் 'க்ஷ' வரை ஐம்பத்தொரு எழுத்தும் ஈசானம் முதல் அஸ்த்திரம் வரை பதினொரு மந்திரமும் பிரணவம் முதல் நமோநம என்பது வரை எண்பத்தொரு பதமும் 'நம' முதல் 'படு' வரை ஏழு முடிவுகளை உடைய ஏழு கோடி மந்திரமும் அளவில்லாத வேதாகம நூல்களும் காலாக்கினி ருத்திர புவனம் முதல் அநாசிருத புவனம் வரை அழிவில்லாத உலகங்கள் இருநூற்றிருபத்துநான்கும் தோன்றும்.

*சொற்ற அவைகள் தோற்றுவித்துச் சொற்ற குணத்தால் உயிர்க்கு*
*மற்று உருவாய் மிக்கஇன்பம் மன்னியிடல் - உற்ற*
*பொதுஆகும் தன்உருவும் தானும் பொய்ஆகும்*
*அது சுத்தமாயைக்கு உண்மை.* **43**

மேலே சொல்லப்பட்ட சொல் வடிவும் பொருள் வடிவுமாகிய தத்துவங்களைத் தோற்றுவித்து அவற்றின் தன்மையால் விஞ்ஞானகலராகிய ஆன்மாக்களுக்கு உடம்பு முதலியனவாக அமைந்து, அவ்வான்மாக்கள் இன்பம் அனுபவிக்கச் செய்வது சுத்தமாயையின் பொது இயல்பு. சுத்த மாயையால் உண்டாகும் வடிவங்களும் அம் மாயையும் நிலையில்லாததாய் மாறி மாறித் தோன்றுவதாய் இருப்பது அதன் உண்மையியல்பு ஆகும்.

## அசுத்த மாயையில் தோன்றும் தத்துவங்கள்

ஆக்கும் அனந்தேசரால் ஆம் அசுத்தமாயைதனில்
ஊக்கும் காலம் நியதியோடு கலை - தூக்கும்
கலைஅதனில் வித்தை அதில் காணும் அராகம்
அலைவுஅற இக்கஞ்சுகங்கள் ஆம் 44

படைக்கும் தொழில் உடைய அனந்தேசுரரால் அசுத்த மாயையிலிருந்து காலம், நியதி, கலை என்னும் தத்துவங் களும், பின் கலையிலிருந்து வித்தை என்னும் தத்துவமும் வித்தையிலிருந்து அராகம் என்னும் தத்துவமும் ஆக ஆன்மாவுக்குக் கஞ்சுக உடம்பு எனப்படும் இவ்வைந்து தத்துவங்களும் உண்டாகும்.

இவ்வைந்துடன் கூடி ஆன்மா கன்மப்பயனை அனுப விக்கும் பக்குவத்தைப் பெறும் நிலை புருடதத்துவம் எனப் படும். இவை தோன்றுவது அசுத்த மாயையின் ஒரு பகுதியில். அப்பகுதி மாயை என ஒரு தனித்தத்துவமாக எண்ணப்படும். ஆக அசுத்த மாயையிலிருந்து தோன்றும் தத்துவங்களாகப் பாடலில் ஐந்து மட்டும் எடுத்துக் கூறப் பட்டிருந்தாலும் ஏழு தத்துவங்கள் தோன்றும் என்பது கருத்தாகக் கொள்ளப்படும்.

## பிரகிருதி மாயையில் தோன்றும் தத்துவங்கள்

உரைத்த கலையில் உருத்திரரால்ஆம் மான்
தெரித்த குணமூலத்துஆம் சித்தம் — உரைத்த அதனில்
புத்திஅதில் ஆங்காரம்போதும் அதுமூன்று ஆகும்
மெத்து தைசதம் வைகரி 45

## அறிவுப் பொறியும் தொழில் பொறியும்

*பூதாதி சாத்துவிக தைசதத்தில் பொற்பொடுஉறப்*
*போதும் மனம் ஞானப் பொறிஐந்தும் — ஓதும்மற்ற*
*வைகரியில் ராசதம்தான் மன்னக் கன்மஇந்திரியம்*
*ஐயபின்னில் தாமதம் மன்ன* 46

## தன்மாத்திரை, ஐம்பெரும்பூதம், சத்காரியம்

*சத்தஆதிஆம் இதனில் சாற்று பஞ்சபூதம் அதுஆம்*
*வித்தாரம் ஆம் தோற்ற மெய்ம்மைஇது—வைத்ததுபோல்*
*தோன்றும் இடத்து ஒடுக்கம் தோன்றாது. ஒடுங்கும் இவை*
*ஆன்ற அறிவால் அறியத்தான்.* 47

மேலே கூறப்பட்ட கலையிலிருந்து உருத்திரர் என்பவரால் 'மான்' என்னும் தத்துவம் தோன்றும். இது மூலப் பிரகிருதி எனவும்படும். இம் மூலப்பிரகிருதியிலிருந்து குண தத்துவம் உண்டாகும். இது சத்துவம், இராசதம், தாமதம் என மூன்று. இம்மூன்றும் சமமாய் இருக்கின்ற நிலையே குணம். அவ்வியக்தம், சித்தம் என்னும் பெயர்களால் சொல்லப்படும். இக்குண தத்துவத்திலிருத்து புத்தி தத்துவம் தோன்றும். புத்திதத்துவத்திலிருந்து ஆங்கார தத்துவம் தோன்றும். இந்த ஆங்கார தத்துவம் தைசதம், வைகாரிகம், பூதாதி என மூன்று வகையாக இருக்கும்.

சாத்துவிக குணம் மிகுந்துள்ள தைசத ஆங்காரத்திலிருந்து மனமும் அறிவுப் பொறிகள் ஐந்தும் தோன்றும். இராசதகுணம் மிகுந்துள்ள வைகாரிக ஆங்காரத்திலிருந்து தொழில் பொறிகள் ஐந்தும் தோன்றும்.

தாமத குணம் மிகுந்துள்ள பூதாதி ஆங்காரத்திலிருந்து சத்தம் முதலிய தன்மாத்திரைகள் ஐந்தும் தோன்றும். தன்

மாத்திரைகளிலிருந்து ஐம்பெரும்பூதம் தோன்றும். இங்ஙனம் உருத்திரரால் தோற்றுவித்து விரிவாக வைத்தது போலவே அவையவை தோன்றிய இடத்திலேயே சூக்குமமாக ஒடுங்கும். இங்ஙனம் ஒடுங்கிய இவை புலப்பட்டுத் தோன்றாமல் சூக்குமமாய் ஒடுங்குவதால் உள்ளது என்றும் சொல்லப்படாது; இல்லது என்றும் சொல்லப்படாது இதுவே சத்காரியம். இதனை நிறைந்த சிவாகமங்களை ஆராய்ந்த அறிவால் அறிந்து கொள்வதே முறை.

## மேலால் அவத்தை

ஆக்கியிடும் முப்பானோர் தத்துவமும் ஐவகையது
ஆக்கி உயிர்க்குப் பெந்தம் ஆக்கியிடல் - நோக்குகின்ற
மேலால் அவத்தைஇது மிக்க நடுஅவத்தை
சாலஒன்றாம் தத்துவக்கட்டில். 48

## மத்தியால் அவத்தை

ஐந்துவகைப் போகம் அருத்துவித்தற்கு ஆய் உடற்கண்
ஐந்து அவத்தை ஆகி அரும்போகம் - பெந்தித்து
அருந்தல் மத்தியால் அவத்தைஆகும் அதோ அவத்தை
புரிந்துமிகப் போகம்அது உண்ணும்.

## கீழால் அவத்தை

தூலகாயம் இறந்து சூக்குமத்தால்ஆம் காயம்
கோலம்என எய்திக் கொடுநரகில் - மேலான
சொர்க்கத்தில் இன்பதுன்பம் சோராது அனுபவித்து
நிற்பதுவும் அஞ்சு அவத்தை நேர்.

ஆணவத்தில் கட்டுண்டு கிடந்த உயிர்க்கு இறைவன் அசுத்த மாயையிலிருந்து ஏழு தத்துவங்களும் பிரகிருதி

மாயையிலிருந்து இருபத்துநான்கு தத்துவங்களும் ஆக முப்பத்தொரு தத்துவங்களையும் ஆக்கி உயிரைப் பந்தப் படுத்தி அவ்வுயிர் வினைப்பயனை அனுபவிக்கும்படி அதன் உணர்வை துரியாதீதம், துரியம், சுழுத்தி, சொப்பனம், சாக்கிரம் எனப் படிப்படியாய் மேல்நோக்கி எழுப்பு கின்றான். இது மேலால் அவத்தை.

தத்துவங்களெல்லாம் மிகவும் ஒன்றாகக் கட்டப்பட்டு உடம்பாய்ப் பெற்ற ஆன்மாவுக்கு ஐந்து அறிவுப் பொறி களின் வழியாக ஐந்துவகை நுகர்ச்சியைத் தருவதற்காக அவ் வுடம்பின்கண் ஐந்து நிலைகளை உண்டாக்கிப் பந்தப்படுத்தி நுகரச் செய்வது மத்தியால் அவத்தை.

வினைப்பயனை மிகவும் விரும்பி நுகர்வதற்கு இட மாகிய இந்தப் பருவுடம்பு நீங்கினபொழுது சூக்கும உடம்பி லிருந்து பாவப்பயனை நுகர்வதற்குரிய உடம்பும் புண்ணியப் பயனை நுகர்வதற்குரிய உடம்பும் தோன்றும். இவ்வுடம்பு களைக் கொண்டு சுவர்க்க இன்பத்தையும் நரகத் துன்பத் தையும் அனுபவிப்பதும் ஐந்தவத்தையோடு ஒக்கும். இது கீழாலவத்தை எனப்படும்.

இவ்வாசிரியர் உயிர் ஆணவக் கட்டிலிருந்து நீங்கிப் படிப்படியே உடம்பு பெற்றுக் கன்மப் பயன் நுகர எழுச்சி கொள்வதை மேலால் அவத்தை என்றும் உடம்பிலிருந்து பயன் நுகர்வதை மத்தியால் அவத்தை என்றும் உடம்பு நீங்கியபின் திருவடியடையாமல் சுவர்க்க நரகம் அடைந்து இன்பத் துன்பம் நுகர்வதைக் கீழால் அவத்தை என்றும் கூறுகின்றார்.

## அவத்தை உறுவதே சகலநிலை

இம் முன்று அவத்தை இதனில் இறந்தே பிறந்து இங்கு
அம்மா மற்று அன்றுமுதல் இன்று அளவும் - மம்மர் மல
பாகம் வருத்தப் பரன் உதவும் ஆணைவழி
ஏகல் சகல அவத்தையே. 51

ஆன்மா தொன்றுதொட்டு இன்றுவரை ஆணவ மல மயக்கம் பக்குவப்படுவதற்காக இறைவன் உதவும் சிற்சத்தி யின் வழியே மேலே கூறிய மூன்று அவத்தைகளிலும் இறந்தும் பிறந்தும் இயங்கும் நிலையே சகல அவத்தை எனப்படும்.

## மேலால் அவத்தையில் துரியாதீதம்

சொற்ற அனந்தேசரால் சொல் மாயையில் காலம்
உற்ற நியதி கலையோடு வித்தை - நத்தும்
அராகம் முதல் தோற்றுவித்திட்டு ஆன்மாவில் சேர்த்தல்
பராவும் மேலாம் அதீதம் பார். 52

மேலே சொல்லப்பட்ட அனந்தேசர் தமது கிரியா சத்தியினால் முற்கூறிய அசுத்தமாயையிலிருந்து காலம், நியதி, கலை, வித்தை, அராகம் என்னும் ஐந்து தத்துவங் களையும் தோற்றுவித்து அவற்றை ஆன்மாவுடன் சேர்ப்பது மேலால் அவத்தையில் துரியா தீதம் எனப்படும்.

## மேலால் அவத்தையில் துரியம், சுழுத்தி, சொப்பனம்; சாக்கிரம்

போகத்தில் உத்தியோகம் பொங்கச் சீகண்டர் தம்மால்
ஆம் அக்கலையில் உண்டாம் அப்பகுதி - ஏகம் அது ஆய்
நிற்றல் மேலாம் துரியம் நிற்கும்பகுதியில் வந்து
உற்ற குணம் புத்தி அகந்தை 53

ஒன்றாதல் மேல் சுழுத்தி உற்ற ஆங்காரத்தில்
நின்றார் மனம் பொறிகள் நேர் விடயத்து - ஒன்று ஆதல்
ஆம் சொப்பனம் விடயத்து ஆம்பூதத்து ஒன்றுஆதல்
ஆம் சொற்ற மேல் சாக்கிரம். 54

ஆன்மாவுக்கு வினைப்பயன் நுகர்வதில் ஊக்கம் உண்டாவதற்காக சீகண்டருத்திரர் தமது கிரியாசத்தி

யினால் கலையிலிருந்து தோற்றுவிக்கப்பட்ட மூலப்பிரகிருதி யுடன் ஆன்மா ஒன்றுபட்டு நிற்றல் மேலால் அவத்தையில் துரியம் எனப்படும். அந்த மூலப்பிரகிருதியிலிருந்து தோன்றிய குணம், புத்தி ஆங்காரம் என்னும் தத்துவங் களுடன் ஆன்மா ஒன்றுபட்டு நிற்றல் மேலால் அவத்தையில் சுழுத்தி. ஆங்கார தத்துவத்திலிருந்து தோன்றிய மனத் தொடும் பொறிகளுக்குரிய விடயங்களொடும் தன்மாத்திரை களொடும் ஒன்றுபடுதல் மேலால் அவத்தையில் சொப்பனல், தன்மாத்திரைகளிலிருந்து தோன்றிய பூதங்களால் ஆகிய உடம்பொடும் அறிவுப்பொறி தொழில்பொறிகளொடும் ஒன்றுபடுதல் மேலால் அவத்தையில் சாக்கிரம்.

பாடலில் தாத்துவிகமாகிய வாயுக்களுடன் ஒன்றாதல் கூறப்படவில்லை எனினும் துரியத்தில் பிராணவாயுவுடன் ஒன்றாகும் என்றும் சொப்பனத்தில் பிராணவாயுவுடனும் மற்ற ஒன்பது வாயுக்களுடனும் ஒன்றாகும் எனவும் சாக்கிரத்தில் பொறிகள் பத்து, பொறிகளுக்குரிய விடயங்கள் பத்து, வாயுக்கள் பத்து, அந்தக்கரணம் நான்கு, புருடன் ஒன்று ஆக முப்பத்தைந்து தத்துவ தாத்துவிகங் களுடன் ஒன்றாகும் எனவும் கொள்ளுதல் வேண்டும்.

## மேலாலவத்தைச் சாக்கிரத்தில் மத்தியால் அவத்தை

மேல்சாக்கிரம் அதனில் மிக்கவிடயம் பொறிக
ளால் போகம்உண்டல் மத்தியால் அவத்தை - பார்க்கில்
சிவன் சத்தி சாதாக்கியம் ஈசர் வித்தை
இவர் பிரேரிக்க அடைவால். 55

ஆராய்ந்து பார்க்குமிடத்துச் சிவதத்துவமாகிய சிவன் முதல் சுத்த வித்தை வரை உள்ள ஐந்து தத்துவங்களும் ஏனைய தத்துவங்களைத் தாண்டி எழுப்பி இயக்குவதாம் உயிர் மேலாலவத்தைச் சாக்கிரத்தில் இருந்துகொண்டே நுகர்ச்சிப் பொருள்களைப் பொறிகளின் வழியால் பெற்று

நுகரும்போது அடையும் அவத்தைகள் மேல் சாக்கிரத்தில் மத்தியால் அவத்தை எனப்படும்.

## மேல்சாக்கிர மத்தியாலவத்தையில் ஐந்து அவத்தைகள் - சாக்கிரம்

சொற்ற மத்தியால்அவத்தை சொல்லின் இது ஐந்துஆகும்
உற்றவிழி ஆதியில் ஒன்றாய் உயிர்தான் - சொற்றகன்மப்
போகம் உண்ணல் சாக்கிரம் அப்போகம் அறக்கண்டத்தில்
ஆகும் மனத்தால் போகத்தை **56**

## கனவு, சுழுத்தி, துரியம்

உண்டல் கனவுஆப் இதயத்து உற்றுஉறும் சித்தத்தில் நினைந்து
உண்டல்சுழுத்தி உறும்துரியம் - உண்டல்அறல்
நாபித்தானத்து இனிதுநண்ணி அசைவு அருந்தல்
நாபி கடந்து அசையான் ஆய் **57**

## துரியாதீதம்

நிற்கும் மூலத்தில் ஒன்றாய் நின்று சுகம் அருந்தல்
நிற்கும் அதீத நிலைமைஅது - நிற்கும்
சிவதத்துவம் ஐந்தும் சேர்புருடன் நீங்க
அவையும் பூதங்களும்ஆக. **58**

## அவத்தைகளில் தொழில்படும் கருவிகளின் தொகை

எண்ணிரண்டும் நீங்க இருவாயுப்பத்துடனே
நண்ணும்வசனாதி ஐந்தும் கண்ணியிட - எண்ணுதொகை
ஏழ்அஞ்சு இருபத்தஞ்சு என்றதில் ஓர்மூன்று இரண்டுஒன்று
ஆழும் சாக்கிராதி ஐந்தில்ஆம் **59**

மேல் சாக்கிர அவத்தையில் நிகழும் எனச் சொல்லப் பட்ட மத்தியால் அவத்தையை விரித்துச் சொன்னால் அது ஐந்து வகையாக இருக்கும். அவை : ஆன்மா கண் முதலிய பொறிகளுள் ஒன்றனுடன் கூடியிருந்து கன்மப்பயனை நுகர்தல் சாக்கிரம். அங்ஙனம் நுகர்ந்த நுகர்ச்சி நீங்கக் கண்டத்தில் மனத்தொடு கூடியிருந்து நுகர்தல் கனவு. அந்நுகர்ச்சி நீங்க இதயத்தில் சித்தத்துடன் கூடியிருந்து நுகர்தல் சுழுத்தி அந்நுகர்ச்சி நீங்க நாபியில் பிராணவாயு வுடன் கூடிச் சிறிதே நுகர்தல் துரியம். அந்த நுகர்ச்சி நீங்க நாபியையும் கடந்து மூலாதாரத்தில் பிராணவாயுவின் அசைவு இன்றித் தான் மட்டும் கிடத்தல் துரியாதீதம். இவ்வவத்தைகள் நிகழும்போது சிவதத்துவம் ஐந்தும் அசுத்தமாயா தத்துவங்கள் ஏழில் புருடன் நீங்கிய ஆறும் பெரும்பூதம் ஐந்தும் ஆகப் பதினாறும் நீங்க, எஞ்சி நின்ற வற்றுள் புருடன் ஒன்று, அந்தக்கரணம் நான்கு, பொறிகள் பத்து என்னும் பதினைந்து தத்துவங்களும் வாயுப்பத்து, பொறிகளுக்குரிய விடயங்கள் பத்து ஆக இருபது தாத்து விகங்களும் ஆக முப்பத்தைந்து கருவிகள் தொழில்படும். இவற்றுள் சாக்கிரத்தில் முப்பத்தைந்து கருவிகளும் சொப்ப னத்தில் இருபத்தைந்து கருவிகளும் சுழுத்தியில் மூன்று கருவிகளும் துரியத்தில் இரண்டு கருவிகளும் துரியாதீதத்தில் புருடனாகிய ஒன்று மட்டும் தொழிற்படும்.

சாக்கிரத்தில் முப்பத்தைந்து :— இந்திரியங்கள் பத்து. விடயங்கள் பத்து, வாயுக்கள் பத்து, அந்தக் கரணம் நான்கு, புருடன் ஒன்று சொப்பனத்தில் இருபத்தைந்து :—

இந்திரியங்கள் பத்தும் நீங்க மற்ற இருபத்தைந்து சுழுத்தியில் மூன்று: புருடன் ஒன்று : பிராணவாயு ஒன்று சித்தம் ஒன்று துரியத்தில் இரண்டு : புருடனும் பிராண வாயுவும். துரியாதீதத்தில் ஒன்று - புருடன் மட்டும்.

## தத்துவங்களின் தன்மையும் செய்யு செயலும்

மூலமல மேலீட்டால் முற்றும் அவத்தைவிடக்
கோல வினைப்போகம் கொளுத்தியிட - ஏலுகின்ற
தத்துவங்கள் செய்யும் தகுதிச் செயல் அதனை
உத்தமநூல் ஓதல் உரைப்பாம். 60

இனி, ஆணவ மலத்தின் மிகுதி காரணமாக ஆன்மாவை வந்து பொருந்தும் அவத்தைகள் நீங்கும்படியாகவும் அழகிய வினைப் பயனை அவ்வான்மாக்களுக்குக் கூட்டும்படியாகவும் பொருந்துகின்ற தத்துவங்கள் செய்யும் பொருத்தமான செயல்களைத் தலைமையான ஆகமங்கள் கூறும் முறைமையினைச் சொல்வோம்.

## சிவதத்துவம் சத்தி தத்துவம்

ஞானம் அதேஆகும் நயந்த சிவ தத்துவத்தால்
ஆன அதோ மாயை அது மயக்கும் - ஆன சத்தி
தத்துவத்தால் நல்கிரியைதான் அதனால் காலம் உடன்
ஒத்த நியதி கலைகள். 61

## காலம், நியதி

ஆன விளங்கல் அதில் காலம் மூன்றாகும்
ஆன எல்லை போகம் அறப்புதுமை – தான் நவிற்றும்,
ஆகும் நியதிஅது ஆக்கினையால் மூன்றிடத்தும்
—கும் கலை குருடரை 62

## கலை, சுத்த வித்தை, வித்தை

தூக்கம் தவீரத் தொடும் கோல் போலே தொழில் மேல்
வீக்கத்தொடும் சுத்த வித்தை அது - ஆக்கும்
தொழில் அகன்று ஞானத்தால் தோன்றும்வித்தைதானும்
எழில் விடயம் உள்ளம் இனிது 63

## மயேச்சுரம், அராகம்

குறித்து அறிய ஞானம் கொடுக்கும் மற்ற ஈசர்க்கு
எறித்த குணம் ஏய்ந்த அறிவு - பிறித்து அகற்றும்
அக்கிரியையே அதனால் ஆன அராகம் அது
மிக்க இச்சை தான் விளக்குமே 64

## சாதாக்கியம், புருடன்

சாதாக்கியத் தொழில்தான் சார்ந்த ஞானக் கிரியை
நீதம் அது ஆய் முன் உற்று நின்றதால் - பேதக்
கிரியை ஞானம் சமமாய்க் கீழ்இடத்து ஒன்று ஆதல்
புருடன் எனப் போகம் வருத்தும். 65

சிவ தத்துவம் ஞானமேயாக இருக்கும். அது கீழ் நோக்கிய மாயையைத் தூண்டிச் செயல்படுத்தும், அம் மாயை ஆன்மாவுக்குப் பொய்யை மெய் எனக் காட்டி மயக்கும்.

சத்தி தத்துவம் நல்ல கிரியையேயாக இருக்கும். இது காலம், நியதி, கலை என்னும் தத்துவங்களைத் தொழிற் படுத்தும்.

கால தத்துவம் செல்காலம், நிகழ்காலம், எதிர்காலம் என மூன்றாக இருக்கும். இவை முறையே கன்மம் அனுபவித்துக் கழிந்த கால எல்லையினையும், நிகழ்காலக் கன்மப் பயனையும், எதிர் காலத்தில் புதிதாக உண்டாம் கன்மப் பயனையும் காட்டி நிற்கும்.

நியதி தத்துவம் அரசனது ஆணை போல மேற்கூறிய மூன்று காலத்துக்கும் உரிய கன்மப் பயன் தப்பாமல் அவரவரைச் சென்று அடையுமாறு செய்யும்.

கலை என்னும் தத்துவம் தூங்குகின்ற குருடனைத் தொட்டு எழுப்பும் கோல்போல் ஆணவத்தில் கிடந்த ஆன்மாவுக்குத் தொழில் செய்யும் ஆற்றலைப் பெருகச் செய்யும்.

சுத்த வித்தை என்னும் தத்துவம் ஞானம் மிகுந்தும் கிரியை குறைந்தும் இருக்கும். இது வித்தை என்னும் தத்துவத்தைத் தொழில் படுத்தும்.

வித்தை என்னும் தத்துவம் ஆன்மாவினுடைய ஞான சத்தியை விளக்கிக் கன்மப் பயன் நுகர்ச்சியில் ஊக்கம் ஏற்படுத்தும்.

ஈசுர தத்துவம் ஞானம் குறைந்து கிரியை மிகுந்து இருக்கும். இது அராக தத்துவத்தைத் தொழிற்படுத்தும்.

அராக தத்துவம் ஆன்மாவினுடைய இச்சாசத்தியைத் தூண்டிக் கன்மப்பயனை அனுபவிப்பதில் ஊக்கத்தை உண்டாக்கும்.

சாதாக்கிய தத்துவம் ஞானமும் கிரியையும் சமமாக நிற்பது. இது ஆன்மாவைக் கன்மப்பயன் நுகருமாறு கீழ் இறங்கச் செய்து ஞானமும் கிரியையும் வேறுபடாது ஒன்றாகத் தோன்றும் புருடதத்துவத்தைத் தொழிற் படுத்தும்.

## உள் கருவிகளின் செயல்

ஆங்காரத்தோடு மனம் ஆனசித்தம் புத்திஅது
ஓங்கும் பொறியால் உறும்விடயம் - ஆங்குஒன்று
எழுந்து பற்றிச் சிந்தித்தல் நிச்சயித்து ஆன்மாத்தான்
அழுந்தக் கழிந்து ஆணையால். 66

ஆன்மா சிவசத்தியினால் ஆங்காரம், மனம், சித்தம், புத்தி என்னும் உட்கருவியிடத்துப் புறக்கருவிகளாகிய ஐம்பொறிகளின் வழியாக வரும் நுகர்ச்சிப் பொருள்களை ஆங்காரத்தால் இது யாது என அறிவேன் என எழுந்தும். மனத்தால் அதனைப் பற்றியும் சித்தத்தால் அதனைச் சிந்தித்தும், புத்தியால் அது இன்னது என நிச்சயித்தும் அந்நுகர்ச்சிப் பொருளில் அழுந்தி அனுபவிக்கும்.

## செவி என்னும் பொறியின் செயல்

ஓசை குணமாக உறும் வான் இடமாக
ஏசில் சதாசிவராலே செவிதான் - ஓசையது
தான் கேட்டு மேலாம் தகும் கரணத்தால் அறியத்
தான் காட்டி நிற்கும் தரம். 67

செவி என்னும் பொறி, ஒலியைக் குணமாக உடைய ஆகாயத்தை இடமாகக் கொண்டு சதாசிவம் என்றும் அதிதெய்வத்தால் செலுத்தப்பட்டு எழும் அவ்வொலி என்னும் நுகர்ச்சியைக் கேட்டுப் பொருத்தமுடைய உட்கரணத்தால் ஆன்மா அறியும்படி உணர்த்தி நிற்கும்.

## தோல் (மெய்) என்னும் பொறியின் செயல்

ஓசை பரிசம் உறும் குணம் ஆம் கால் இடமா
ஆசுஇல் மகேசரல் ஆம் விடயம் - பேசும்
துவக்குஅது கண்டு உள்கரணத்துள் புகவே நிற்கும்
வியக்கும் உயிர்தான் அருந்தவே. 67

தோல் (மெய்) என்னும் பொறி, ஓசை பரிசம் என்னும் இரண்டு குணம் உடைய காற்றை இடமாகக் கொண்டு மகேசர் என்னும் அதி தெய்வத்தால் செலுத்தப்பட்டு எழும் தொடு உணர்ச்சி என்னும் நுகர்ச்சியை அறிந்து தகுதி யுடைய உட் கருவியால் ஆன்மா நுகரும்படியாக அறிவித்து நிற்கும். துவக்கு - தோல்.

## கண் என்னும் பொறியின் செயல்

ஓசை பரிசம் உருவம் குணம் உடைத்தாய்ப்
பேசும் அனல் இடம்ஆய்ப் பேசும் விழி - ஆசுஇல்
உருவம் அது கண்டு உட்கரணம் உற நிற்கும்
மருவும் உருத்திரர் தம்மால் 68

கண் என்னும் பொறி, ஓசை பரிசம் உருவம் என்னும் மூன்று குணம் உடைய ஒளியை இடமாகக் கொண்டு உருத்திரர் என்னும் அதி தெய்வத்தால் செலுத்தப்பட்டு எழும் உருவம் என்னும் நுகர்ச்சியை அறிந்து தகுந்த உள் கருவியால் ஆன்மா அறியும்படி அறிவித்து நிற்கும்.

## நாக்கு என்னும் பொறியின் செயல்

ஓசை பரிசம் உருவம் இரதத்தொடு நான்கு
ஆசுஇல் குண அப்பு அதன் இடம் ஆய் - நேசமுடன்
நாரணனால் சிங்நுவைதான் நல் இரதம் கண்டு நிற்கும்
காரணம் உள் செல்வதற்காக. 69

நாக்கு என்னும் பொறி, ஓசை, பரிசம், உருவம், இரதம் என்னும் நான்கு குணம் உடைய நீர் என்பதனிடமாக நின்று நாராயணன் என்னும் அதி தெய்வத்தால் செலுத்தப்பட்டு எழும் சுவை என்னும் நுகர்ச்சியை அறிந்து தகுந்த உள் கருவியால் ஆன்மா அறியும்படியாக அறிவித்து நிற்கும். சிங்நுவை - நாக்கு

## மூக்கு என்னும் பொறியின் செயல்

ஓசை பரிசம் உருவம் இரதம் கந்தம்
ஆசுஇல் குணம் பார்அது இடமாய்க் - கூசாமல்
கெந்தம் அறியும் கிராணம் அயன்தன்னால்
உந்து உள் கரணத்து உற. 70

மூக்கு என்னும் பொறி, ஓசை பரிசம் உருவம் சுவை மணம் என்னும் ஐந்து குணம் உடைய பூமியினிடமாக நின்று அயன் என்னும் அதி தெய்வத்தால் செலுத்தப்பட்டு எழும் மணம் என்னும் நுகர்ச்சியை அறிந்து தகுதியுடைய உட் கருவியால் ஆன்மா அறியும்படியாக அறிவித்து நிற்கும். கிராணம் - ஆக்கிராணம் - மூக்கு. கெந்தம் - மணம் - வாசனை.

## தொழில் பொறிகளின் செயல்

ஆன கன்ம இந்திரியும் ஐந்தும் கொளும்விடயம்
ஆன அப்பூதம் இடம்ஆய் ஐவரால் - தான் இதனோடு
ஆறாறு தத்துவத்தால் ஆனவினை ஆன்மாவுக்கு
ஏறுவான் ஏற்றும் இயல்பே. 72

தொழிற் கருவிகள் ஐந்தும் தத்தமக்கு விடயமாகிய செயல்களை, அததற்குரிய பூதங்களை இடமாகப் பற்றி நின்று, அததற்குரிய அதி தெய்வங்கள் செலுத்த, அவ்வச் செயல்களைச் செய்யும். முப்பத்தாறு தத்துவங்களால் ஆன்மாக்களுக்குப் பொருந்திய வினையை நுகர்ந்து அவை முத்தி நிலைக்கு உயர்ந்து செல்லும்படியாக இறைவன் அவ்வான்மாக்களுக்கு வினையைக் கூட்டி நுகரச் செய்யும் இயல்பு இதுவாம். இதுவரை கூறப்பட்டது சகல அவத்தை.

## சுத்த அவத்தை

முத்தி அவத்தை முறைமைஅது கட்டுரைக்கில்
வைத்தஅது தீக்கையினால் வந்துஎய்தும் - நித்தியமாம்
தீக்கைஅது செய்யத் திகழ் சத்திநிபாதம்
ஆக்கை அதுஆதல் செப்புவாம். 73

## இந்திரிய, விடய * விவர அட்டவணை

| | ஞானேந்திரியம் | ஞானேந்திரிய விடயம் | கன்மேந்திரியம் | கன்மேந்திரிய விடயம் | இவற்றுக்கு இடமாகும் பூதம் | பூதகுணம் | தொழிற்படுத்தும் அதிதெய்வம் |
|---|---|---|---|---|---|---|---|
| 1. | செவி | ஓசை | வாக்கு | பேசுதல் | ஆகாயம் | ஓசை | சதாசிவம் |
| 2. | மெய் (தோல்) | ஊறு | பாதம் (கால்) | இயங்குதல் | காற்று | ஓசை, ஊறு | மகேச்சுரம் |
| 3. | கண் | ஒளி | பாணி (கை) | கொடுத்தலும் வாங்குதலும் | நெருப்பு | ஓசை, ஊறு ஒளி | உருத்திரம் |
| 4. | வாய் (நாக்கு) | சுவை | பாயுரு (குதம்) | மலம் முதலியன கழித்தல் | நீர் | ஓசை, ஊறு ஒளி, சுவை | திருமால் |
| 5. | மூக்கு | நாற்றம் (வாசனை) | உபத்தம் | விந்து வெளிப் படுத்துதல் | மண் | ஓசை, ஊறு, ஒளி, சுவை மணம் | பிரம்மா. |

* செய்யுள் 67 முதல் 72 வரை உள்ள விவரம்.

சுத்த அவத்தை எனப்படும் முத்தி நிலையைச் சொல்லுவோமானால் அது குரு அளிக்கும் தீக்கையினால் உண்டாகும். தீக்கை செய்வதற்கு உயிரினிடம் அருட் சத்தி பதிதல் என்னும் நிலை உண்டாகவேண்டும். அது உண்டாகும் முறைமையினை இங்குச் சொல்லுவோம்.

## வினையால் பிறப்பு; பிறப்பால் வினை

*சாற்றும் சகல அவத்தை தன்னில் வினைக்காக உயிர்*
*தோற்றி இருந்து ஒடுங்கிச் சுற்றுங்கால் - ஏற்ற*
*வினைப் போகம் உண்டு அதனால் மேவும் இன்ப துன்பு ஆய்*
*வினைப்படும் அக்கன்மம் உதவி*

மேலே கூறப்பட்ட சகல அவத்தையில் உயிர் வினைக் குத்தக்கதாக உடம்பில் பிறந்து, இருந்து, இறந்து சுழலு மிடத்து இந்தப் பிறப்பில் நுகர்வதற்கு ஏற்றுக்கொண்டு வந்த பிராரத்த வினைப்பயனை நுகர்ந்து அதனால் இன்பத் துன்பத்தினை அடையும், அங்ஙனம் நுகரும் பொழுதே மேல் ஏறும் கன்மமாகிய ஆகாமியவினை உண்டாகும். அதன்பயனையும் இறைவன் ஆன்மாவுக்கு நுகரக் கொடுப்பான்.

## நரக, சுவர்க்க அனுபவம்

*உண்டாம் கடுநரகத்தோடு சொர்க்கம் சேர்ந்து அதனில்*
*உண்டாம் சுகதுக்கம் உண்டிட இக் - கொண்ட உடல்*
*விட்டு அதனுக்கு ஏற்ற உடல் மேவி நரக சொர்க்கம்*
*தொட்டுச் சுகதுக்க ஊண்* 75

இப்பிறப்பில் செய்தவினைப் பயனை அனுபவிப்பதற்கு நரகத்திலும் சுவர்க்கத்திலும் செல்லுதல் வேண்டும், இதற் காக இங்கே கொண்டிருந்த உடம்பைவிட்டு நரகத்துக்கும்

சுவர்க்கத்துக்கும் ஏற்ற உடம்பை எடுத்து அங்கே துன்பத்தையும் இன்பத்தையும் அனுபவிக்கும்.

இங்கு உள்ள உடம்பு பஞ்சபூத பரிணாம தூலதேகம். நரகத்துக்குரிய உடம்பு யாதனாசரீரம் அல்லது பூத சரீரம் எனப்படும். சுவர்க்கத்துக்குரிய உடம்பு பூதசார சரீரம் எனப்படும்.

புசித்து மறித்தும் பொருந்திக் கருவில்
வசித்துப் பிறந்து வளர்ந்து - நசிக்கும் இதில்
அன்புஉற்று நின்றுதுயர் அன்றுமுதல் இன்றுஅளவும்
இன்பு உற்றது என்று இறுமாந்தே. 76

ஆன்மா இங்ஙனம் சுவர்க்கத்தில் இன்பமும் நரகத்தில் துன்பமும் நுகர்ந்து மீண்டும் கருவில் வந்து தங்கிப் பஞ்சபூத பரிணாமமாகிய பருஉடம்பில் பொருந்தி, பிறந்து, வளர்ந்து, அழியும். இத்தகைய வினைச் சுழலிலும் பிறவிச் சுழலிலும் அன்பு வைத்து அன்றுமுதல் இன்றுவரை துன்பத்தையே நுகர்ந்தாலும் அதனை இன்பம் என்று மயங்கி அறிந்து செருக்குக் கொள்ளும்.

## பிறப்பு அளவு படாதது

எண்பத்துநான்கு நூறாயிரமாயே எடுத்த
பண்புற்ற யோனிப் பரப்பு அதனில் - எண்பற்றும்
யோனிஅதில் ஒன்றொன்றில் உற்ற பிறப்பு அனந்தம்
ஆனஅவை எய்தி அதனில். 77

ஆன்மா எடுக்கின்ற பிறப்பின் பரப்பு எண்பத்துநான்கு லட்சம் வேறுபாடு உடையது. இவற்றுள் வினைக்கு ஈடாக ஆன்மா எந்தப் பிறப்பை விரும்புகின்றதோ அந்த அந்தப் பிறப்புகளிலும் அளவில்லாத பிறப்பினை அடையும்.

## நால்வகைத் தோற்றம்; எழுவகைப் பிறப்பு

*அண்டசமும் ஆகும் சுவேதசமும் உற்பிச்சம்*
*மண்டும் சராயுசம் அதுஆம் நான்கில் – கண்ட பிறப்பு*
*ஓர்ஏழ் அதனை உரிய சிவாகமத்தில்*
*ஏராகச் சொல்வது இது.* 78

ஆன்மா உரு எடுத்து வெளிவருவது நான்கு வகை. அவை : முட்டையிலிருந்து வெளிப்படுதல், வியர்வை நீரிலிருந்து வெளிப்படுதல், வித்து, கிழங்கு முதலியவற்றி லிருந்து வெளிப்படுதல், கருப்பையிலிருந்து வெளிப்படுதல் என்பன. இந்நால்வகையாக வெளிப்பட்ட பிறப்பு ஏழுவகை என்று ஆகமங்கள் கூறுகின்றன. அவை பின்வருமாறு :-

## தாவரமாகப் பிறந்து பக்குவப்படுதல்

*ஊக்கியிடும் தாவரம் பத்தொன்பது நூறாயிரமாம்*
*நோக்கியிடின் ஒன்றொன்றின் நோக்குங்கால்-ஆக்கைஅது*
*எண்ண அரிதாம் பிறவிஎய்தி இன்பதுன்பம் உற்று*
*நண்ண அரன் நல்பாகம் கண்டு.* 79

ஓர் அறிவு உயிராகிய தாவர உயிர் பத்தொன்பது லட்சம். இதனையும் ஆராய்ந்து பார்த்தால் இதிலும் ஒவ்வொன்றிலும் எண்ணிலாத பிறப்பு வேறுபாடு உண்டு. ஆன்மா இந்தப் பிறவிகளில் பிறந்து இன்பதுன்பங்களை நுகர்ந்து பெற்ற பக்குவத்தை இறைவன் கண்டு வேறு பிறவியில் செலுத்துவான்,

## ஊர்வனவாகப் பிறந்து பக்குவப்படுதல்

*ஆன ஊர்வ பதினைந்து ஆயிரமாம் யோனிஅதில்*
*ஆன ஒன்றொன்றில் அனந்தம்அது - ஆன*
*பிறப்பு அனந்தம் தன்னில் பெருகி சுகதுக்கத்து*
*உறப் பரமன் பாகம் உணர்ந்து.* 80

*ஊர்வனவற்றில் பதினைந்து லட்சம் வேறுபாடு உண்டு. இவை ஒவ்வொன்றிலும் அளவில்லாத வகை உண்டு. ஆன்மா இவற்றில் பிறந்து இன்பதுன்பம் நுகர்ந்து பக்குவப் படுதல் கண்டு இறைவன் அதனை வேறு பிறவியில் செலுத்துவான்.*

## நீர் வாழ்வனவாகப் பிறந்து பக்குவப்படுதல்

*நீரில் பிறக்கும் நிகழ் யோனி பத்துநூறு*
*ஓரில் ஒன்றொன்றதனில் ஓ அனந்தம் - சாரும்*
*பிறப்பில் இதஅகிதத்தால் பெற்றிடும் பாகத்தால்*
*உறப் பரமன் ஓர்ந்து ஆணையால்* 81

*நீரில் பிறக்கும் பிறவி பத்து லட்சம். இதிலும் ஒவ்வொறிலும் அளவில்லாத வகை உண்டு, ஆன்மா இவற்றில் பிறந்து இன்பதுன்பம் நுகர்ந்து பக்குவப்படுவது கண்டு இறைவன் தனது சத்தியால் அதனை வேறு பிறப்பில் செலுத்துவான்.*

## பறவையாகப் பிறந்து பக்குவப்படுதல்

*பறவையாம் யோனி பத்து நூறாயிரம் அங்கு*
*உறும் அதில் ஒன்றொன்றில் உலப்புஇல் - பிறவி*
*எடுத்து நன்மைதீமையதால் எய்து பரிபாகம்*
*அடுத்தது கண்டு ஐயன் அருளால்.* 82

பறவைப் பிறப்புப் பத்து லட்சம். இதில் ஒவ்வொன்றிலும் எண்ணி முடிக்க இயலாத அளவு வேறுபாடு உண்டு. ஆன்மா இவற்றில் பிறந்து இன்பதுன்பம் நுகர்ந்து பக்குவப் படுதல் கண்டு இறைவன் அருளால் அதனை வேறு பிறவியில் செலுத்துவான்.

## விலங்குப் பிறப்பில் பிறந்து பக்குவப்படுதல்

நாற்கால் யோனி நவின்ற பத்துநூறு அதனில்
ஓர்க்கில் பிறப்புஅனந்தம் ஒன்றொன்றில் — ஆர்ப்பம்
விருப்பு வெறுப்பு உண்டு அவ்வெகுபிறப்பால் பாகம்
உடுப்பது கண்டு உள்ள அரனால் 83

விலங்குப் பிறப்புப் பத்துலட்சம். இதிலும் ஆராய்ந்து பார்த்தால் ஒவ்வொன்றிலும் அளவில்லாத பிறப்பு உண்டு. ஆன்மா இவற்றில் பிறந்து தளைப்பட்டு விருப்பு வெறுப்புடன் இன்ப துன்பங்களை நுகரும். இங்ஙனம் பல பிறப்புகளால் உயிர்க்குப் பக்குவம் உருவாய் வருவதைக் கண்டு இறைவன் அதனை வேறு பிறப்பில் செலுத்துவான்.

## தேவப் பிறப்பில் பிறந்து பக்குவப்படுதல்

அரிய பதினொரு நூறாயிரமாம் யோனி
உரிய தேவப் பிறவி ஓரில் — தெரியும் ஒன்று
ஒன்றில் அனந்தம் அதா உற்ற பிறப்பால் பாகம்
நன்று அறிந்து நம்பரமனால் 84

அருமையுடைய தேவப் பிறப்புப் பதினெரு லட்சம். ஆராய்ந்து பார்த்தால் இதிலும் ஒன்றொன்றிலும் அளவில்லாத பிறப்பு உண்டு. இத்தகைய பிறப்புகளால் ஆன்மாவுக்குக் கன்மம் பக்குவப்படுவதை இறைவன் அறிந்து வேறு பிறப்பில் செலுத்துவன்.

## மக்களாகப் பிறந்து பக்குவப்படுதல்

*அருமையுடன் ஒன்பது நூறாயிரமாம் யோனி*
*உரிமையினால் ஒன்றொன்று அங்கு ஒன்றில்—பரிவால்*
*எடுத்த பிறப்பு எண்இல் இலக்கத்து இன்பொடு துன்பு உண்டு அங்கு*
*அடுத்த பாகத்து அன்பினால்* 85

மானிடப் பிறப்பு ஒன்பது லட்சம். ஒவ்வொன்றிலும் விருப்பம் கொண்டு எடுக்கும் பிறப்பு அளவில்லாதது. இதனால் இன்பதுன்பம் நுகர்ந்து அதனால் பக்குவம் வருதல் கண்டு இறைவன் அன்பினால் உயர்ந்த பிறப்பில் செலுத்து வான்.

## நால்வகை வருணத்தில் பிறந்து பக்குவப்படுதல்

*நால்வருணமாக நடக்கும் தனிப்பிறப்பில்*
*கோலமுடன் பிறந்த கொள்கையால் — நால் வருணத்து*
*ஏற்கும் அறம் புரிந்து அங்கு எய்திய பாகம் அதனை*
*ஆக்கும் அரன்தன் அருளினால்.* 86

மேலே கூறியவாறு பல பிறப்புக்களில் பக்குவப்பட்டு வந்த ஆன்மாவை இறைவன் தன் அருளினால் மக்கட் பிறப் தல் நால்வகை வருணத்தில் பிறக்கச் செய்து அவ்வவ் வருணத்துக்குக் கூறப்பட்ட அறநெறிகளில் தவறாமல் நடக்கச் செய்து பக்குவம் வரச் செய்வான்.

## புறச் சமயங்களில் புகுதல்

*நிற்கும் காலத்தில் நிலையாம் புறச்சமய*
*வர்க்கம் அதில் நிற்க வரும் பாகம் — புக்கது கண்டு*
*ஆங்கு அதனுக்கு ஏற்க அடுத்ததனு ஆதியாய்*
*ஓங்கும் அரனால் உற்று* 87

இங்ஙனம் நால்வகை வருணத்துக்குரிய அறத்தில் வழுவாமல் நிற்கும் பொழுது ஆன்மாவுக்குப் புறச்சமயங் களில் புகுவதற்குரிய பக்குவம் வரும். அதனைக் கண்டு இறைவன் புறச்சமய நெறிகளில் நிற்பதற்கேற்ற உடம் பையும் புறக்கருவி அகக்கருவி முதலியவற்றையும் தருவான்.

## அகச் சமயங்களில் புகுதல்

நின்று பரிவாய் அதனில் நிட்டை உறல் கண்டு அரனால்
ஒன்றும் பதத்தில் உறும்போகம்—நின்று அருந்தி
நிற்கும் பாகம் கண்டு நிற்கின்ற உள்சமய
வர்க்கம்அதற்கு ஏற்றவளம் ஆம். 88

ஆன்மா புறச்சமய நெறிகளில் நின்று அவற்றிற்குரிய நிட்டையினைப் பொருந்தியதைக் கண்டு இறைவன் அதற்குரிய பதமாகிய முத்தியைத் தருவான். இதனை அனுபவித்துப் பக்குவம் பெற்ற பொழுது அகச் சமயங்களை மேற் கொள்வதற்குரிய அறிவு உண்டாகும்,

## ஆகம சித்தாந்த சைவத்தில் புகுதல்

காயம் முதல் நான்கும் அழற்கண்ணுதலால் எய்தில்
ஏயம் அறநின்ற இயல்பு அதனுக்கு - ஆய
பதம் அதனில் உற்றுப் பயன்அருந்தி நிற்கும்
இதம்உற ஆகம சைவத்து 89

இறைவன் அருளால் ஆன்மாக்கள் அகச் சமயக் கடவுளர்க்குரிய உருவம், மந்திரம் ஆகியவற்றை அறிந்து, அதைப் பயின்று நிட்டை, கூடி, விலக்கத்தக்கன எல்லாம் விட்டு நீங்கும்படி நின்ற தன்மைக்குப் பொருந்திய பத முத்திகளைப் பெற்றுப் பயன் துகர்ந்து பக்குவம் பெற்றால் அவ்வான்மாக்களை இறைவன் ஆகமங்களை முதல்

நூலாகப் பெற்று விளங்கும் சைவ சமயத்தில் செலுத்து வான்.

காயம் முதல் நான்கு : மூர்த்தி, மந்திரம், சாதனம், நிட்டை. ஏயம் - விலக்கத்தக்கன.

## ஆகம சைவத்தில் சரியை கிரியை யோகங்களில் முயலுதல்

*நின்று சரியை நிகழ்கிரியை யோகம் அது*
*நன்று புரிய நயமுடனே - ஒன்ற அரன்*
*கூட்டத் தனுஆதிகொண்டு சரியை ஆதிசெய்து*
*வாட்டம் அற மற்று அதன் போகம்* 90

ஆன்மா ஆகம சித்தாந்த சைவத்தில் நின்று விளக்கம் பொருந்திய சரியை, கிரியை, யோக நெறிகளில் நிற்பதற் காக இறைவன் விருப்பமுடன் அதற்கேற்ற உடம்பு, கருவி ஆகியவற்றைத் தருவான். அவற்றைக் கொண்டு ஆன்மா சரியை முதலிய மூன்றையும் செய்து அதற்குரிய பயனை நுகரும்.

## சரியை, கிரியை, யோகங்களின் பயன்

*தான் ஆகும் சாலோகம் சாமீபம் சாரூபம்*
*ஆனபதம் எய்தி அதில் போகம் - ஈனம் அற*
*உண்டு தனுவால் உறும் போகம் யாவும் வினை*
*கொண்டது எனக் கண்டு நடுங்கல்* 91

சரியை முதலிய மூன்றன் பயனாக இறைவன் எழுந் தருளியிருக்கும் சிவலோகத்தில் இருத்தல், இறைவனுக்கு அருகில் இருத்தல், இறைவனுருவத்தையே தானும்

பெறுதல் என்னும் பத முத்திகளை அடைந்து அப்பயன்களைக் குறைவின்றி நுகர்ந்து பின் உடம்பால் நுகரக்கூடிய இன்பம் யாவும் வினையின் பயனே என உணர்ந்து அவ்வினைத் தொடர்ச்சியைக் கண்டு அஞ்சி நடுங்கும் பக்குவம் வரும்.

## பிண்டத்தலம் இதன் பெருமை யாராலும் சொல்ல இயலாது

*பிண்டத்தலம் என்னப் பேசும்மிக்க ஆகமங்கள்*
*பிண்டத்தில் காணும் பிறங்கு அறிவை - உண்டாகத்*
*தாதாஆகக் கொடுப்போர் தம்மினுமே மிக்கதவர்*
*ஓதும் இருடிகளாலும்* 92

*நின்ற உயர் வேள்வி அது நீதியுடன் செய்வோர்கள்*
*சென்றிடும் நான்கு ஆச்சிரமம் சேர்ந்தோர்கள் - நன்றாக*
*மெய்யான பஞ்ச அக்கினி நடுவில் நல்அறம்ஆய்*
*உய்ய நிற்கச் செய் தவத்தினோர்* 93

*ஊசி முனையில் நின்றே ஊணும் உறக்கம் தவிர்த்து*
*நாசி நுனியின் விழி நட்டு இருக்கும் - ஏசில்*
*தவத்தினரும் அட்டாங்க யோகிகளும் சைவ*
*நவக்கலைகள் ஓதி மிக்க நல்* 94

*அர்த்தம் தெரிந்தவரும் ஆம்என்று அரியமிக்க*
*சித்திரமா முன்பின் சிதையாமல் - உத்தம மாய்க்*
*கட்டுரைக்க வல்லவர்க்கும் கட்டுரைத்த ஐந்தொழிலும்*
*உள்தெளியப் பெற்று இயற்றுவோர்.* 95

*ஐவராலும் முடியாதாம் உணர்வுதான் விபுஆய்ச்*
*செவ்வியதாய் ஞானத்தெளிவு ஆகி - இவ் இதுபோல்*
*என்ன உவமையின்றி ஈறுமுதல் இன்றிமிக்க*
*தன் நிகர்தான் பிண்டத்தலம்* 96

உடம்புடன் பெறும் நுகர்ச்சி அனைத்தும் வினையின் தொடர்ச்சியே என்று அறிந்து அஞ்சி நடுங்கும் பக்குவ நிலையை ஆகமங்களெல்லாம் பிண்டத்தலம் என்று கூறும்.

பிண்டத்தலம், அங்கத்தலம், உயிர் விளக்கம், உயிரின் சிறந்த அறிவு என்பன ஒரு பொருளுடையன.

இப் பிண்டத்தலம் என்னும் நிலையடைந்த ஆன்மாவின் அறிவு விளக்கத்தின் பெருமை அளவிட்டு உரைக்க முடியாது.

இதன் பெருமையைத் தாதா என்னும் புகழுக்குரிய கொடையாளிகளாலும், பெருமைமிக்க தவமுடையவர்களா லும், முனிவர்களாலும், வேள்விகள் பல செய்து பெருமை பெற்றவர்களாலும், மாணாக்க நிலை, இல்லற நிலை. காட்டில் சென்று வாழும் நிலை, முழுத்துறவு நிலை ஆகிய வற்றில் நிற்பவர்களாலும், ஐவகை நெருப்புகளின் (மூன்று பக்கமும் மூன்று வேள்வித் தீ, கீழே மூலாதாரத் தீ, மேலே சூரியன்) நடுவில் நின்று உயிர் உய்யும்படித் தவம் செய்பவர்களாலும், ஊசி முனையில் கால் பெருவிரலை ஊன்றிநின்று உணவும் உறக்கமும் விட்டு மூக்கின் நுனியில் பார்வையை நிறுத்திக் குற்றமற்ற தவத்தைச் செய்பவர் களாலும், இயமம், நியமம் ஆசமனம், பிராணாயாமம் பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என்னும் எட்டு உறுப்புக்களையுடைய யோகநெறியில் நிற்பவர் களாலும், சைவாகம நூல்களைக் கற்று அதன் சொற் பொருளை ஆராய்ந்தவர்களாலும், அவ்வாகமப் பொருளை எலலோரும் ஒப்புக்கொள்ளும்படியாக வியப்புடன் விரித்து உரைப்பவர்களாலும், படைத்தல் காத்தல் அழித்தல் மறைத்தல் அருளல் என்னும் ஐந்தொழில் செய்யும் உரிமை பெற்ற கடவுளர்களாலும் சொல்லி முடிக்க முடியாது.

இத்தகைய பெருமைமிக்க பக்குவ நிலை பெற்ற ஆன்மா எங்கும் நிறைந்ததாய், குற்றமற்றதாய், தெளிந்த

ஞானமாய், இது போன்றது இது போன்றது என்று குறித்துக் கூறுவதற்கு உவமையில்லாததாய், ஈறும் முதலும் இல்லாததாய்த் தனக்குத்தானே ஒப்பானதாய் இருக்கும். இது பிண்டத்தலத்தின் பெருமை.

## பிண்டத்தலத்தில் சத்திநிபாதம் உண்டாகும்

பிண்டத்தலத்தில் பிறங்கியிடும் சத்தி ஐந்தும்
கொண்ட தொழில் ஐந்தும் குலைந்துஅகல - உண்டாகும்சித்
சத்தி பதியும் அது சத்திநிபாதம் பதிந்த
அத்தில் உறும் ஆன்ம விவேகம். 97

இத்தகைய பெருமையுடைய பிண்டத்தலத்தில் விளங்குகின்ற பரை முதலாகிய ஐந்து சத்திகளால் நடைபெறும் படைப்பு முதலிய ஐந்து தொழிலும் ஆன்மாவை விட்டு நீங்கும், அப்பொழுது அவ்வான்மாவிடத்து சித்சத்தி பதியும். பதிந்த அப்பொழுதே அவ்வான்மாவிடத்து ஆன்ம விவேகம் எனப்படும் உயர்ந்த ஞானம் உண்டாகும்,

## ஆன்ம விவேகத்தின் அடையாளம்

ஞானம் விளைந்தவர்க்கு நன்றுஆம் குறிகுணங்கள்
ஆனது உரைக்கும் அருள் ஆகமங்கள் - தான் அறநல்
முத்தியினில் மோகம் முடிவு இன்றியே விளங்கும்
பித்து மிகக்கொண்டு பெருகும். 98

இத்தகைய ஞானம் உண்டானவர்களிடத்துத் தோன்றும் அடையாளங்களும் குணங்களும் இவை என்று இறைவன் அருளிய ஆகமங்கள் கூறுகின்றன. அவை : ஆன்மா தன்னைச் சுட்டிக் காணுதல் நீங்கி நல்ல முத்தியைப் பெறவேண்டும் என்னும் வேட்கை அளவில்லாமல் தோன்றும். உலகப் பொருள்களின் மேல் ஆசை நீங்கிச்

சிவத்தின் மேல் ஆசை- பிறரெல்லாம் பித்தன் என்று உரைக்கும்படி- உண்டாகும்.

## குருலிங்க சங்கமங்கள் சிவமே என அறிந்து பத்தி செய்தல்

அப்பொருளே ஆகும் அரியகுரு லிங்கம் உடன்
ஒப்புஅரிய சங்கமமும் உன்னஅரிய - மெய்ப்பொருளே
ஆகும் என்னும் பத்திஅது உருவாம் சத்தியம் ஒன்று
ஆகும் என்னும் ஆகமத்து அம்மா. 99

அங்ஙனம் ஆசை கொள்ளத்தக்க சிவபரம்பொருளே யாகும் இங்குக் காணப்படும் அரிய குரு, லிங்க, சங்கம என்று அவற்றினிடத்து நினைத்தற்கரிய மெய்ப்பொருளே இது எனக் கருதும் சமரசபத்தி உண்டாகும். அப்பத்தியே ஆன்மாவுக்கு உண்மையான உருவாக வந்து பதியும் என்று ஆகமங்களில் கூறப்படும்.

## சமரச பத்தியின் அடையாளம்

ஆன சமுசாரம் அநுகண்டு இலச்சை மிகுந்து
ஆன்அழியும் சொல்ல அருவருக்கும் - ஆனது அன்றி
உள்ளத்தின் உள்ளும்பொழுது உயிர் மூர்ச்சித்து அயரும்
எள்ளப்படாத பத்தியான். 100

சிவபரம்பொருளிடத்தும் குருலிங்க சங்கமத்திடத்தும் பிறரால் இகழப்படாதபடி பத்தி செய்பவன் இதுவரை உலகப் பற்றில் உழன்றதை அறிந்து வெட்கம் மிகுந்து அப்பொழுதே மனம் வருந்துவான். உலகப் பற்றாகிய இன்பங்களை வாயால் சொல்லவும் அருவருப்புக் கொள்வான். அதுவுமன்றி மனத்தால் நினைத்தபொழுதே உயிர் மூச்சுக்காற்று நின்று போவதால் மயங்கிவிழுவான்.

## மேலும் அப்பத்தி உடையவர்க்கு உரிய எட்டுக்குணங்கள்

எட்டு விதம் ஆம் இருள் அகன்ற பத்தர்சபை
விட்டு அகலாது ஒன்று ஆதல் மிக்கவர்கள் - கட்டு அகன்ற
பூசைக்கு வேண்டல்புரிதல் அவர்பூசை கண்டுஉள்
ஆசைப்படல் அல்லாமல் 101

தாமும் பூசிக்க அன்பாம் தாம் அற்ற தம் உடல்நல்
நாமத் தொழிற்கு இசைதல் நல்கதைகள் - ஆம்அதனில்
நேசம்ஆய் நெஞ்சில் நினைவு அகலாதே இருக்கப்
பாசம் ஆம் பேசும் முத்திதான் 102

பாரிக்கும் நல்ல பரமப் பிரசாதச்
சீர்அதுஆம் போகம் செறிவுஆகி - வாரம் அது ஆய்
நிற்கும் இவை எட்டும் நினையா நினைவுஆகி
இல் பொலியும் கற்புஅது அன்றியே 103

ஈதுஎட்டும் வஞ்சனை அற்றே செய்யும் பத்திஅது
பேதப்படாது உள்ளே பித்துஆகி - நீதி அதுஆய்
ஒன்றுஆம் தலைமை ஒருப்படும் தானும் ஒழிய
ஒன்றுஆம் துறவு மிகவும். 104

இப்பத்தி உடையவர்களின் குணம் எட்டு விதமாக இருக்கும். 1. ஆணவ மலம் நீங்கிய பத்தியுடையவர்களின் கூட்டத்தை விட்டுப் பிரியாமல் அவர்களுடன் ஒன்றி இருத்தல். 2. அவர்கள் பாசம் நீங்கிச் செய்யும் பூசைக்கு வேண்டிய துணை செய்தல். 3. அவர் செய்யும் பூசையைக் கண்டு தாமும் அவ்வாறு பூசை செய்ய உள்ளத்தில் விருப்பம் கொள்ளுதல் 4. தாமும் அவ்வாறே பூசை செய்தல். 5. இதுவரை தாம் என்று கருதியிருந்த மயக்கம் நீங்கிய இவ்வுடல் சிவபூசையாகிய தொழிலுக்கு

உரியதென் உடம்படுதல் 6. நல்ல சிவ கதைகளைக் கேட்டல் 7. சிவ பரம் பொருளை மறந்து நினையாதபடி எப்பொழுதும் அதே நினைவாக இருத்தல், 8. ஆகமங்களில் கூறப்படும் முத்தியை மிகவும் விரிவாகத் தருகின்ற பர சிவப்பிரசாதமாகிய சிறப்புடைய இன்ப நுகர்ச்சியில் மனம் ஒன்றி அன்பு செய்தல். இவ்வெட்டுக் குணங்களையும் மறந்துந் நினையாமல் எப்பொழுதும் இவையே மறந்து நினைவுடன் இல்லாளுக்குக் கணவனிடத்துள்ள கற்புப்போல் சிவபரம்பொருள் ஒன்றிலேயே நினைவு சிறந்திருத்தல். இது அன்றி இவ்வெட்டுக் குணத்துடன் வஞ்சனையின்றிச் செய்யும் பத்தியினால் சிவபரம் பொருளுடன் வேறுபடுதல் இன்றி மனத்தில் அப் பத்தியே பித்தாகப் பெறும் தன்மையுடன் அப்பரம் பொருளுடன் ஒன்றாதலாகிய சிறப்பினைப் பெறுவான். அப்பொழுது தான் என்னும் உணர்வும் நினைப்பும் நீங்கித் தன்னொடு இதுவரை ஒன்றாய் இருந்த உடம்பின் மேல் கொண்டிருந்த பற்றினையும் துறந்து விடுவான்.

## பத்தியும் சத்தியும் பதிந்தவர்க்குச்
## சிவமே குருவாக வந்து அருள் புரியும்

*பத்திஅது சத்திநிபாதம் பதிந்த உடனே*
*முற்றும் விவேகஞானம் உண்டாம் - நல்தவன் ஆம்*
*சீடனது சித்தச் செயல் அறவே தான் விளங்கி*
*ஆடும் சிவம் குருஅதுஆய்* **105**

*வந்து அறிவுதான் ஆகும் வண்மை அறியாது அயரும்*
*மைந்தன் மலம் எல்லாம் மடிவித்துச் - சிந்தை*
*தெளிவித்துத் தான்ஆக்கித் தேற்றும் உயிர்ஆளி*
*அளிவித்த சற்குரு ரூப(ம்)ஆய்.* **106**

மேலே கூறிய பத்தியும் சத்திநி பாதமும் உண்டான பொழுதே ஆன்மாவினிடத்து முழு விவேக ஞானம் உண்டாகும். அதனை அறிந்து நல்ல தவம் மிக்க மாணாக்கனுடைய சித்தத்தில் ஆன்மச் செயல் நீங்கும்படியாய்த் தானே விளங்கித் திருக்கூத்து ஆடும் சிவபரம் பொருள் அவ்வான்மாவை ஆட்கொள்பவனாய் அருளாலே குருவடிவாய் வந்து, அறிவேதான் என்னும் செல்வத்தை அறியாமல் மயங்கிக் கிடக்கும் மாணாக்கனுடைய மலம் முழுவதையும் வலி அழித்துச் சிந்தையைத் தெளிவுசெய்து சிவமாகிய தன்னை அங்கே விளக்கம் செய்யும்.

## குருபரன் தீக்கையினால் உயிரைச் சிவமாக்குவார்

கொண்ட கருணைக் குறியாம் குருபரன்தான்
உண்டாய மைந்த(னு)க்கு உறும்பாசம்-கண்டித்து
அழியாத ஆருயிர் தான்ஆக்கியிடும் தீரம்
அழியாத தீக்கை அதனால் 107

கருணையே திருமேனி எனக் கொண்ட குருபரன் மாணாக்கனுக்கு உள்ள மிக்க பாசத்தை அழித்து. அழிவில்லாத அம்மாணாக்கனுடைய உயிரைத் தீரம் மிக்க தீக்கை முறையினால் சிவமாக ஆக்குவார்.

## தீக்கையின் சிறப்பு

பாசம் பறித்துப் பதிஆக்கும் சற்குருஆய்
பேசும் வடிவினிலும் பெந்தம்அற - நேசம்ஆய்
வேண்டிநிற்கும் மைந்தன் வினைஅகற்றும் நல்சிவமே
பூண்டு நடிக்கின்ற அற்புதம். 108

மாணாக்கனிடத்துள்ள பாசத்தைக் களைந்து அவனைச் சிவமேயாகச் செய்யும் ஞானகுருாகச்வ சொல்லப்படுகின்ற

குரு வடிவத்திலும். பாசக்கட்டுக்கள் நீங்குவதற்காக அன்புடன் அக்குருவினிடத்து வேண்டிக்கொண்டு அவனருளையே எதிர்பார்த்திருக்கும் அம்மாணாக்கனிடத்தும் உயிர்களின் வினைப்பாசத்தை நீக்குவதே குறிக்கோளாகக் கொண்டு ஞானத்தை அளிக்கும் சிவமே கருணையால் இடங்கொண்டு மலம் நீக்குதலும் ஞானம் அளித்தலும் இன்பத்தில் அழுத்துதலும் ஆகிய திருநடனத்தைச் செய்கின்றது. இது மிகவும் வியப்புக்குரியதேயாம்.

## ஒருசிவசத்தியே குரு மாணாக்கன் என்னும் இருவரிடத்தும் இருக்கும்

*ஆகிநிற்கும் போகம்அது துர்லபம் இருமை*
*ஆகும் விழிதன்னில் அரியமணி - ஏகம்அதுஆய்*
*நிற்கின்ற காகத்தில் நிற்பதுபோல் ஏகம்அதுஆய்*
*நிற்கின்ற தீக்கை நிலை.* **109**

மேல் பாடலில் கூறியதுபோல குருவிடத்தும் மாணாக்கனிடத்தும் சிவம் கருணையால் இடங்கொண்டு நின்று செய்யும் நுகர்ச்சியின் பெருமை எளிதில் கிடைக்காது. காக்கையினுடைய இரண்டு விழிகளிலும் கருமணி ஒன்றேயாக நின்று பார்வைக்கு உதவுவதுபோல குருவினிடத்தும் மாணாக்கனிடத்தும் நிற்கும் சிவசத்தி ஒன்றே. இதுவே மேலே கூறிய தீக்கை நிலையில் வியப்பு;

## தீக்கை இருவகை

*ஆனஅதுதான் அறியாயில் இருவகைத்துஆம்*
*ஆன நிர்ஆதாரம் சஆதாரம்என - ஈனம்அற்ற*
*மேல்ஆம் நிர்ஆதாரம் விஞ்ஞான பிரளயர்*
*பால்ஆம் தர தீவிரம்.* **110**

மேலே சொன்ன தீக்கை ஆராய்ந்து பார்த்தால் இரண்டு வகையாக இருக்கும். ஒன்று நிராதாரம். மற்றொன்று சாதாரம். இவற்றுள் குற்றம் நீங்கிய நிராதார தீக்கை என்பது தீவிரதர பக்குவம் உடைய விஞ்ஞான கலரிடத்தும் தீவிர பக்குவம் உடைய பிரளயா கலக்கிடத்தும் செய்யப்படும்.

## விஞ்ஞானகலர்க்கும் பிரளயாகலக்கும் நிராதாரதீக்கை

*சொற்றிடும் விஞ்ஞானகலர்க்கும் பிரளயர்க்கும்*
*சொற்றமலம் கன்மம்மலம் சுற்றுஅகற்றி - சற்றும்*
*அநலாத சச்சிதானந்தத்து ஒன்றாக்கும்*
*புகலும்அரன் பொற்பு அவர்போல்ஆய். 111*

மேலே கூறப்பட்ட சிவம் மேலே சொல்லப்பட்ட விஞ்ஞானகலர், பிரளயாகலர் என்னும் ஆன்ம வகையினர்க்கு அவ்விருவரும் அசுத்தமாயா தேகம் அற்றவராக இருப்பவராதலினால் அச்சிவமும் ஒரு தேகத்தை ஆதாரமாகப் பற்றாமல் நிராதாரமாக இருந்தே விஞ்ஞான கலர்க்கு உள்ள ஒரு மலமாகிய ஆணவமலத்தின் கட்டினையும் பிரளயாகலர்க்கு உள்ள இருமலமாகிய ஆணவம், கன்மம் என்னும் இரண்டு மலங்களின் கட்டினையும் நீக்கிச் சிறிது பொழுதும் நீங்காதிருக்கின்ற உண்மை அறிவு இன்பமயமாக இருக்கும் தன்னுடன் ஒன்றிப்போகும்படியாகச் செய்யும்.

*பரிபாகி என்றுஉரைத்த பண்புஆம் சகலர்க்கு*
*உரிமைபெறும் மும்மலமாய் உள்ள - கருமமலங்கள்*
*நீக்கி இன்பப் பூரணம்ஆம் நின்மலனோடு ஒன்றாக*
*ஆக்கியிட யோசிதற்குஆய். 112*

*மற்றுஅவரைப்போல மதிக்கும் குருமூர்த்தி*
*பற்றி மிகத்தீக்கை புரிவுடனே - மற்றுஇயற்ற*
*உண்டாகும் மந்தமொடு மந்தரபாகம் உறக்*
*கண்டு அவர்க்குச் செய்யும் தீக்கை. 113*

சகலரில் பரிபக்குவம் உடையவர் என்று உரைக்கப்படுப வர்க்கு உரிய ஆணவம் கன்மம் மாயை எனப் பிறப்புக்குக் காரணமாயுள்ள மூன்று மலங்களையும் நீக்கி முழு நிறை வான இன்பமயமாக உள்ள குற்றமற்ற சிவபரம் பொரு ளுடன் அச்சகலர் ஒன்றுபட்டு நிற்கச் செய்யக் கருதி, அச்சகலர் மாயா தேகம் உடையவராகையினால் அவரைப் போலச் சிவமும் தேகம் உடைய ஒரு குருமூர்த்தியைப் பற்றி என்று மிகுந்த அன்புடன் அச்சகலரின் மந்ததரம், மந்தம் என்னும் இருவகைப் பக்குவத்தைக் கண்டு அதற்கேற்பத் தீக்கை செய்யும்.

## சாதார தீக்கை மூன்று வகை

சாதாரம் ஆகும் தீக்கை அதுதான் மூன்றுஆம்
ஓதில் ஒன்று பீசம் ஒன்று நீர்ப்பீசம் - தீது அகன்ற
சின்மயம் அது ஒன்று என்னச் செப்பிடும் இம்
மூன்றினுக்கும்
புன்மைஅறச் சொல்லும் பொருள் 114

சாதார தீக்கை மூன்று வகைப்படும். அவற்றின் பெயரைக் குற்றமறச் சொன்னால் 1. பீச தீக்கை 2. நீர்ப்பீச தீக்கை. 3. சின்மய தீக்கை என்பனவாம்.

## சின்மய தீக்கை வகை

திரு நோக்கினாலும் திருக்கரத்தினாலும்
அரிய உபதேசத்தாலும் - உரிய ந(ல்)ல
பாவனையினாலும் பகர் யோகத்தாலும் நூல்
ஆம் இவைகள் தாம் சின்மயம். 115

சின்மய தீக்கை குருதான் சிவபாவனையாக இருந்து கொண்டு மாணாக்கனைத் தன் கண்ணால் நோக்குதல், தன் கையால் தொடுதல், நாவால் மந்திர உபதேசம்

செய்தல், மனத்தால் இவ்வுயிர் சிவம் ஆகுக என நினைத்தல், மாணாக்கனுயிருடன் தான் ஒன்றும்படியாக் கூடியிருத்தல், சாத்திரம் கற்பித்தல் ஆகிய வகைகளில் செய்யப்படும்.

## நிர்ப்பீச தீக்கை

*நிர்ப்பீசம் என்ற பெயர் நீங்காப் பிறவிதரும்*
*கற்புஆன பீசம்அதுஆம் கன்மத்தால் - உற்பவிக்கும்*
*உற்பவம் மேல் இல்லை என்றல் உண்மைஎன ஆகமங்கள்*
*பொற்புடனே சொல்லும் பொருள்* 115

ஆகமங்கள் அழகுற நிச்சயமாகச் சொல்லும் பொருளில் உயிர்க்கு மேலும் மேலும் நீங்காத பிறப்பினைத் தரும் விதையாகிய கன்ம மலம் காரணமாக உண்டாகும் பிறப்பு இனி இல்லை எனச் செய்யப்படுவது நிர்ப்பீச தீக்கையாம். பீசம் - விதை. நிர் - இன்மை.

## பீச தீக்கை

*பீசம் என்றபேர் பிறப்பில் பெந்தித்து மெல்லமெல்ல*
*மாசு அதுவாய் நிற்கும் மலபாகம் - ஆசு அகலப்*
*பாகம் வருத்தும் என் அப்பண்பால் சிவாகமங்கள்*
*சோகம் அறச் சொல்லும் பொருள்.* 116

ஆன்மாக்களுக்குத் துன்பம் நீங்கும்படியாகச் சிவாகமங்களில் சொல்லப்பட்ட பொருள்களில் குற்றமாக இருக்கின்ற ஆணவமலம் அவ்வான்மாக்கள் பிறப்பில் புகும்படிக் கட்டுப் படுத்திப் பின் மெல்ல மெல்ல வலிமை கெட்டு நீங்க அவ் ஆன்மாவுக்கு ஞானம் பெறும் பக்குவத்தை வரச் செய்யும் என்கின்ற அத் தன்மையால் இத் தீக்கைக்குப் பீச தீக்கை எனப் பெயர் கூறப்பட்டுள்ளது.

## நிர்ப்பீச தீக்கையின் வகை

செப்பியிடும் நிர்ப்பீச தீட்சை இருவகைத்துஆம்
ஒப்புடையதுஆம் பேர் உகந்து உரைக்கில் - அற்புதம்ஆய்ச்
சத்திய நிர்வாணம் ஒன்றுஅங்கு ஒன்று சிர நிர்வாணம்
வித்தகமாய்ச் சொல்லும் விதி 117

சொல்லப்பட்ட நிர்ப்பீச தீக்கை இருவகைப்படும். அவற்றிற்குப் பொருத்தமுடைய பெயரை உயர்த்துச் சொல்லுமிடத்து 1 சத்திய நிர்வாணம் என்றும் 2 சிர நிர்வாணம் என்றும் அவற்றின் முறைமையைச் சொல்லும் நூல்கள் வியப்புடன் கூறும்.

## சிரநிர்வாண, சத்திய நிர்வாண தீக்கைகளுக்குரியவர்

மந்தமொடு மந்ததரம்ஆம் சத்திநிபாதர்
பந்தம் அகற்றும் பரிவினால் - வந்த அருள்
தீக்கை தெரிக்கில் இருவகைத்துஆம் சத்தியம்ஒன்று
ஆக்கும் சிரநிர்வாணம். 118

மந்த சத்திநிபாதம், மந்ததரசத்திநிபாதம் என்னும் இருவகையினர்களின் பாசத்தை நீக்கும் அன்புடன் செய்யப்படும் தீக்கைகளில் மந்த சத்திநிபாதர்க்குச் சிர நிர்வாண தீக்கையும் மந்ததர சத்திநிபாதர்க்குச் சத்திய நிர்வாண தீக்கையும் செய்யப்படும். மந்ததரம்—மிகு மந்தம்.

## சத்திய நிர்வாண தீக்கை மிக உயர்ந்தது

சத்தியம் அது ஆகவே சாற்றும் நிருவாணம்
உத்தமம் ஆன உயர் தீக்கை - நித்தத்தால்
எண்ணில் பெரும் சஞ்சிதமும் எய்தும் உடல்புசிப்பாய்ப்
பண்ணும் பிராரத்தமும் பண்பால் 120

## சத்திய நிர்வாண தீக்கை மூவினைகளையும் போக்கி முத்தி கொடுக்கும்

*முன்உற உண்டாக்கி முடியா ஆகாமியமும்*
*தன் இயல்புஆம் சத்திய நல்முத்தி எய்தத் - தன்னை*
*நினையாது அமலன் என்னாது ஆம் இலக்கணங்கள்*
*அனையவைகள் உள்ள சம்பன்னன்* **121**

## மிகுந்த பக்குவம் உடையவனுக்கே சத்தியோ நிர்வாண தீக்கை செய்யப்படும்

*ஆகி உடல் பொருளோடு ஆவி கொடுத்தேன் என்னும்*
*மோக விரத்தன்ஆம் மொய்ம்பு உடைய - ஆகனுக்குச்*
*செய்வதுஎன அன்றே சிவ ஆகமங்கள் செய்யும் அவர்*
*துய்ய பரமுத்தர் துணி.* **122**

*சத்திய நிர்வாண தீக்கை என்பது தீக்கைக்களுள் மிக உயர்ந்தது. இது அழியாமலும் அளவில்லாமலும் இருக்கின்ற பெரிய பழைய வினையாகிய சஞ்சித வினையையும், இந்த உடம்பில் நுகர்வதற்கு எடுத்துக்கொண்டு வந்த நுகர் வினையாகிய பிராரத்த வினையையும், நுகரும்பொழுது மேலும் மேலும் வினை உண்டாக்கப்படுவதனால் முடிவின்றி வளர்ந்து வரும் புதுவினையாகிய ஆகாமியத்தையும் போக்கி, ஆன்மாவுக்குச் சிறப்புத் தன்மையாகிய ஞானத்தை விளக்கி முத்தியைக் கொடுக்கும். இத் தீக்கை தன்னை நினையாமலும் அமலன் எனப்படும் சிவபெருமானை மறந்துபின் நினைந்து புகழாமல், எப்பொழுதும் அவனையே நினைந்து புகழ்ந்து வணங்குதலும் ஆகிய தன்மை உடையவனாய் நினைப்பும் மறப்பும் இன்றி விளங்கும் இலக்கணமாகிய பெருஞ் செல்வத்தைப் பெற்றுள்ள மாணாக்கனுக்குச் செய்யப்படும். இத்தகைய இலக்கணங்கள்*

உடையவனாகிய ஒருவன் ஞான குருவை அடைந்து உடல், பொருள், ஆவி மூன்றையும் குருவின் திருவடியில் காணிக்கையாகக் கொடுத்து, உலகப் பொருள்களில் ஆசை யற்று, ஞானத்தையும் முத்தியையும் பெறும் மிகுந்த விருப் பத்தில் உறுதியாக இருப்பான். அத்தகையவனுக்கு இத் தீக்கை செய்யத்தக்கது என்று சிவாகமங்கள் சொல்லு கின்றன. இத்தகைய நிலையைப் பெற்றவர்களே பர முத்தர் என்று சொல்லப்படுவர்.

### சிர நிர்வாண தீக்கையால் வினைகள் பிறவியைத் தராமல் அழியும்

வைப்புஆன சஞ்சிதமும் மாயம் அதிஆ(க) மேலைக்கு
வைப்பு ஆகும் ஆகாமிய வினையும் - மெய்ப்பு ஆம்
சிர நிருவாணத்தால் சிதைந்து பிராரத்தம்
எரிமருவு பீசம் அது ஆக்கி 123

### சிர நிர்வாணம் சீவன்முத்தியையும் இறுதியில் பர முத்தியையும் தரும்

அங்கு அமலர்க்கு ஆகும்அது போகம்ஆய் அரனை
அங்கும் அகலாது இருந்திடும் நல் - துங்க
சிவபோகம் உண்டு நிற்கும் சீவன் முத்தி அந்தத்து
உவராப் பரமுத்தியும் 124

### சிர நிர்வாணம் பெற்றவர் சடுத்தலத்தினை மேற்கொள்வர்

ஆகும் நிலையும் அனுக்கிரகம் பண்ணி அவர்
போக மனைவாழ்க்கைப் பொற்புடனே - போகியாம்
என்னத் தழல்மலையாய் எய்து சடுத்தலத்தின்
முன்னுவிக்கச் சொல்லும் மதி. 125

முட்டையாகச் சேர்த்து வைக்கப்பட்டுள்ள சஞ்சித வினையும், நம்மை அறியாமலே உண்டாகி மேலும் சேர்த்துவைக்கப்படுவதாய்ப் புதிதாக வந்து சேரும் ஆகாமிய வினையும் சிர நிர்வாண தீக்கையால் அழியும். நுகர் வினையாகிய பிராரத்தம் தீயினால் சுட்டப்பட்ட வித்துப்போலப் பயன்தராமல் நீங்கும்.

இத்தகைய தீக்கையைப் பெற்றவன் சிவபெருமானுக்குப் படைக்கப்பட்ட பிரசாதமாகிய பொருளே தான் நுகரும் பொருளாக நுகர்ந்து, எவ்விடத்தும் சிவ பரம் பொருளை விட்டு நீங்காமல் சிவானந்தத்தையே நுகர்ந்து கொண்டிருப்பதாகிய சீவன் முத்தியைத் தந்து முடிவில் வெறுத்து நீங்குதல் இல்லாத பரமுத்தியையும் தரும்.

இத்தகைய நிலையைத் தன்னை வந்தடைந்த பக்குவ மிகுதியுடைய மாணாக்கனுக்குக் குரு தீக்கையினால் உண்டாக்கி, அம்மாணாக்கன் இன்பம் நுகரும் மனை வாழ்க்கையிலிருந்து இன்பம் நுகர்பவன் என்று பிறர் சொல்லும்படி வாழ்ந்தாலும், நெருப்பு மலை தன்னைச் சேர்ந்ததை எல்லாம் நெருப்பாகவே ஆக்கி விடுவதுபோல அவனும் அவனைச் சார்ந்த பொருள்களை யெல்லாம் சிவமேயாகச் செய்யும் சடுத்தலம் எனப்படும் சிவலிங்க வழியாகச் சிவமோகமாகவே நுகர்ந்து கொண்டிருப்பவனாகச் செய்வார் என அறிக.

## சிர நிர்வாண தீக்கை பெற்றவர் சரியை முதலியன செய்யும் முறை

செய்யும் இவர்க்குக் கிரியைசெய்வது இரண்டு ஆகாதே
செய்யச் சிவஆகமங்கள் செப்பும் முன்னே - இசெய்யும்
சரி(யை) ஆதி மூன்று அதனில் சாராத் தொடர்பு இங்கு
ஒருவாது உணர்த்த உஞற்றும். 126

இத்தகைய சிவநிர்வாண தீக்கை பெற்றவர்க்குச் சரியை, கிரியை, யோகங்களைச் சிவமும் தாமும் இரண்டெனக் கருதி வேறாய் நின்று செய்யாமல் வேற்றுமையின்றி ஒன்றுபட்டுக் கலந்து நின்று செய்யுமாறு சிவ ஆகமங்கள் சொல்லுகின்றன. இத் தீக்கையைப் பெறும் முன்னே சரியை முதலியன செய்த தொடர்பு பற்றியே இப் பொழுதும் செய்தாலும் முன்னே சாலோகம் முதலிய பதவிகளை விரும்பிச் செய்தது போலின்றி பரமுத்தியினை விரும்பியே சரியை முதலியவற்றை விடாமல் செய்வார்கள்.

## சிர நிர்வாணம் பெற்றவர் செய்யும் சரியை முதலியன

*தெரிசித்தல் அர்ச்சித்தல் சிந்தித்தல் மூன்றும்*
*உரிய சரியை கிரியா யோகப் - பரிசு அதனால்*
*ஆம் பயனாம் சாலோகம் ஆதிவினை என்று அறிவு*
*மேம்படலால் வேறுஅன்று அவை.* **127**

இத்தகைய சிர நிர்வாண தீக்கைகையைப் பெற்றவர் சிவலிங்கப் பெருமானைக் காணுதலே சரியை; புகழ்ந்து பாடுதலே கிரியை; மனத்தில் நினைத்தலே யோகம் என்னும் தன்மையைப் பெறும். இவற்றால் உண்டாகும் பயன் முறையே சாலோகம், சாமீபம், சாரூபம் என்பனவே, இத் தீக்கை பெற்றவன் இவற்றையும் வினையெனவும், வினைப் பயன் எனவும் காணும் வகையில் அறிவு மேம்பட்டவனாயிருக்கிறான். எனினும் அவை ஞானத்திற்கு வேறானவையல்ல என அறிதல் வேண்டும்.

## நிர்வாண தீக்கை பெற்றோர் சரியை முதலியவற்றை விடுதலும் தீது; செய்தலும் தீது

*விட்டால் சிவசமயம் வீண்ஆம் விடார் ஆகில்*
*கிட்டா அறிவில் கிளர்ந்து ஒளி ஆய் - விட்டு அகலா*
*ஆனந்த அதீதம் அது ஆகும் அத்துவித*
*மோனம்தான் ஆகும் முதல்* **128**

சரியை முதலியன வினையெனக் கருதி அவற்றைச் செய்யாமல் நீங்கினால் சைவ சமயத்தில் இருப்பவன் என்பது பொருளற்றதாகும். விடாமல் செய்தாலோ தமது அறிவில் ஒளியாய் விளங்கி, விட்டு நீங்காமல் நுகர் வதற்குரியமிகப் பெரிய பேரின்பத்தைத் தரும். உம் முதற் பொருளாகிய சிவபரம் பொருளுடன் அத்துவிதமாகக் கலந்து மோனநிலையில் நிற்கும் தன்மை கிடைக்காமல் போகும்.

## இலிங்கமே அனைத்துக்கும் காரணம் எனச் சரியை முதலியவற்றைச் செய்தல் வேண்டும்

ஆனசரியை அரியகிரியா யோகம்
ஆனதற்கு ஆதரரம் ஆனலிங்கம் - தான் இனிய
அத்துவிதமுத்தி அளிப்பதற்குச் சார்பு இதுவே
சத்தியம் சற்காரியத்தால் தான், 129

சாலோகம் முதலிய பயன்களைத் தருவனவாகிய சரியை முதலியவற்றுக்கு ஆதாரம் சிவலிங்கமே; இனிய அத்துவித முத்திக்கு ஆதாரமும் சிவலிங்கமே என; சிவ லிங்கச் சார்பாகவே சரியை முதலியவற்றைச் செய்தல் வேண்டும். இதுவே உண்மையான சத் காரியம்.

## சரியை முதலியவற்றைச் செய்யாது விடுதல் நன்றி கொன்ற குற்றமாகும்

அன்றியும் தான் அன்று முதல் இன்று அளவும் செய்த நன்றி
கொன்றது ஆம் விட்டால் குலவும் அருள் - ஒன்று ஒருவற்கு
ஆக்கியிடும் சற்குருவும் அற்புதம் ஆம் லிங்கத்தால்
நீக்குவது இக் காரணத்தானே. 130

மேலும் சரியை முதலியவற்றைச் செய்யாதுவிட்டால் அன்று முதல் இன்று வரை இறைவன் ஆன்மாவுக்குச்

செய்த நன்றியை மறந்த பாவத்துக்கு ஆளாக நேரிடும். விளங்குகின்ற திருவருளை ஒவ்வொருவருக்குத் தீக்கையினால் உண்டாக்குகின்ற ஞான குருவும் முன்னர் செய்து வந்த சரியை முதலியவற்றை நீக்கினாலும் சிவலிங்கம் முன்னிலையாகக் காணுதல், புகழ்ந்து வழிபடுதல், நினைத்தல் என்னும் வகையில் சரியை முதலியவற்றைச் செய்க எனக் கட்டளையிடுவதும் இக்காரணத்தினாலே யாம்.

## பசுவின் நோய்க்குப் பசுவின் பாலே மருந்து

ஆவின்உறும் பிணிக்கு இங்கு ஆன்பால் மருந்து என்று இங்கு
ஓ அது அறிந்தால் பசுவின் உள்ளபால் - ஆவில்
கறந்து பாகம்செய்து காதலினோடு உள்ளே
உறைந்திடவே ஊட்டத் தீருநோய் 131

## மாணாக்கனுடைய உயிர்க்குயிராய் விளங்கும் சிவமே இலிங்கம்

நீங்கிச் சுகம்ஆய் நிலவுதல்போல் சற்குருவும்
ஓங்கும் மைந்தன் உள்றத்து உணர்வு ஆகி - நீங்காத
மெய்ப்பொருளை வாங்கி மிகும் இலிங்கம் ஆக்கி மைந்தற்கு
உய்ப்பு அதனால் மலம் நீங்கும். 132

பசுவுக்கு வந்த நோய்க்கு அப்பசுவின் பாலே மருந்து என்று அறிந்தால் அப்பசுவின் பாலைக் கறந்து பக்குவம் செய்து அதற்குப் புகட்ட அப்பசு நோய் நீங்கி இன்பம் அடைகிறது. அதுபோல ஞானகுரு மாணாக்கனுடைய உள்ளத்து உணர்வுக்கு உணர்வாகும் சிவபரம் பொருளையே சிவலிங்கமாக அமைத்து அவனுக்கு அணிவித்து அச்சிவலிங்கத்தை வழிபட்டு அதன் பிரசாதமாகவே எல்லா நுகர்ச்சியையும் நுகரும்படிக் கொடுப்பதனால் அவனுக்கு உள்ள மலநோய் நீங்கி அவன் சிவமேயாவான்.

## சரியை கிரியை யோகங்களால் அது நீ ஆதல் கைவராது

மூன்று பதத்தின் முயலும் அனுட்டானம் உற்றும்
மூன்று மகாவாக்கியத்தின் உற்றிடா - தோன்றும்
அது நீ ஆவாய் என்ன ஆவது சன்மார்க்க
விதியாம் விதிக்கு விரோதம் 133

## அது நீ ஆதல் என்பது இலிங்க அங்க இணைப்பே

தோன்றாமல் அத்துவிதம் தோன்றியிட லிங்கம் அது
ஊன்றும் அங்கம் நீ என்று உணர்த்தியே - ஏன்ற அது நீ
ஆனாய் எனவே அருளால் சிவன் உரைத்த
ஞான ஆகமம் உரைக்கும் நன்று. 134

சரியை, கிரியை, யோகம் என்னும் மூன்று நிலைகளில் முயன்று செய்து வரும் முறைகள் அது நீ ஆனாய் என்னும் மூன்று சொற்களால் ஆகிய மகா வாக்கியப் பொருள் அனுபவத்தில் ஆன்மாவைச் செலுத்தமாட்டா. (இம் மூன்றாலும் வரும் சாலோக சாமீப சாரூபம் அது நீ ஆதல் என்னும் நிலையைத் தரமாட்டா.) அது நீ ஆதல் என்பதே ஞான நெறி. எனவே அந்நெறிக்கு விரோதம் உண்டா காமல் அது என்பது லிங்கம், நீ என்பது அங்கம், ஆனாய் என்பது இவ்விரண்டும் பிரிப்பின்றி எப்பொழுதும் ஒன்றாக இணைந்திருத்தல் என உணர்ந்து அந்த அனுபவத்தைப் பெற்றிருத்தலே அத்துவிதம் என்று சிவபிரான் அருளிய ஆகமம் விளக்கமாகச் சொல்லுகின்றன.

## இலிங்க அங்க இணைப்புத் தீக்கை ஏழுவகை

ஆதலினால் இங்கு இவற்கு இங்கு ஆசான் கருணையினால்
பேதம் அறப் பற்றுஆம் பெரும்பாசத் - தீது அகற்றச்
செப்பியிடும் தீக்கை தெரிக்கில் எழுவகைத்துஆம்
ஒப்பியிட நாமம் அதற்கு 135

## ஏழு வகைக்கும் பெயர்கள்

ஆக்கினையா தீக்கை என்றும் ஆம் உவமா தீக்கை என்றும்
தேக்கு அரும் காயா ரோகண தீக்கை என்றும் – நோக்கும்
அரிய விபூதிப் பட்டம் ஆம் அபிடேகத்தோடு
உரிய லிங்காயத்தமும் 136

சொல்லியிடும் லிங்க சுவாயித்த தீக்கையுடன்
வல்லபெயர் என்றே வகுத்து உரைக்கும் – நல்இவற்றால்
செய்கின்ற செய்திச் செயல்கள் விரித்து உரைப்பன்
ஐயம் தெளிய அருளால் 137

இலிங்க அங்க இணைப்பே அது நீ ஆவாய் என்னும் மகாவாக்கியத்தின் பொருளாக இருப்பதனால் இவ்விடத்து இத்தகைய பக்குவம் உடைய மாணாக்கனுக்கு இந்தப் பிறப்பிலேயே குரு திருவருளால் சிவன் என்றும் ஆன்மா என்றும் தனித்தனியே வேறு வேறாய் நிற்கும் வேறுபாடு நீங்கிப் பிரிவின்றி நிற்கும் நிலை உண்டாகும் படியாகவும் அனாதி காலந்தொட்டுப் பற்றாக இருக்கின்ற பெரிய பாசமாகிய ஆணவ மலம் நீங்கும்படியாகவும் செய்வதாக ஆகமங்களில் சொல்லப்பட்டுள்ள தீக்கையை ஆராய்ந்து பார்த்தால் அது ஏழுவகையாக இருக்கும். அதற்குப் பொருந்திய பெயர்கள் பின்வருமாறு :–

1. ஆக்கினா தீக்கை. 2. உவமா தீக்கை 3. காயா ரோகண தீக்கை 4 விபூதிப்பட்ட தீக்கை 5 அபிடேக தீக்கை 6 இலிங்காயித்த தீக்கை 7 இலிங்க சுவாயித்த தீக்கை.

இனி இத் தீக்கை செய்யும் முறைகளை உன் ஐயம் நீங்கும்படி விரிவாக எடுத்துச் சொல்வேன்.

## ஆக்கினா தீக்கை

மீறாமல் உள்ளம் விகற்பக் கருவிவழி
ஏறாமல் யான்என்று எதிர்மாற்றம் - கூறாமல்
தன்தன் வழி நிறுத்தல்தான் ஆக்கினை தீக்கை
என்ற சிவஆகமங்களே. 138

மாணாக்கன் குருவினுடைய ஆணையைக் கடவாமலும், பல வேறுபாடுகளை உடைய புறக்கருவிகளாகிய ஐம்பொறிகளின் வழியிலும் அக கருவிகளாகிய மனம் முதலியவற்றின் வழியிலும் மாணாக்கனுடைய அறிவு ஓடாமலும், குருவினுடைய ஆணையை எதிர்த்துப் பேசாமலும் மாணாக்கனுடைய அறிவும் பொறிகளும் தத்தமக்குரிய வழிகளில் குருவினுடைய ஆணையின்படியே செயல்படும் படியாக மாணாக்கனிடத்துக் குரு தன் ஆணையை நிலை பெறச் செய்வது ஆக்கினா தீக்கை என்று சிவாகமங்கள் கூறியுள்ளன.

## உவமாதீக்கை

முன்னோர் நடந்த முதுசமய ஆசாரத்தின்
மன்னாத மைந்தன் மனம்மகிழத் - தன்ஆணை
யாலே சமய ஆசாரந்தன்னில் நிற்பித்த
லாலே உவமா தீக்கைஆம். 139

இச்சமயத்தில் முன்னோர் கடைப்பிடித்து ஒழுகிய சமய ஆசாரத்தில் நிலைபெறாத மாணாக்கனுடைய மனம் மகிழும்படியாக அவற்றை எடுத்துக் காட்டி அவர்கள் நடந்ததுபோல் நீயும்நட என மாணாக்கனுக்கு ஆணையிட்டு அவன் அவ்வாசாரத்தைக் கடைப்பிடிக்கும்படி ஆசாரசத்தியை அவனிடத்துப் பதியச் செய்தல் உவமாதீக்கை எனப் பெயர் பெறும்.

## காயாரோகண தீக்கை

ஆர்இருளில்காணா அரு வான் கதிர் தோன்றக்
கூர்இருள்போய் வான்விளங்கும் கொள்கைபோல்-கார்உருவ
அத்துவா நீங்க அரியநியாசம் மனுவால்
அத்துஉறல் காயாரோகணம். 140

செறிந்த இருளினால் கண்ணுக்குப் புலப்படாதிருந்த ஆகாயம் சூரியன் தோன்றினபொழுது இருள் விலகுதலால் கண்ணுக்குப் புலப்பட்டு விளங்குவதுபோல மலத்தின் வடிவமாக இருக்கின்ற மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை என்னும் ஆறு அத்துவாக்களின் வழியாக உண்டாகிய வினையைப் போக்கி அவற்றைத் தூய்மை செய்யும்படி மந்திரங்களினால் மாணாக்கனுடைய உடம்பைத் தொடும் இடங்களில் தொட்டு அங்குச் சிவம் விளங்கச் செய்தல் காயாரோகண தீக்கை எனப்படும்.

இத்தீக்கை செய்யும்பொழுது மாணாக்கனைச் சுவத்திக வடிவமான இருக்கையில் அமர்த்திச் செய்வதால் இது சுவத்திகாரோகணம் எனவும் கூறப்படும். இது மாயாமல சம்பந்தமான உடம்பில் மந்திர சம்பந்தம் உண்டாகச் செய்வது.

## விபூதிப்பட்ட தீக்கை

மாயாவிசயம் அது செய்தேன் என்று தன்தன்
தூயகரத்தாலே துலக்கம்மிக்க - ஆய அருள்
சோதி விபூதி தன்னால் தோன்றும் நுதலில் தரித்தல்
ஆதி விபூதிப்பட்டம் ஆம். 141

குரு மாணாக்கனைப் பற்றியுள்ள மாயையை வெற்றி கொண்டேன் என்று சொல்லித் தன்னுடைய தூய்மையான

கையினால் ஒளிமிக்குத் திருவருள் விளக்கம் உடைய திருநீற்றினை அவனுடைய நெற்றியில் இடுவது விபூதிப் பட்டம் என்னும் தீக்கையாம்.

## அபிடேக தீக்கை

நின்மலம் ஆம்மூர்த்தி நிகழ்வித்த கும்பசலம்
சென்மம்அறு ரூபத்தில்சேர்ந்து இலிங்கம் - மன்னியிட
ஆட்டுவித்தலே நல்அபிடேகம் ஆம் என்ன
ஈட்டும் சிவஆகமங்களே, 142

இயல்பாகவே மலம் இல்லாதவனாகிய சிவபரம்பொருள் விளங்கும்படியாக அமைத்த கலச நீரினால் மாயாதேகம் நீங்கி மந்திர தேகமாக விளங்குகின்ற மாணாக்கனுடைய உடம்பில் சிவலிங்கம் பொருந்தி நிலைத்திருக்கும்படி அவனை நீராடச் செய்தலே அபிடேக தீக்கை எனச் சிவாகமங்கள் பல செய்யுள்களால் திரட்டிக் கூறுகின்றன, இது கலசாபிடேக தீக்கை எனவும் கூறப்படும்.

## இலிங்காயித்த தீக்கை

கன்னிதனைக் கண்டு கருத்து அழிந்து மிக்க நான்
மன்னும் மடல் ஊரும் வழக்கு அதுபோல் - தன்னைச்
சிவலிங்கம் ஆக்கிச் சிறப்புடன் அர்ச்சித்த
சிவசம்புத் தேவர்கள் தேவை, 143

தானே தான் ஆகித் தழைத்த சிவலிங்கத்தைத்
தானே தழலைத் தழல் எடுத்தல் - மாணவே
கையில் எடுத்து மைந்தன் காதல் உற நோக்கு வித்தல்
ஐய சிவலிங்கா யித்தம். 144

ஒரு அழகிய பெண்ணைக் கண்டு மனத்தைப் பறி கொடுத்துக் காமம் மிக்கவன் அவளைப் பெறும் வேட்கை யால் பனைமடலால் செய்த குதிரையில் ஏறி வீதி வழியே வந்து பொதுவிடத்தில் தன் காமத்தைப் பலரும் அறிய வெளிப்படுத்தியது போல் சிவலிங்கப் பெருமானைப் பெறுதல் வேண்டும் என்ற மிகுந்த வேட்கையுடைய மாணாக்கனுக்குக் குரு, தன்னையே சிவலிங்கமாக்கிச் சிறப் புடன் வழிபாடு செய்யப்பட்ட அச்சிவலிங்கப் பெருமானை - தேவர்களுக்கு மேலான தேவனை - தனக்கு ஒப்பாரும் மிக்காருமில்லாமல் தானேயாக உயர்ந்துள்ள பெருமானை, ஒரு நெருப்பு மற்றொரு நெருப்பைக் கையால் எடுத்தது போலத் தன் கையால் எடுத்து அம்மாணாக்கன் வேட்கை யுடன் நோக்கும்படியாகச் செய்தல் இலிங்காயித்த தீக்கை எனப்படும்.

## இலிங்க சுவாயித்த தீக்கை

நெருப்பு உருவமாம் இரும்பை நீர் அதனில் வைக்க
விருப்பொடு நீர் உண்ட விறல்போல் - திரப்பொருள் ஆம்
சோதிமணிலிங்கம் துலங்கு அறிவுஆம் ஆன்மாவில்
போதம் அறத் தாபிக்கும் பொற்பு 145

நெருப்பில் பழுக்கக் காய்ச்சப்பட்டு நெருப்பு வடிவமாக இருக்கும் இரும்பில் நீரை வைத்தால் அந்நெருப்பு அந் நீரினைத் தன்னுள் உறிஞ்சிக்கொள்ளும் வல்லமை போல நிலையான பொருளாகிய ஒளிவிடும் அழகிய சிவலிங்கம் விளங்குகின்ற அறிவு வடிவமான மாணாக்கனுடைய ஆன்மாவில் தோய்க்கப்பெற்று அவனுடைய ஆன்ம போதத் தைத் தன்னுள் கவர்ந்துகொண்டு அவனைச் சிவபோதம் உடையவனாக ஆகச்செய்யும் பொருட்டு அச்சிவலிங்கத்தை அவனுடைய உடம்பில் அணியச் செய்வது இலிங்க சுவா யித்த தீக்கை எனப்படும்.

## சிவலிங்கம் அணியப்பெற்ற உடம்பும் உயிரும் சிவம் ஆகும்

*மாநாகம் நோக்கிப் பரிசிக்க மற்று அவ்உடல்*
*ஆன்ாவிடம்ஆம் உடல்உயிர்போல் - ஞானாகும்*
*தான்ஆன லிங்கம் தரிக்கப் பரப்பிரமம்*
*தான் ஆகும் சத்தியம் ஆக.* **146**

மிகுந்த நஞ்சினை உடைய பாம்பின் பார்வையாலும் கடியினாலும் ஒருவனுடைய உடலும் உயிரும் நஞ்சுமயமாக ஆவது போல ஞானமே உருவாய்த் தனக்கு ஒப்பின்றி விளங்கும் சிவலிங்கத்தை அணிந்த மாணாக்கனுடைய உடம்பும் உயிரும் உண்மையிலேயே சிவமயமாக விளங்கும்.

## உடம்பு உயிரும் சிவமாம்

*எரிகின்ற செந்தழல்ஒப்பு ஏய்ந்த நீர்க்கும்பம்*
*எரிஉருஆய் நீரும் எரிஆம் - பரிசு அதுபோல்*
*சற்குருபால் நல்லிங்கம் தான் புறத்து ஒன்றாய் உளத்தும்*
*வில்பொலியும் தான்ஆம் விறல்* **147**

எரிகின்ற செந்நிறமான நெருப்பில் பொருந்திய தண்ணீர்க்குடமும் அதிலிருக்கும் தண்ணீரும் நெருப்பின் தன்மையைப் பெறும் தன்மை போல சற்குருவினிடத்து ஞானலிங்கத்தைப் பெற்று அணிந்து கொண்டவனுடைய தூல உடம்பு சூக்கும உடம்பு காரண உடம்புகளும் ஆன்மாவும் ஒளியுடைய சிவமாந் தன்மையாகிய வலிமையினைப் பெறும்.

## சிவானந்தம் எப்பொழுது கிடைக்கும் என்று மாணாக்கன் ஏங்கிக் கிடப்பான்

சோதி மழை பெய்தால் சொல்லும் கடல் உயிர்கள்
ஆயது உ(ண்)ணின் முத்து ஆகாதாம் முத்துச் - சோதி மழைக்கு
ஆஎன்னும் சிப்பி அருந்தும்அது ஆங்கு அதுபோல்
ஆஎன்று அயரும் அறிவுஆம். 148

ஐப்பசி மாதத்து ஞாயிற்றுக் கிழமையும் சுவாதிநாளும் கூடிய பொழுதில் மழைபெய்தால் அம்மழை நீரைக் கடல் வாழ் உயிர்கள் அருந்தினால் அது முத்தாவதில்லை. அம் மழை நீருக்கு அவாக்கொண்டு வாய் திறந்திருக்கும் முத்துச் சிப்பி அருந்தினால் முத்தாகும்.

## ஞானத்தில் வேட்கை மிக்கவனுக்கே சிவமாந்தன்மை கிடைக்கும்

ஞானப் புதல்வனுக்கு ஞான ஆசான் செய்கின்ற
ஞானக்கிரியைஅது நல்இன்பம் - ஆன
பரப்பிரமம் தான் ஆகும் பண்பு உடைய லிங்கம்
திரப்படவே தீக்கை செய்யத் தேர். 149

மழை நீருக்கு அவாக் கொண்டு வாய் திறந்திடும் சிப்பியைப் போல, சிவானந்தம் எப்பொழுது கிடைக்கும் என்கின்ற அவாவுடன் வருந்திக் கிடக்கும் அறிவுடைய மாணாக்கனுக்கு ஞான குரு, ஞானதீக்கைச் செயல்களைச் செய்து மேலான பிரமப் பொருளாக விளங்குகின்ற சிவலிங்கத்தை அணிவிப்பதனால் அவன் சிவமாந்தன்மையைப்பெறுவான்.

## இத்தகைய தீக்கையே இலிங்கசுவாயித்தம் என்று நூல்கள் கூறும்

*சற்குரு சாயித்தியமாய்ச் சாற்றும் பெயர் மற்றும்
பொற்புஉற இலிங்க சுவாயித்தம் எனத் - தற்பரனால்
ஞானதீக்கைக் கிரியை ஞான ஆகமம் வேதம்
ஈனம்இல் பல்நூலும் இயம்பும்.* **150**

சிவபரம்பொருளால் ஞானதீக்கைக் கிரியை இவை எனக் கூறப்பட்ட ஞான ஆகமம், வேதம் மற்றும் உள்ள நூல்கள் எல்லாம் இத்தகைய தீக்கைக்கு சற்குரு சாயித்தியம் என்றும் இலிங்க சுவாயித்தம் என்றும் அழகுறப் பெயர் கூறும்.

## தீக்கை என்னும் சொல்லின் பொருள்

*நயம்உடைய தீக்கைஎ(ன்)னும் நற்சொற் பொருள்தான்
பயன்ஆய தானம்எ(ன்)னும் பண்பால் - வயம்அதனால்
போக்குவதுபோக்கி என்றும் போகாப் பொருள் கொடுத்தல்
வாக்கிய திட்டாந்த வளம்.* **151**

நன்மைமிக்க தீக்கைஎன்னும் நல்ல சொல்லின் பொருள் ஒருவனுக்குக் கொடுக்கும்பொழுது பயன்மிக்க பொருளைக் கொடுத்தல் வேண்டும் என்னும் தன்மையால், குரு மாணாக்கனுக்குத் தன் வலிமையினால் போக்கத்தக்க மலங்களைப் போக்கி, என்றும் நீங்காத ஞானத்தைக் கொடுத்தல் என்பதேயாம் என்று இச்சொல்லின் பொருள் உதாரணங்களுடன் நூல்களில் கூறப்பட்டுள்ளது.

## இதுவரை கூறிய தீக்கை சத்திநிபாதம் மிக்கவர்க்கே உரியது

*சத்திநிபாதர்க்குச் சாற்றிய இத்தீக்கை ஈது*
*இத்தகைமைஆகும் இதுஅன்றிப்-பத்தி*
*பரிபாகம் இல்லார் பரிபாகம் ஆக*
*உரியது அன்று என்றார் சிவனுக்கு* 152

சத்திநிபாதம் மிக்கவர்க்கே சொல்லப்பட்ட இத்தீக்கை உரியது. இத்தீக்கை இத்தகையது எனவே இத்தீக்கை இவர்க் கன்றிப் பத்தியும் மிகுந்த பக்குவமும் இல்லாதவர்க்குப் பக்குவம் வருவதற்குச் செய்யப்படுவதன்று. அவர்க்கு வேறு தீக்கை உண்டு.

## இறைவன் அனைவருக்கும் அருள் செய்பவன்

*ஆன சருவ அனுக்கிரகத்தால் பாகம்*
*தான் இயற்றும் என்றல் தவறுஆகும் - ஆனதுஅற*
*நீக்கச் சபீசம்அதுஆம் தீக்கைஅது செய்வதுவே*
*ஆக்கும் அசத்திய தீக்கை.* 153

சிவனுக்குப் பொருந்திய அனைவர்க்கும் அனைத்தும் அருளும் தன்மை இயல்பாக உண்டு ஆகையால் அவன் பரி பாகம் இல்லாதவர்க்கு அருள் செய்யமாட்டான் என்பதும் தவறு; சத்திய நிர்வாண தீக்கையே செய்வான் என்பதும் தவறு. இத்தவறு நீங்கும்படி, சபீசதீக்கை என்றும் அசத்திய நிர்வாண தீக்கை என்றும் பெயர் உடைய தீக்கையினைச் செய்து பக்குவம் வரச் செய்வான் எனக் கூறுதல் வேண்டும்.

## அசத்திய தீக்கைமுறை கன்ம காண்டத்தில் சொல்லப்பட்டுள்ளது

*சொல்லிய இத்தீக்கை சொல்லும் கன்மகாண்டம் எ(ன்)னும்*
*நல்லயோகம் கிரியை நல்சரியை - அல்லல் அறச்*
*செய்து பரிபாகம்உறச் செப்பியதுஆம் தீக்கைஅது*
*செய்கை உரைக்கும் திறம்* 154

சொல்லப்பட்ட இந்தத்தீக்கை கன்மகாண்டம் என்னும் பிரிவில் சொல்லப்பட்டுள்ளது. ஞானத்தைத் தருகின்ற யோகம், கிரியை, சரியை என்பனவற்றைப் பிறவித் துன்பம் நீங்கும்படிச் செய்து மிகுந்த பக்குவம் அடைந்தபின் சொல்லப்பட்ட இந்தத் தீக்கைச் செயல்கள் வகுத்துக் கூறப்பட்டுள்ளன.

## பக்குவம் இல்லாதவருக்கும் அசத்திய தீக்கையால் பக்குவம் உண்டாகும்

*ஆக்கினையால் பாசம் அறுத்துப் பரத்துடனே*
*ஆக்கினையால் ஆன்மாவை யோசித்தற்கு-ஊக்கம் உள்ள*
*ஆசான் அதற்குஇசையும் ஆனபரிபாகம் இல்லார்*
*பாசபாகம் வருத்தும் பண்பு* 155

பொருத்தம் உடைய பக்குவம் இல்லாதவர்களுக்கும் ஆணவமல பக்குவம் வரச்செய்யும் தன்மையில் மன எழுச்சியுள்ள குரு ஆணை என்னும் சத்தியால் பாசத்தை அறுத்து ஆன்மாவைப் பரசிவத்துடன் இரண்டற்று ஒற்றுமைப்படச் செய்வார்.

## அசத்திய தீக்கை முறைகள் - குண்டமண்டலம் அமைத்தல்

ஆடம்பரமாக ஆனகுண்ட மண்டலங்கள்
நாடும் கிரமத்தால் நன்றாகக் - கூடுவித்து அங்கு
உண்டாம் திரவியம் நெய் உற்ற(அ)வையால் மந்திரத்தால்
உண்டான தேவதைகளால் 156

## ஆறு அத்துவாக்களையும் தூய்மை செய்தல்

உள்ள புவனத்து உறும் கன்ம போகம் உண்ண
உள்ளதனு உண்டாக்கி ஊட்டுவித்துஅங்கு - உள்ளது ஆம்
அத்துவா உண்டான அவ்விடத்திலே ஒடுக்கா
ஒத்த சிவ அக்கினியின்உள் 157

## விரதம் வைராக்கியம் முதலிய உண்டாகச் செய்தல்

அத்துவா ஆறும் அரிந்துஇட்டுச் சுட்டது எனப்
புத்தி தெளியப் புலப்படுத்தி - நித்தியம்அது
ஆனவிரதம் வைராக்கியம் கிரியை
ஆனது முன் ஆய் அர்ச்சனை 158

## வழிபாடு, தலப் பயணம் முதலியன மேற்கொள்ளச் செய்தல்

செய்ய நியமம் செபம் தானம் ஓமம் மிக்க
பொய்இல் தியானம் புகல் தீர்த்தம் - மெய்ம்மைச்
சிவத்தலங்கள் சேவித்தல் ஆதியா யாவும்
உவப்புடனே உற்று இயற்று என்றே 159

## சூதகங்களைப் பிராயச் சித்தத்தால் போகச் செய்தல்

*நன்றாய் அனுக்ரகித்து நல்ல குல ஆசாரம்அது*
*குன்றாமல் நின்று குறித்த அவருக்கு - இன்று ஆகா*
*தாம் என்ற சூதக(ம்) ஆதிப் பிராயச் சித்தத்தால்*
*போம் என்று போதித்துப் பின்* **160**

## குருலிங்க சங்கமத்தையே தெய்வம் என வழிபடச் செய்தல்

*குருலிங்க சங்கமமே தெய்வம்எனக் கொண்டுஅங்கு*
*உரிய உபசாரம் அவற்குப் - பொருள் நடைக்குத்*
*தக்கதுசெய் என்று அவற்குத்தான் உபதேசித்தல்என*
*மிக்க சிவ ஆகமம் செப்பும்.* **161**

குரு மிக அலங்காரமாகச் செய்யப்பட்ட மண்டபத்தில் சிவஅக்கினி வளர்ப்பதற்குப் பொருத்தமான குண்டம் முதலியவற்றை முறையாக அமைத்து அக்கினியில் ஓமம் செய்வதற்குரிய நெய் முதலிய பொருள்களையும் அமைத்துக் கொண்டு மந்திரங்களை ஓதி அவ்வத் தெய்வங்களை அழைத்து அங்கு நிலை கொள்ளச் செய்வார்.

பின்பு, மாணாக்கன் ஒவ்வொரு புவனத்திலும் நுகர்வ தற்குரிய வினைப்பயன்களை நுகர்வதற்குரிய உடம்புகளை மந்திரங்களால் உண்டாக்கி வினைப்பயனை நுகரச் செய்து இவ்வகையால் அத்துவாக்களை அது அது தோன்றிய இடத்தினிலே ஒடுங்கச் செய்வார்.

பின்பு, அங்கு வளர்க்கப்பட்ட சிவ அக்கினியில் ஆறு அத்துவாக்களையும் ஒடுக்கின கலைகளையும் இட்டு

எரித்து அவ்வத்துவாக்களால் உண்டான பாசபந்தத்தை அழிப்பார். இவ்வகையால் மாணாக்கனுடைய அறிவைத் தெளிவடையச் செய்வார்.

பின்பு, நாள்தோறும் பின்பற்றிச் செய்யக் கூடிய விரதம், வைராக்கியம், வழிபாட்டுச் சடங்குகளுடன் கூடிய அருச்சனை, நெறி முறைகள், மந்திரம் செபித்தல், தியானம் செய்தல், ஓமம் செய்தல், தானம் அளித்தல், புண்ணிய தீர்த்தம் ஆடுதல், சிவத்தலப் பயணம் செய்தல், அத்தலங் களில் சிவ வழிபாடு செய்தல் ஆகியவற்றை மகிழ்ச்சியுடன் செய்க என்று ஆணையிடுவார்.

பின்பு, குல ஒழுக்கத்தில் சிறிதும் தவறு வராமல் நடந்து கொள் என்று ஆணையிடுவார். இவ் வகையால் தவறின்றி நடந்து வரும் மாணாக்கனுக்கு, மேல் அதி தீவிர பக்குவம் உடையவர்க்குத் தீக்கையினால் சூதகம் முதலியன இல்லை யாகச் செய்தாற்போலன்றி, இவர்களுக்கு உண்டாகும் சூதகம் முதலியவற்றைப் பிராயச் சித்தம் செய்து போக்கிக் கொள்ளும் முறையையும் அறிவிப்பார்.

பின்பு, குருவினையும் சிவலிங்கத்தையும் சிவனடியார் களையும் சிவம் எனவே கண்டு வழிபட்டு அவர்களுக்குரிய உபசாரங்களைக் குறையின்றி உன் பொருள் வருவாய்க்குத் தக்கபடி செய்க எனக் கட்டளை இடுவார். இவ்வாறு அசத்திய தீக்கை முறையைச் சிவாகமங்கள் கூறுகின்றன.

## இத்தீக்கை செய்யப்படுவதற்கு உரியவர்

போகத்தர் பாலர் புகலும் தருணர் அவற்கு
ஏக மலபாகம் இசைவிக்க - வாகுஆகச்
சொல்லிய இத் தீக்கை எனச் சொல்லும் சிவாகமங்கள்
அல்லல் அறி அறி அம்மா. 162

பல நுகர்ச்சிகளை நுகரவேண்டிய விருப்பம் உள்ளவர்கள், இளவயதினர், இடைப்பட்ட வயதினர் போன்றவர்க்கே மலம் நீக்கிப் பக்குவம் உண்டாக்குவதற்குப் பொருத்தமாக இந்த அசத்திய தீக்கையைச் சிவாகமங்கள் சொல்லியுள்ளன என்பதை உன் பிறவித் துன்பம் நீங்கும்படி அறிவாயாக.

## சீவன் முத்தித்தன்மைக்கு உவமை

*சீவன் முத்தித்தன்மை செறிந்தவர்க்குப் பத்திஅது*
*தாஇல் உணர்வாய் உயிரைத்தான்விழுங்கி - ஆவிக்குஅன்று*
*ஆணவம்தான் ஆன்மாவுக்கு ஆனஅஞ்ஞானம் காட்டி*
*ஆணிஅறிவு அகற்றல்போல்* **163**

தொன்றுதொட்டே ஆணவமலம் ஆன்மாவுக்கு அஞ்ஞானத்தை உண்டாக்கி ஆன்மாவின் ஆணி என இருந்த அறிவை விழுங்க, உயிர் தோன்றாமல் ஆணவமே தோன்றினது போலப் பத்தியானது சீவன் முத்தித்தன்மை பொருந்திய உயிர்களின் உணர்வாய் நின்று, அவ்வுயிர் அறிவு முனைத்துத் தோன்றாமல் பத்தியே தோன்றுமாறு உயிரைத் தன்னுள் அடக்கி நிறைந்து நிற்கும். ஆவிக்கு - ஆவிப்பதாகும். உண்டு தெவிட்டி நிற்பதாகும்.

## ஆன்ம ஞானம்

*பொய்என்று அறியப் புலப்படும் ஞானம் பசுவின்*
*கைஒன்றும் ஞானம் தன் கண் ஆன - மெய் ஆகும்*
*சிற்சத்தியையும் இதுஎன்று அறியப் பற்றும்அது*
*கற்புடைய ஞானக்கடன்.* **164**

இதுவரையிலும் நான் என்று பற்றுச் செய்திருந்த மாயாகாரியமான உடம்பும் உலகமும் பொய் என்று அறிந்த பொழுது தோன்றுகின்ற ஞானம் பசுவினிடத்துப் பொருந்திய ஆன்ம ஞானம் ஆகும். அவ்வான்ம ஞானமே பின் தனக்குக் கண்போல் காட்டுகின்ற சிற்சத்தியையும் அறிந்து பற்றும். இதுவே அச்சிற்சத்தியினிடத்து மட்டுமே பற்றுச் செய்யும் கற்பினைத் தருகின்ற ஞானத்தின் முறைமையாகும்.

## சீவன்முத்தி அவத்தை பன்னிரண்டு

*சற்றும் தோன்றாமல் சதுர்ஆகியே விழுங்கி*
*உற்ற சிற்சத்தி உருஆகும் - மற்றைச்*
*சிவன்தானாய் நிற்கின்ற செல்வம் உணர்த்த*
*உவந்த அவத்தை ஐந்துஏழுஆம்.* **165**

ஆன்மாவின் அறிவு சிறிதும் தோன்றாதபடி அதனை விழுங்கிப் பொருந்திய சித்சத்தியே தனக்கு உருவமாக உடைய அச்சிவமேயாக ஆன்மா ஒன்றுபட்டு நிற்கும் பேறாகிய சீவன் முத்தி நிலையை உணர்த்துவதற்குப் பொருந்திய நிலைகள் பன்னிரண்டாகக் கூறப்படும்.

## காயரூபம், காயதரிசனம், காயசுத்தி

*காயம் பகையாகக் காணல் உருஆகும்.*
*காயம் உபகாரம் என்கை காட்சியாம் - காயம்எனும்*
*நாமம் மறைய நயந்தலிங்கமே தனுஅது*
*ஆய் அதுவே காயசுத்திஆம்.* **166**

தூலம், சூக்குமம். காரணம் என்னும் மூவகை உடம்பும் மாயாகாரியம். அவை மயக்க அறிவைச் செய்து ஆன்மாவைப் பந்தப்படுத்தும்; அறிவுப் பொருளாகிய ஆன்மா இவற்றின் வேறு; இவ்வுடம்புகள் அறிவற்றன; ஆதலின் இவை ஆன்மாவுக்குப் பகை என அறிவது காயரூபம். இருந்தாலும் ஞானத்தை அறிவதற்கும் ஞான நெறியில் நின்று அடியார் பணி, அரன் பணிகளில் நிற்பதற்கும் இவ்வுடம்புகள் துணை செய்யும் என்று அறிவது காய தரிசனம். இவ்வுடம்புகளுக்கு உடம்பு என்னும் பெயர் நீங்கும்படி உடம்புகளிலும் பொறிகளிலும் இலிங்கங்களை எழுந்தருளப் பண்ணிய பின் இதனைச் சிவமாகக் காண்பது காயசுத்தி.

## ஆன்மரூபம், சிவரூபம், ஆன்மதரிசனம், சிவதரிசனம்

கண்டலிங்கம் தன்உருவாய்க் காணுவது ஆன்மஉருஆம்
கண்டஅறிவு நமது ஆம்என்னக் - கண்டநிலை
காட்சிஅது கண்ட அதன்கண் கண்ஆம் சித்சத்தி என்னும்
காட்சி ஞானக் காட்சிஆம். 167

இலிங்கம் அணியப்பெற்றுத் தனது விருப்பம், அறிவு, செயல்களுக்கு இடமாக இருக்கும் உடம்பே நான் எனக் கண்டது ஆன்மரூபம். இதனுடன் இவ்வுடம்பில் இலிங்கம் அணியப்பெற்றதால் சிவமே நமக்கு உடம்பாய் இருந்து அறிவு விருப்பம் செயல்கள் நிகழ்வதற்கு இடமாக இருக்கிறது எனக் காண்பது சிவரூபம். இவ்வுடம்பையும் சிவத்தையும் இங்ஙனம் காணுகின்ற அறிவே நமது அறிவு எனக் காண்பது ஆன்ம தரிசனம். இங்ஙனம் காணும் அறிவின் உள் அறிவாய் இருந்து அறிவிப்பது இறைவனது சித்சத்தி எனக் காண்பது சிவதரிசனம்.

## சிவதரிசனத்தைத் தருவது சற்பத்தி

*ஆனசிற்சத்திஅது ஆனவடிவு எனவே*
*தான் உணர்ந்து நிற்கத் தகுதியாய் - யான் அறிந்தேன்*
*என்னும் அகந்தைஇன்றியே விளங்கும் சற்பத்தி*
*தன் உருவாயே விளங்கித் தான்.* **168**

ஆன்மாவாகிய என்னுடைய அறிவுக் கறிவாய் நிற்ப தாகிய சித்சத்தியே எனக்கு வடிவு என அறிந்து. அதில் தவறாது நடந்து கொள்ளும் தகுதியை எனக்குத் தந்து, அச் சிற்சத்தியை யின்றி யானே அறிந்தேன் என்னும் செருக்கு மேலிடாதபடி விளங்கி நிற்பது சத்பத்தி. அந்தச் சத் பத்தியும் ஆன்மாவுக்கு வடிவு ஆம்.

## நின்மல சாக்கிரம், நயிட்டாபத்தி

*என் உருவம் என்றஅது சாக்கிரம் வடிவு அன்று*
*என் அறிவுக்கு ஆன இனிது அறிவு - தன்னாலே*
*யான் அறிவதுஅன்றி ஒன்றும் யான் அறியேன்என்றதிடம்*
*தான் உணர்த்தும் பத்தி நயிட்டை.* **169**

சித் சத்தியே எனக்கு வடிவம் எனக் காண்பது நின் மல சாக்கிரம் எனப்படும். இதன் மேல் அச்சித் சத்தி எனக்கு வடிவு அன்று, என் அறிவுக்கு அறிவாக இருந்து காட்டு கின்றது; அதனை இன்றி யான் ஒன்றினையும் அறியேன் என்ற துணிவைத் தருவது நயிட்டாபத்தி எனப்படும்.

## நின்மல சொப்பனம், நின்மல சுழுத்தி, அவதானபத்தி

*அறிவு என்னக் காண்டல்அது சொப்பனம் ஆம்*
*அறிய அறிவிக்க இரண்டுஅல்ல - பிரிவு அற்றுக்*
*காட்டல் அவதானபத்தி காணில்இது சுழுத்தி*
*திட்டியஅச் சிற்சத்தி தான்* **170**

இங்ஙனம் அச் சித்சத்தி என் அறிவுக்கு அறிவாக இருந்து அறிவிக்கிறது எனக் கண்டது நின்மல சொப்பனம். இதன் மேல் அங்ஙனம் அறிவிக்கும் அறிவும் அறிகின்ற நானும் தனித்தனி இரண்டு பொருளல்ல என ஒற்றுமைப் பட்டுப் பிரிவின்றி நிற்கும் நிலையைத் தருவது நின்மல சுழுத்தி. இது அவதான பத்தி எனப்படும்.

## நின்மல துரியம், அனுபவ பத்தி

யானே என நிகழும் ஆன அனுபவத்தைத்
தான் உணர்த்தும் பத்தி அனுபவம்தான் - ஆன
துரியம் இது ஆகும்அறி சொற்றிடும் சிற்சத்தி
அரிய இதனுள் அழுந்தல்தான் 171

## நின்மல துரியாதீதம், ஆனந்த பத்தி

தோன்றல் துரியாதீதம் சொற்றிடும் சிற்சத்திஅதே
ஏன்ற அறிவு எல்லாம் இனிது அறியும் - தோன்றி
அறியேன் என நிகழ்வு இங்கு ஆகும் அது காட்டும்
உரிய ஆனந்தபத்தி ஓர். 172

அறிவிக்கும் சிற்சத்தியும் அறியும் நானும் இரண்டல்ல எனக் கண்ட அதன் மேல் அச்சிற் சத்தியேயான் என்னும் தன்மையைத் தருவது அனுபவ பத்தி. இந்நிலை நின்மல துரியம் எனப்படும்.

சொல்லப்பட்ட அச்சித்சத்தியே யான் எனக் கண்ட நிலையும் நீங்கி அச்சிச் சத்தியிலே அழுந்தி நிற்கும் நிலை நின்மல துரியாதீதம் எனப்படும். சொல்லப்பட்ட அச்சித் சத்தியே எல்லா அறிவும் தொழிலும் உடையது என்னும் நிலையைத் தருவது ஆனந்த பத்தி எனப்படும்.

## ஆன்ம சத்தி, சீவன் முத்தி, சமரச பத்தி

அவத்தை சகசம் அது ஆன்ம சுத்தி
சிவப் பொருளே யான் என்று உணரப் - பவிப்பது தான்
பத்தி சமரசம் ஆம்பார் அவத்தை உன்மனை மேல்
ஒத்து இது சீவன் முத்தி ஓர். 173

இங்ஙனம் கூறிய அவத்தைகள் இயல்பாக விளங்கும் நிலை ஆன்ம சுத்தி எனப்படும். இதனால் அச் சிவபரம் பொருளே யான் என்னும் உணர்வு பிறக்கும். இந் நிலையைத் தருவது சமரச பத்தி எனப்படும். இதன்மேல் துவாத சாந்தத் தலமாகிய உன்மனைகலையில் சிவபரம் பொருளை நேரே பெறுதல் சீவன் முத்தி நிலை எனப்படும்.

## சீவன் முத்தநிலை, தேனும் சுவையும் உவமை

சொல்லிடில்அச்சீவன்முத்தர் சொல்(ல)அரியஅப்பரத்தோடு
எல்லைஅற அத்துவிதமே ஆகிப் - புல்லி நிற்பர்
தேனும் சுவையும் செறிந்து அகலாவாறு அதுபோல்
ஏமம் பரிசன வேதி 174

## செம்பு பொன்னாதல் உவமை

பரிசித்துப் பொன்ஆக்கிப் பற்றும் களிம்பு
பரவக் கொடாமல் பரிசம் - விரவி ஒன்றுஆய்
நீங்காமைப் பொன்ஆகி நிற்பதுபோல் அப்பொருளோடு
ஆங்கு அத்துவிதம் ஆனார் 175

அச் சீவன் முத்தர்களின் நிலையைச் சொல்லப் புகுந்தால் அவர்கள் சொல்லுதற்கரிய பரம்பொருளின் வியாபகத்துடன் ஒன்றாகக் கலந்து தேனும் அதன் சுவையும் ஒன்றைவிட்டு ஒன்று பிரித்து அறிய முடியாதது போலப் பிரிப்பின்றிக் கலந்து நிற்பர் எனச் சொல்லுதல் வேண்டும்.

பொன்னும் பரிசனவேதியும்போல, பரிசனவேதி செம்பில் பரவி செம்பைப் பொன்னாக்கி, செம்பில் பற்றி யிருக்கும் களிம்பு இனி தலையெடுக்காதபடி தடுத்து விடுகிறது. அதனால் செம்பு பொன்னாகிப் பொன்னின் தன்மை நீங்காமல் நிற்பதுபோல் பரசிவத்துடன் அத்துவித மாகக் கலந்து நின்றவர், அப்பரசிவத்தின் தன்மையாகவே நிற்பர். அவரிடத்து ஆணவமலம் தலையெடுக்காது. அவர் மீண்டும் ஆன்ம நிலைமையை அடைவதில்லை. ஏமம் - பொன். பரிசனவேதி - செம்பில் பட்டு அதன் களிம்பைப் போக்கிப் பொன்னாகச் செய்யும் மருந்து.

## இனி, சடுத்தலம் சொல்லபபடும்

உண்ணும் பிராரத்தம் ஒன்றாம் சிவஅற்பிதமாய்
நண்ணும் வகையை நலமாக - எண்ணம்அறச்
சொற்ற சடுத்தலத்தின் தொன்மை எடுத்து உரைப்பாம்
பற்றும் பழக்கம்அறவே. 176

சீவன் முத்திநிலையை அடைந்த ஆன்மா இந்த உடம்பில் நுகர்வதற்கு எடுத்துக் கொண்டுவந்த வினை நுகர்ச்சி உள்ளவரை உடம்புடன் கூடி நின்று அந்நுகர்ச்சியைத் தன்னுடன் ஒன்றாகக் கலந்து நிற்கும் சிவத்துக்குப் படைத்துச் சிவப் பிரசாதமாக நுகரும் முறையினை விளக்கும் வகையில் இனி தொன்றுதொட்டு வரும் சடுத்தல இயல்பினை எடுத்து விளக்குவோம். இதனால் ஆன்மா தனக்கு வரும் நுகர்ச்சிகளை ஐம்பொறிகளின் வழியாக நுகர்ந்து வந்த பழக்கம் நீங்கிச் சிவலிங்கத்தின் வழியாக நுகரும் பழக்கம் உண்டாகும்.

## ஒரு தலம் என்பது பத்து வகையினை உடையது

அங்கம் மிக்கபத்தன் அரும்திரவியம் முகம் பின்
தங்கும் அத்தம் சத்தி தரும் இலிங்கம் - பொங்கு பத்தி
யோடு அற்பிதம் நன்மையுற்ற பிரசாதத்
தோடு உற்ற பத்து இவை ஆம்ஓர். 177

ஒரு தலம் என்பதில் அங்கம், பத்தன், திரவியம், முகம், அத்தம், சத்தி, லிங்கம், பத்தி, அற்பிதம், பிரசாதம் என்னும் பத்து வகை உள்ளன என்பதை ஆராய்ந்து அறிக.

## சிவனுக்கு மணம் என்னும் நுகர்ச்சியைப் படைத்தல்

*அங்கம் சிவபூமி ஆனசிவபத்தன் அயன்*
*பொங்கிய கெந்தம் பொருள்ஆகும் - இங்குஆம்*
*முகம் சத்தியோசாதம் அத்தம் சுசித்தம்*
*தகும் சத்தி நல்கிரியைதான்.* **178**

*ஆசாரலிங்கம் அரும்பத்தி சத்பத்தி*
*பேசுகின்ற பீதம் கெந்த அற்பிதம்ஆம் - பேசும்*
*பரமசிவன் என்று பகரும் மறைநாதன்*
*பரிவுடனே பற்றுதற்காக.* **179**

## சிவலிங்கத்துக்குச் சுவை என்னும் நுகர்ச்சியைப் படைத்தல்

*அங்கப் புனல் பத்தன் ஆம்மால் பொருள்இரதம்*
*அங்குமுகம் வாமதேவம்ஆம் - இங்கு உரைக்கும்*
*அத்தம் சுபுத்தி அரும்சத்தி ஞானசத்தி*
*ஒத்தலிங்கமோ குருலிங்கம்.* **180**

*பத்திநயிட்டை பகரின் ரச(ம்) அற்பிதமாம்*
*ஒத்தரச அற்பிதமாய் உற்(ற) அதனை - நித்தியம்ஆய்*
*உள்ளும் புறம்பும் அதுஆய் உற்றபரி பூரணம்ஆம்*
*வள்ளல் அருந்துதற்காக.* **181**

## இலிங்கத்துக்கு உருவம் என்னும் நுகர்ச்சியைப் படைத்தல்

*அங்கம்அது பத்தன் உருத்திரன்ஆம் ரூபம்அது*
*பொங்கு திரவியம்ஆம் போற்றும்முகம் - அங்குஆம்*
*அகோரம்நிர்அகங்காரம் அத்தம் இச்சாசத்தி*
*பகர்சிவலிங்கம் இலிங்கம்.* **182**

அவ்தான்பத்தி மிக்கரூப(ம்) அற்பிதம்ஆம்
நவம்ஆன ரூபஅற்பிதத்தால் - நவம்ஆன
சச்சிதானந்த சயம்புவண்ணா! நின்மலம்ஆய்
இச்சையுடன் வந்து இயல்புஆக. 183

## சிவலிங்கத்துக்கு ஊறு என்னும் நுகர்ச்சியைப் படைத்தல்

வாயுஅங்கம் மயேசன் பத்தன் பரிசம்அது
ஆயபொருள் தற்புருடம் அங்குமுகம் - தூய
சுமனம் அத்தம் ஆதிசத்தி சொல்லிடில் நல்லிலிங்கம்
கமைஉடைய சங்கம லிங்கம். 184

அரிய அனுபவம் என் பத்தி அது தான் ஆம்
பிரிவில் பரிச(ம்) அற்பிதம்தான் - உரிய (அ)தனைத்
தேடற்கு அரிய சிவனுக்கு அமலம் அதுஆய்
நாடிவந்து நிற்க நயந்து 185

## சிவலிங்கத்துக்கு ஒலி என்னும் நுகர்ச்சியைப் படைத்தல்

வானம்அங்கம் பத்தன் சதாசிவன்ஆம் பொருள்தான்
ஆனசத்தம் ஈசானம் மன்னும் முகம் - ஞானம்அது
அத்தம் மிக்கசத்தி பராசத்தி லிங்கம் அது
வைத்த பிரசாத லிங்கம் ஆம் 186

ஆனந்தபத்தி மிக்க சத்த(ம்) அற்பிதம் ஆகும்
தான் இனிய சத்த அற்பிதம் அது தான் - ஆன (அ)தனை
உன்(ன) அரியதான உரிய பரப்பிரமம்
அன்ன அமலம் அது ஆக 187

## ஐந்துவகை நுகர்ச்சிகளின் பயனை மகாலிங்கத்துக்குப் படைத்தல்

வந்த ஐந்து அற்பிதத்தை மன்னிய ஆன்மா அங்கம்
தந்த உமாபதிதான் பத்தன் - சந்த
இதயம் முகம் பாவ அத்தம் ஏற்றசிற் சத்தி.
மதி இலிங்கமோ மகாலிங்கம் 188

## ஐவகை நுகர்ச்சிகளையும் நின்மல சிவமே நவலிங்கமாக இருந்து ஏற்றுக்கொள்ளும்

சமரச பத்தி ஐந்தும் தான் அற்பிதமாம்
அமலப் பிரசாதம் ஆக - அமலனே
தான் மூன்று உடல் இலிங்கம் தான் மூன்றாய் உற்று அருந்தும்
ஆன் மூன்று உரு ஆதியை. 189

மூன்று உடல் - தூலம், சூக்குமம், காரணம். மூன்று உரு ஆதி - உரு முதலிய மூன்று - உரு, ருசி, திருப்தி.

## சடுத்தலம் இன்னது என்பது

ஆன ரூபம் ருசியும் ஆம் பரிணாமம் உறத்
தானே சிவன் அருந்தத் தான் அருந்தித் - தான் அறவே
நிற்பதுதான் ஆகும் நிகழும் சடுத்தலம் என்று
அற்புதமாய் ஆகமம் செப்பும். 190

ஆன்மா ஐம்பூதங்களின் பரிணாமமாகத் தனக்கு வந்த நுகர்ச்சிப் பொருள்களின் உருவம், சுவை, திருப்தி என்னும் மூன்றையும் சிவம் நுகருமாறு படைத்துப் பின் அவற்றைச் சிவப்பிரசாதமாகத் தான் நுகர்ந்து—படைத்து நுகர்கிறோம் என்ற நினைவும் அற்று—ஆன்ம போதம் நீங்கி—சிவத்துடன் ஒன்றுபட்டு நிற்பதே சடுத்தல அற்பிதம் என்று ஆகமங்கள் வியக்கத்தக்க வகையில் கூறுகின்றன.

## சடுத்தல அற்பிதம்

### ஆறு தலமும் பத்து விதமும்

177 முதல் 190 முடிய உள்ள வெண்பாக்களில் கூறப்பட்ட பொருள் விளக்க அட்டவணை

| தலம் | அங்கம் | பத்தன் | திரவியம் | முகம் | அத்தம் | சத்தி | லிங்கம் | பத்தி | அற்பிதம் | பிரசாதம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| பத்தன் | மண் | அயன் | மணம் | சத்தியோ ஜாதம் | சுசித்தம் | கிரியை | ஆசார லிங்கம் | சத்பத்தி | மணம் | மணம் |
| மயேசன் | நீர் | மால் | சுவை | வாமதேவம் | சுபுத்தி | ஞான சத்தி | குரு லிங்கம் | நயிட்டா பத்தி | சுவை | சுவை |
| பிரசாதி | நெருப்பு | உருத்திரன் | உருவம் | அகோரம் | நிரகங் காரம் | இச்சா சத்தி | சிவ லிங்கம் | அவதான பத்தி | உருவம் | உருவம் |
| பிராண லிங்கி | காற்று | மகேசன் | ஊறு | தத்புருஷம் | சுமனம் | ஆதி பத்தி | சங்கம லிங்கம் | அனுபவ பத்தி | ஊறு | ஊறு |
| சரணன் | வானம் | சதாசிவன் | ஒலி | ஈசானம் | சுஞ்ஞா னம் | பரா சத்தி | பிரசாத லிங்கம் | ஆனந்த பத்தி | ஒலி | ஒலி |
| ஐக்கியன் | ஆன்மா | உமாபதி | இதயம் | அதோமுகம் | சுபா வம் | சித் சத்தி | மகா லிங்கம் | சமரச பத்தி | ஐந்து நுகர்ச்சி யின் பயன் | ஐந்து நுகர்ச்சி யின் பயன் |

## ஐந்துவகை நுகர்ச்சிகளின் பயனை மகாலிங்கத்துக்குப் படைத்தல்

*வந்த ஐந்து அற்பிதத்தை மன்னிய ஆன்மா அங்கம்*
*தந்த உமாபதிதான் பத்தன் - சந்த*
*இதயம் முகம் பாவ அத்தம் ஏற்றசிற் சத்தி*
*மதி இலிங்கமோ மகாலிங்கம்* **188**

## ஐவகை நுகர்ச்சிகளையும் நின்மல சிவமே நவலிங்கமாக இருந்து ஏற்றுக்கொள்ளும்

*சமரச பத்தி ஐந்தும் தான் அற்பிதமாம்*
*அமலப் பிரசாதம் ஆக - அமலனே*
*தான் மூன்று உடல் இலிங்கம் தான் மூன்றாய் உற்று அருந்தும்*
*ஆன் மூன்று உரு ஆதியை.* **189**

மூன்று உடல் - தூலம், சூக்குமம், காரணம். மூன்று உரு ஆதி - உரு முதலிய மூன்று - உரு, ருசி, திருப்தி.

## சடுத்தலம் இன்னது என்பது

*ஆன ரூபம் ருசியும் ஆம் பரிணாமம் உறத்*
*தானே சிவன் அருந்தத் தான் அருந்தித் - தான் அறவே*
*நிற்பதுதான் ஆகும் நிகழும் சடுத்தலம் என்று*
*அற்புதமாய் ஆகமம் செப்பும்.* **190**

ஆன்மா ஐம்பூதங்களின் பரிணாமமாகத் தனக்கு வந்த நுகர்ச்சிப் பொருள்களின் உருவம், சுவை, திருப்தி என்னும் மூன்றையும் சிவம் நுகருமாறு படைத்துப் பின் அவற்றைச் சிவப்பிரசாதமாகத் தான் நுகர்ந்து—படைத்து நுகர்கிறோம் என்ற நினைவும் அற்று—ஆன்ம போதம் நீங்கி—சிவத்துடன் ஒன்றுபட்டு நிற்பதே சடுத்தல அற்பிதம் என்று ஆகமங்கள் வியக்கத்தக்க வகையில் கூறுகின்றன.

## சடுத்தல அற்பிதம்

### ஆறு தலமும் பத்து விதமும்

177 முதல் 190 முடிய உள்ள வெண்பாக்களில் கூறப்பட்ட பொருள் விளக்க அட்டவணை

| தலம் | அங்கம் | பத்தன் | திரவியம் | முகம் | அத்தம் | சத்தி | லிங்கம் | பத்தி | அற்பிதம் | பிரசாதம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| பத்தன் | மண் | அயன் | மணம் | சத்தியோ ஜாதம் | சுசித்தம் | கிரியை | ஆசார லிங்கம் | சத்பத்தி | மணம் | மணம் |
| மயேசன் | நீர் | மால் | சுவை | வாமதேவம் | சுபுத்தி | ஞான சத்தி | குரு லிங்கம் | நயிட்டா பத்தி | சுவை | சுவை |
| பிரசாதி | நெருப்பு | உருத்திரன் | உருவம் | அகோரம் | நிரகங் காரம் | இச்சா சத்தி | சிவ லிங்கம் | அவதான பத்தி | உருவம் | உருவம் |
| பிராண லிங்கி | காற்று | மகேசன் | ஊறு | தத்புருஷம் | சுமனம் | ஆதி பத்தி | சங்கம லிங்கம் | அனுபவ பத்தி | ஊறு | ஊறு |
| சரணன் | வானம் | சதாசிவன் | ஒலி | ஈசானம் | சுஞ்ஞா னம் | பரா சத்தி | பிரசாத லிங்கம் | ஆனந்த பத்தி | ஒலி | ஒலி |
| ஐக்கியன் | ஆன்மா | உமாபதி | இதயம் | அதோமுகம் | சுபா வம் | சித் சத்தி | மகா லிங்கம் | சமரச பத்தி | ஐந்து நுகர்ச்சி யின் பயன் | ஐந்து நுகர்ச்சி யின் பயன் |

ஐம்பூதங்களையே (உடம்பாக) இடமாக உடைய ஆன்மா சுசித்தம் முதலிய ஆறு அத்தங்களால் ஆறு இலிங்கங் களுக்கும் ஐந்து விடயங்களையும் அவையனைத்தின் பயனையும் சத்தியோஜாதம் முதலிய ஆறு முகங்களில் படைத்தல் வேண்டும். இங்ஙனம் படைப்பவர்களுக்கு முறையே பத்தன் முதலிய ஆறு பெயர்கள் உண்டு. சடுத்தலமும் அதன் வகையும் எனப்படுவது இதுவே; இங்ஙனம் படைக்கப்பட்டதை நின்மல சிவமானது தூலம் சூக்குமம், காரணம் என்னும் மூன்று உடம்புகளிலும்; ஐம்பொறிகள், இதயம் என்னும் ஆறு இடங்களிலும், ஆசாரலிங்கம் முதலிய ஆறு இலிங்கங்களாக இருந்து ஏற்றுக் கொண்டு அதனை ஆன்மாவுக்குப் பிரசாதமாக அருளும். இங்ஙனம் படைத்துப் பிரசாதம் கொள்ளுகிறோம் என்ற தன்மையும் தோன்றாமல் தற்போதம் அற்று நிற்றலே சடுத்தல அற்பிதம். இந்த அடிப்படையில் மேலே கூறப்பட்ட பதின்மூன்று வெண்பாக்களின் பொருளை இயைத்து உணர்ந்துகொள்ளுதல் வேண்டும்.

## ஆன்மாவும் சுத்த சிவத்தைப் போல நிற்கும்

நவலிங்கம்ஆய் அதனை நண்ணியும் நண்ணாது
சிவன் நின்றவாறு சிவனாய்ப் - பவம் அற்ற
ஆன்மாவும் அங்கு அவைகளாயும் இல்லாதே நிற்பன்
ஆன்மாவும் அத்துவிதம் ஆய். 191

நின்மல சிவம் ஒன்பது லிங்கங்களாக விரிந்தும் அவற் றுடன் அத்துவிதமாய்க் கலந்தும் கலவாது நிற்பதுபோல ஆன்மாவும் அவ்விலிங்கங்களுடன் அத்துவிதமாகக் கலந்தும் கலவாது நிற்கும்.

## சீவன் முத்தி நிலையின் பெருமை

ஈங்கு இதனை ஆகமங்கள் எல்லாம் எடுத்து உரைக்கும்
ஓங்குகின்ற உன்னா உணர்வு என்றும் - தூங்கல்அறத்
தூங்குவது என்றும் துணியாத் துணிவு என்றும்
ஓங்கும் அறியா அறிவு என்றும் 192

உன்னா - நினையாத;

நில்லா நிலை என்றும் நேசியா நேசம் என்றும்
கல்லாக் கதிகாணாக் காட்சி என்றும் - வல்லைராய்ச்
சொல்லாப் பொருள் என்றும் சோதியாச் சோகம் என்றும்
புல்லாப் புணர்ச்சி அது என்றும் 193

நடவா நடை என்றும் நாடாத நாட்டம்
முடியா முடிவு என்றும் முன்னும் - படி மீதில்
கேளாத கேள்விக் கிறியாக் கிறி என்றும்
வாழாத வாழ்வு என்றும் ஆம் 194

கிறி—பொய்யான விளையாட்டு.

பொருந்தாப் பொருந்தல் அற்றுப் பூசியாப் பூசை
அருந்தா அருந்தல் அகன்று - பொருந்தியே
சுத்த சிவம் ஆய்ச் சுகித்து இருப்பர் எப்பொழுதும்
வைத்த இது சீவன் முத்தி வாழ்வு. 195

சீவன் முத்தி நிலையினை அடைந்தவர்களின் இயல்பினைச் சிவாகமங்கள் நினையாத நினைவு. தூங்காத தூக்கம், துணியாத துணிவு, அறியாத அறிவு என்பன முதலியவாக எடுத்துக் கூறும். அவர் உலக நடையுடன் பொருந்தியும் பொருந்தாது நீங்கிச் சுத்த சிவம்போல் எப்பொழுதும் இன்பத்துடன் இருப்பர். இதுவே சீவன் முத்தியடைந்தோருடைய சிவானந்தப் பெருவாழ்வு.

## ஆசாரலிங்க சாயித்தம் பெற விரும்பினவன் கைவிடத்தக்கவை

*பொய்யாய் இருக்கின்ற பொய்உடல் அர்த்தப் பிராணத்து*
*ஐய அபிமானம் அகலாமல் - மெய் ஆகப்*
*பற்றுவிக்கும் தீய மனப்பாண்பம் பிராந்தி அது*
*சற்றும் அகலாதவை* **196**

*என் உடலம் என்மனைவி என்செல்வம் என் சாதி*
*என்னும் இவைக்கு உண்டாம் இயல் குணங்கள் -*
*சொன்ன அடைவு*
*எய்தும் வியாதி அபிமானம் கேடு வடு*
*எய்தும் பொழுது இயல்பாக* **197**

*தன் உயிரை மாய்த்தல் தனது அபிமானம் அழித்தல்*
*மன்உயிரைக் கொன்றிடுதல் வந்தக்கால் - நன்மானம்*
*காத்தான் என உலகம் கட்டுரைக்கும் புன்மொழியில்*
*ஆர்த்தாடும் தீ(ய) அபிமானம்* **198**

*நிறுத்தும் மனக்கோட்டம் நிவர்த்தி செய்து முன்னே*
*குறித்த அநாசாரம் எனக் கூறிப் - பிறித்துக்*
*கொலை களவு கள் காமம் கூறுபர நிந்தைக்கு*
*அலமரல் உற்று அஞ்சி அடைந்தோன்.* **199**

நிலையில்லாததாய் உள்ள உடம்பு, பொருள், பிராணன் இவற்றிடத்துப் பற்றுக் கொள்ளச் செய்யும் கொடிய மனமயக்கம் சிறிதும் நீங்காமையால் என் உடல், என் மனைவி, என் செல்வம், என் சாதி என்ற உணர்வுகள் தோன்றும். இந்த உடல் முதலியவற்றுக்கு நோயும் துன்பமும் இழிவும் வந்தபொழுது அதனைப் போக்க முயலுதல், அது முடியாதபொழுது தன் உயிரைத் துறத்தல்; கேடு முதலியவற்றுக்குக் காரணமானவரைக்

கொல்லுதல்; இவ்வகையால் குடும்பம் முதலியவற்றின் மானம் காக்க உயிரையும் கொடுத்தான் என்பனபோல வரும் புகழ் மொழிகளுக்கு ஆசைப்படுதல். இவற்றால் நிலையாக விளங்கும் மனக் கோணலை நேராக்கவேண்டும். நல்லொழுக்கமில்லாதவை என முன்னோர் பழித்துக் கூறியவற்றை - குறிப்பாக - கொலை, களவு, கள், காமம், பிறரைப் பழித்துரைத்தல் ஆகியவற்றைச் செய்வதற்கு அஞ்சி மனம் வருந்திக் கைவிட்டு ஞான குருவினை அடைதல் வேண்டும்.

## ஆசாரலிங்க சாயித்தம் பெற விரும்பினவன் கைக்கொள்ளத்தக்கவை

ஞான விபூதி நடு நாட்ட நன்மணி மெய்
ஆன குரு லிங்க சங்கமத்தோடு - ஆன அருள்
பாத உதகமும் பரிபூரணம் ஆக
ஓதும் பிரசாதமும் 200

என்னும் இவை எட்டும் எழில் உடைய தீக்கையினால்
பின்னம் அறப்பெற்றுப் பெருவாழ்வுஆம் - என்னும்
சதாசாரம் நீங்காமல் சார்ந்து அறிவு நிற்கும்
அது ஆஆன அன்பு தழைக்க 201

செய்யும் நல்ல சற்பத்தி செய்கை விளக்கி நிற்கச்
செய்யும் அறிவில் சுசித்த அத்தத்தில் - பொய் ஆன
மாசுஆம் அநாசாரம் மன்னும் நெஞ்சில் கிட்டாத
ஆசாரலிங்க சாயித்தியம். 202

ஞானத்தைத் தரும் திருநீறு. இறைவனுடைய நடுக்கண் ஆகிய நெற்றிக் கண்ணிலிருந்து தோன்றிய உருத்திராக்க மணி, மெய்ப்பொருளான குரு, லிங்கம், சங்கமம், திருவருள்

மயமான திருவடிநீர், பிரசாதம், திருவைந்தெழுத்து ஆகிய அட்டாவரணம் என்று தொகையாகச் சொல்லப்படும் இவ்வெட்டினையும் குருவினிடத்துத் தீக்கை முறையால் குறைவின்றிப் பெற்று உயர்ந்த வாழ்வில் நிலைபெற்று நிற்றல் வேண்டும். சதாசாரம் முதலிய ஆசாரங்களில் நீங்காமல் அன்பு மிகும்படியாகச் செய்கின்ற சற்பத்தி இக் குணங்களை விளக்கம் உறச் செய்து நிற்கும். இத்தகைய பக்குவம் உடைய மாணாக்கனுடைய அறிவில் சுசித்தம் என்னும் கையினால் - பொய்யும் குற்றமுமாகிய அநாசாரம் பொருந்திய மனம் உடையவர்களுக்குக் கிடைக்காத அரிய ஆசாரலிங்கத்தைத் தரிக்கச் செய்தல்வேண்டும்.

## குருலிங்க சாயித்தம்

நின்ற சதாசார நிலை தவறினும் கிருபை
ஒன்றும் சதாசார ரூபமதாய் - நின்ற
குருலிங்க சங்கமத்தைக் குன்ற உரைக்கும்
பெருநிந்தை கேட்ட இடத்தும் 203

தன் உடலம் ஈந்து அத்தவறு தடுத்திடவே
மன்னும் விரத வயிராக்கியம் தான் - முன்போல்
அபிமானம் செய்யும் அது நயிட்டாபத்தி
அபிமானம் ஆம் சுபுத்தியில் 204

ஞானக் கிரியைஅது தவறாதே நடத்தத்
தான்இனிய தாரணமாத் தான் நடத்த - ஞானம் அது ஆய்ச்
சாற்றும் குருலிங்க சாயித்தியம் என்றே
சாற்றும் அருள் ஆகமங்கள்தாம். 205

ஒருவன் தான் மேற்கொண்டு ஒழுகும் சதாசாரத்தில் தவறு நேர்ந்தாலும் அச்சதாசார வடிவமாக விளங்கும் குரு

லிங்க சங்கமத்தைப் பிறர் பழித்துரைக்கக் கேட்க நேர்ந்தாலும் உடம்பை நீத்தேனும் அப்பாவங்களைப் போக்கிக் கொள்ளவேண்டும் என்று விரதமும் வயிராக்கியமும் உடையவனாய் முன்பு உடம்பு, மனைவி, மக்கள், செல்வம், உற்றார் உறவினர்களிடத்துப் பற்றுக் கொண்டிருந்தது போல இப்பொழுது குரு லிங்க சங்கமத்திடத்துப் பற்றுக் கொள்ளுதல் வேண்டும். இந்த நிலையைத் தருவது நயிட்டாபத்தி. அந்த நயிட்டாபத்திக்கு இடமான சுபுத்தி என்னும் கையினால் ஞான நெறியும் கிரியை நெறியும் தவறாமல் நடைபெறும் பொருட்டு ஞானமயமாக உள்ளது எனக் கூறப்படும் குரு லிங்கத்தைத் தரிக்கச் செய்தல் வேண்டும்.

## சிவலிங்க சாயித்தம்

*நின்றவீர விரதம் நேர்ந்த அறிவின் முன்னம்*
*நின்ற தனுவின் நிகழ்பொறிகள் - நன்றாய்*
*விளங்க நடப்பதுபோல் மெய்எல்லாம் லிங்கம்*
*விளங்கும் விளக்கம் அதுவே.* 206

*சாக்கிரத்தும் சொப்பனத்தும் சந்தேகம் அற்று நிற்கத்*
*தாக்கும் மிக்கபத்தி அவதானத்தால் - ஊக்கும்*
*நினைவில் நிர்அகங்காரத்தால் இலிங்கம்*
*தனைஅகலாச் சாயித்தியம்.* 207

இப்பொழுது நிற்கும் வீரசைவநெறியில் நின்ற அறிவில் முன்னம் ஐம்பொறிகளும் விளங்கி நின்ற உடம்பில் இப்பொழுது சிவலிங்கம் விளங்கி நிற்கும்படி, சாக்கிரம் முதலிய அவத்தை வேறுபாடுகளிலும் ஐயம் இன்றிச் சிவலிங்கத்தை நீங்காது நிற்கும் நிலையைத் தரும் பத்தி அவதான பத்தியாகும். இத்தகைய மாணாக்கனுடைய அறிவில் நிர்அகங்காரம் என்னும் கையால் சிவலிங்க சாயித்தியம் செய்தல் வேண்டும்.

## சங்கமலிங்க சாயித்தம்

*நின்ற லிங்கமேனிஅது நித்திய ஞானம்தான்ஆய்*
*நின்று நிகழும் நிகழ்ச்சிஅது - குன்றா*
*அகந்தைஅது நிற்க அனுபவம்ஆம் பத்தி*
*திகழ்ந்து விளங்கும் திடம்.* **208**

*ஆனந்சுமனம் அதுஆம் அதீதத்தில் தாரணம்ஆம்*
*தான்இனிய சங்கமம்ஆம் லிங்கம்தான் - ஆனதுஎன*
*ஆகமங்கள் சொல்லும்என அம்மா நல்லோர் உரைப்பர்*
*ஏகமனத்தார் அறியவே.* **209**

மேலே கூறியவாறு சிவலிங்கம் விளங்கி நின்ற உடம்புடன் அழிவில்லாத ஞானமாகிய சித்சத்தியேதானாய் நின்று விளங்கும் நிலையில் இதுவரை நீங்காதிருந்த ஆன்க போதம் நீங்கும்படி அனுபவ பக்தி என்பது திடமாம விளங்கும். அந்த அனுபவ பத்தியே இடமாகச் சுமனம் என்னும் ஆகையால் இனிமையான சங்கமலிங்க சாயித்தம் செய்தல் வேண்டும் என்று ஞானிகள் அனைவரும் சிவத்துடன் ஒருமனப்பட்டு நின்றார் உணரும்படிக் கூறியுள்ளனர்.

## பிரசாதலிங்க சாயித்தம்

*அந்த அனுபவத்துஆம் லிங்கம் பிராணன் அங்கம்*
*என்றன்அறிவு என்னும் எழில்அதுதான் - அந்தம் அறக்*
*காட்டும் ஆனந்த பத்திகண்ஆம் ஞானக்கரத்தில்*
*நாட்டும் பிரசாத லிங்கம் நாடு.* **210**

மேற்கூறிய அனுபவ பத்தியால் இலிங்கம் உயிராகவும் அறிவு உடம்பாகவும் உணரும் நிலையை அளிப்பது ஆனந்த

பத்தி. இந்த ஆனந்த பத்தி இடமாக சுஞ்ஞானம் என்னும் கையால் பிரசாதலிங்க சாயித்தம் செய்தல் வேண்டும் என அறிக.

## மகாலிங்க சாயித்தம்

ஆனந்தம்ஆம் உணர்வின் பேதம்அது கண்டு இருமை
தான்அறவே காட்டும் தகுதியால் - ஆன
சமரச பத்திஅதுதான் விளங்கும் தன்மை
அமரும் அறிவோடுஅறி அம்மா. 211

தான்அயிக்கியம் ஆகிநிற்கும் தன்மைகண்டு தீதுஇனிமை
ஆனது அற்றுத் தன்அறிவுஆம் ஆவல்அற்றே - ஊனத்தோடு
ஆனசிறப்பு அற்று அசைவு அற்று அரும்பூசை
மானம்அற்று நிற்கும் பதம். 212

காட்டும் சமரசம்ஆம் பத்திஅது மற்று அறிவில்
ஆட்டும்அற்ற பாவம்அதுஆம் அத்தத்தால் - தீட்டும்
மகாலிங்க சாயித்ய வாழ்வுஆனது என்றே
மிகலிங்க அங்கத்தர் உரைப்பர். 213

மேலே கூறிய ஆனந்தபத்தி நிலையில் ஆன்மாவும் சிவமும் இரண்டென்னும் வேற்றுமை உணர்வு சிறிதே இருந்தது. அந்த வேற்றுமையும் நீங்கி இரண்டும் ஒன்றெனவே காட்டும் பத்திநிலை தோன்றும், அது சமரச பத்தி எனப்படும். இதனை விரும்பிய அறிவினால் அறிக.

இங்ஙனம் ஆன்மாவும் சிவமும் ஒன்றாக நிற்கும் நிலையில் முற்பிறவியின் வினைவயத்தால் வரும் தீமை நன்மை. அறிவு, ஆசை, சிறுமைபெருமை, வருத்தம்,

வழிபாடு, செருக்கு முதலிய குணம், தொழில் எல்லாம் நீங்கி நிற்கும் நிலை உண்டாகும்.

ஊனம் - சிறுமை, அசைவு - முயற்சி வருத்தம் மானம் - செருக்கு.

இந்நிலை சமரச பத்தி எனப்படும். இந்நிலையில் ஆன்ம அறிவில் சிவம் ஒன்றே தோன்றும். ஆன்ம நிகழ்ச்சி சிறிதும் தோன்றாது. இச் சமரச பத்தியிடமாக சுபாவம் என்னும் அத்தத்தால் மகாலிங்க சாயித்தம் செய்தல் வேண்டும் என்று இலிங்க அங்க இணைப்பினைப் பெற்று அனுபவிக்கும் ஞானிகள் கூறுவார்கள்,

## அங்கத்தலம் ஆறு

பத்தன் மயேசன் பிரசாதி பிராணலிங்கி
ஒத்த சரணன் ஐக்கியனோடு ஆறும் - உத்தமம் ஆம்
அங்கத்தலம் என்று அறையும் சிவ ஆகமங்கள்
பங்கப்பவம் அற அம்மா 214

பத்தத்தலம், மயேசத்தலம், பிரசாதித்தலம், பிராண லிங்கித் தலம், சரணத்தலம், ஐக்கியத்தலம் என்னும் ஆறினையும் உயர்ந்த அங்கத்தலம் என்று சிவாகமங்கள் ஆன் மாக்களை இழி நிலைக்குக் கொண்டு செல்லும் பிறப்பு நீங்கும்படியாகக் கூறும்.

## ஞானம், விரதம், சீலம்

உள்ளும் புறம்பும் ஒழியாது ஒரு பொருளே
நள்ளும் சடுத்தல ஞான விரதம் - விள்(ள) அரிய
மேலாம் அனுபவமா மிக்க மகாசீலம் அன்றி
ஏலா சட விரதமே 215

எங்கும் நிறைந்து உள்ளும் புறம்பும் நீங்காது நிற்கும் நின்மல சிவமே செறிந்த சடுத்தல லிங்கமாக இருக்கிறது என்றறிவது ஞானம். ஆன்மா தனக்கு வரும் புலன் நுகர்ச்சிகளை எல்லாம் அவ்விலிங்கங்களுக்குப் படைத்தன்றி நுகராத விடாப்பிடியான கொள்கை விரதம். அங்ஙனம் படைத்துப் பிரசாதம் கொள்வது பெரிய ஒழுக்கம். இத்த கைய நிலையன்றி ஏனைய ஞான விரத சீலம் எல்லாம் சடமே. அவை வீர சைவ நெறிக்குப் பொருந்த மாட்டா.

## சடவிரத சீலத்தை விட்டாலன்றி லிங்கஞான விரதசீலம் உண்டாகாது

*சட விரத சீலம் எனும் சற்கற்ப காயத்து*
*உடன் அகலா ஞானம் உரைக்கும் - திடம் அதுவும்*
*இல்லை இல்லை என்று மறை எல்லாம் சொ(ல்)லும்உவமை*
*வல்லபமோடே உரைப்பம்ஆல்* **216**

இடப் பொருள்களைப் பற்றி நிகழும் அறிவு, கொள்கை, ஒழுக்கம் ஆகியவை மாயா காரிய உடம்பைப் பற்றி வரும் நினைவும் வேறுபாட்டு உணர்வுமாய் நிகழ்வன. இவற்றால் சிவத்தைப்பற்றி வரும் நீங்காத ஞான, விரத, ஒழுக்கம் உண்டாகாது என்பது உறுதி என ஆகமங்கள் கூறுகின்றன. எனவே சட விரத சீலத்தை விட்டவர்க்கே ஞானம் உண்டாகும். இதற்குப் பின்வரும் எடுத்துக்காட்டு களைத் திடமாகக் கூறுவோம்.

## பிரமசரியத்தை விடாதவனுக்கு இல்வாழ்க்கை இன்பம் வராது

*பிரம சரிய தன்மம் பேராமல் வாழ்க்கைக்கு*
*உரிய மனையாளை அன்றி ஓகோ - பருகும் இன்பம்*
*ஆக உபதேசத்தால் ஆம் விரத சீல சடர்*
*மோகம் இலா ஞானம் உறுவார்.* **217**

பிரம சரிய ஒழுக்கத்தை நீங்காமலும் இல்வாழ்க்கைக்கு உரிய மனையாளைத் தேடிக் கொள்ளாமலும் இருப்பவனுக்கு இல்லின்பத்தை எடுத்துச் சொன்னால் இன்பம் உண்டாகாது. அவர்களுக்கு இல்லின்பம் உண்டாகுமாயின் சட விரத சீலம் விடாதவர்க்கும் ஞானம் உண்டாகும்.

## இல் வாழ்க்கையை விடாதவனுக்கு சந்நியாச அனுபவம் வராது

மனை வாழ்க்கை தன்மம் முற்றும் மாயாது ஒருவன்
இனிய சந்நியாசத்தை எய்தின் - வினவியிடும்
காய விரதம் எனும் கட்டு இருக்க ஆன்மாவுக்கு
ஏயும் சிவஞானமே. 218

இல் வாழ்க்கைக்கு உரிய ஒழுக்கத்தை முழுவதுமாக விட்டு நீங்காத ஒருவனுக்கு இனிமையான சந்நியாச அனுபவத்தை எடுத்துச் சொன்னால் அவ்வனுபவம் வருமாயின் மாயா காரியமாகிய உடம்புபற்றி வரும் சட விரத சீலத்தை விடாதவனுக்கும் சிவஞானம் பொருந்தும். இல் வாழ்வானுக்குச் சந்நியாச இன்பம் உண்டாகாது. சட விரத சீலனுக்குச் சிவ ஞானம் உண்டாகாது.

## குடீசக சந்நியாசத்தை விடாதவனுக்குப் பரமஹம்ச சந்நியாச அனுபவம் வராது

ஆன கன்ம சந்நியாச தன்மவன்மக் கட்டுடனே
தான்அப் பரமாங்ச சந்நியாச - ஞானம் அது
வந்து ஒருவர் போதிக்க வந்தக்கால் சீலனுக்குப்
பெந்தம் அறா ஞானம் பெறும். 219

சடங்கு முதலிய கிரியைகளைச் செய்து கட்டு நீங்கா திருக்கின்ற குடீசகசந்நியாசிக்கு ஒருவன் எல்லாக் கிரியை களையும் முற்றத்துறந்த பரமஹம்ச சந்நியாச நிலையை உபதேசித்தால் அவ் அனுபவம் உண்டாகாது. குடீசக நிலையை விட்டு நீங்காதவனுக்கும் பரமஹம்ச நிலை வருமானால் சடவிரத சீவனுக்கும் பந்தம் அற்றுச் சிவஞானம் உண்டாகும்.

குடீசகன் - உலகியலின் நீங்காது வழிபாட்டுக் கிரியை களைச் செய்துகொண்டு சந்நியாசியாக இருப்பவன் - இது சந்நியாசத்தின் முதல் நிலை. பரமஹம்சன் - உலகியலை முற்றத் துறந்து சந்நியாசத்தில் இருப்பவன் - இது சந்நியா சத்தின் முடிந்த நிலை.

ஆச்சிரம தன்மம் முற்றுமாய் இருந்த காயம்அதே
ஆச்சிரம தன்மம்எல்லாம் அற்றுநின்ற - தேசுபெறும்
கன்மவிரதம் எ(ன்)னும் கட்டுவிடாலிங்கம் அதுஆம்
வன்மம்உற ஞானம்வரும். 220

ஒருவனுக்கு பிரமசரியம் முதலிய நான்கு ஆசிரமங் களுக்குரிய ஒழுக்கத்தை முழுவதுமாய்ப் பற்றிக் கிடந்த உடம்பே பின் பக்குவப்பட்டு அவனை அறியாமலே ஆசிரம ஒழுக்கம் நீங்கி ஞானம் உண்டாகும். அதுபோல சடவிரத சீலம் என்னும் கட்டுவிட்டு இலிங்க விரத ஒழுக்கத்தில் அழுத்தம் உண்டானால் சிவஞானம் உண்டாகும்.

விடா - விட்டு, வன்மம் - அழுத்தமான பற்று.

வர்ணாசிரம தன்மம் வல்வினை என்றே துறக்க
நண்ணும் விவேகம் இழுக்கா நண்ணுமோ-உள் நிறையாப்
பேத விரத லிங்கம் பேதமாப் பூசிக்கப்
போதல் இகழ்வோ புகல் 221

நால்வகை வருணம், நால்வகை ஆச்சிரமம் இவற்றுக் கேற்ற ஒழுக்கமெல்லாம் வினைப்பயன் நுகர்ச்சியே யாகும் என்று அறிந்து அவற்றைக் கைவிட வேண்டும் என்ற உயர்ந்த ஞானம் பெறுதல் குற்றமோ? குற்றம் ஆகாது. அதுபோல அறிவில் ஞான நிறைவு இல்லாமல் சிவலிங்கத் தைப் பேதமாக வழிபட்டு வந்த நிலையில் நின்று பின் ஞானத்தால் அதனைத் துறந்து அபேதமாக வழிபடும் வீர சைவ நிலையில் புகுதல் குற்றமோ? குற்றம் ஆகாது.

ஆனவன்ன ஆச்சிரமக் கட்டுவிட்டான் மேலானது
ஆன சிவஆச்சிரமத்து ஆம்சீலம் - ஆன எல்லாம்
கைவிட்டால் லிங்கம் அந்த லிங்க விரதம் அது ஆம் 222
மெய்யாம் சடுத்தலமே மெய்.

மேலே கூறப்பட்ட நால்வகை வருணத்தையும் நால் வகை ஆச்சிரமத்தையும் விட்டுத் துறந்தவர்களே மேலானது என்று சொல்லப்படும் சிவ ஆச்சிரமத்தை அடைவர். அது போல சட விரத சீலம் எல்லாம் விட்டுத் துறந்தவர்களே மெய்யான லிங்க விரத சீலத்தை அடைவர். இவர்கள் பெறும் சடுத்தல லிங்க அனுபவமே மெய்யான அனுபவம்.

உண்மை முற்றும்.

## நூலாசிரியர் பெயர், நூல் வந்தவழி முதலியன

திங்கள் அணி சிவன் அருள் செய் வாதுள ஆகமம்
அதனில் திகழ் சாரத்தை
எங்கள் பவப்பிணி தீர்க்கத் திரட்டி அத்துவித வெண்பா
என நன்கு ஈந்தான்
துங்கம் உறும் மெய் கண்டான் சந்ததிக்கு ஓர் தீபம்
எனத்துதி பெற்று ஓங்கித்
தங்கு அருணைத் திருத்துறையூர்ச் சிவப்பிரகாசப்
பெரும் பேர் தரித்துளானே (1)

உயர்ச்சி மிக்க மெய் கண்ட தேவருடைய திரு மரபினை விளக்கம் செய்யும் தீபம் எனப் புகழ் பெற்றுச் சிறந்து விளங்கித் திருவண்ணாமலையிலும் திருத்துறையூரிலும் எழுந்தருளியுள்ள சிவப்பிரகாச சுவாமிகள் என்னும் பெயருடையார் சந்திரனைச் சடையில் அணிந்த சிவபரம் பொருள் அருளிச் செய்த வாதுளாகமத்தின் சாரத்தைத் திரட்டி எங்கள் பிறவிப் பிணி தீரும்படி அத்துவித வெண்பா என்னும் பெயரால் நன்கு ஆக்கிக் கொடுத்தார்.

செய்ய திருவாவடு தண் துறை நமசிவாய குரு தேசி
தோத்தமன்
துய்யகர சாதனனாய் அபிடேகம் திருநாமம்
சூட்டப் பெற்றோன்
ஐயதில்லை அம்பலவன் பொருட்டாய் அத்துவித சைவ
அங்கலிங்கம்
தையல் பங்கன் சொற்படியே தரித்த சிவப்பிரகாசத்
தவத்தோன் மாதோ. (2)

செம்மை மிக்க திருத்தலமாகிய திருவாவடுதுறையில் எழுந்தருளியுள்ள குரு மூர்த்திகளில் மேலான குருமூர்த்தியாகிய நமசிவாய தேசிகர் திருக்கரத்தினால் அபிடேகமும் தீக்ஷா நாமமும் சூட்டப்பெற்றவரும், அழகிய தில்லையம்பலவாணனின் நாள் வழிபாடு, சிறப்பு வழிபாடு முதலியன தடையின்றி நடைபெறச் செய்வதற்காக அவ்வம்பலவாணன் அருளிச் செய்த திருவாக்கின்படியே அத்துவித சைவ அங்கலிங்கம் அணிந்தவரும் பெருந் தவத்தினால் மிக்கவருமாகிய சிவப்பிரகாச சுவாமிகள் இந் நூலைச் செய்தருளினார்.

குறிப்பு : இப் பாடல்களில் கூறப்பட்ட நிகழ்ச்சிகளை நூலாசிரியர் வரலாறு என்னும் பகுதியில் காணலாம்.

அத்துவித வெண்பா மூலமும் உரையும்

முற்றுப்பெற்றன.

அருள்மிகு துறையூர்ச் சிவப்பிரகாச சுவாமிகள் திருவடி வாழ்க

அருள்மிகு சாந்தலிங்கப் பெருமான் திருவடி வாழ்க

# அத்துவித வெண்பா முதற் குறிப்பு அகர நிரல்

[எண் வெண்பாவின் எண்ணைக் குறிக்கும்]

## பொது

## உண்மை

## எமது வெளியீடுகள்

கொலை மறுத்தல்

வைராக்கிய சதகம்

வைராக்கிய தீபம்

அவிரோத உந்தியார்

அவிரோத உந்தியார் (ஆங்கிலம்)

கொலை மறுத்தல் (உரைநடை)

சாந்தலிங்கர் பிள்ளைத் தமிழ்

ஆங்கிலப் பாமகள்

புறப்பாட்டுரை

கொங்கு மண்டல சதகம்

அறுவகை இலக்கணம்

எங்கள் நாட்டுப்புறம்

கொங்கு மண்டல சதகங்கள்

கொங்கு நாட்டு வரலாறு

ஞான அம்மானையும் அகவல்களும்

தவத்திரு சாந்தலிங்க அடிகளார் திருமடம்

பேரூர் கோவை 641010